# ஸ்ரீ ராமாநுஜன் 248, 249.







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ: P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 21 | ஸௌம்யஹு ஆவணி, புரட்டாசி 1969 ஆகஸ்டு, ஸெப்டம்பர் | ஸஞ்சிகை 8, 9 |
|---|---|---|


நாற்றெட்டுத் திருப்பதியந்தாதி

## 17. திருக்கண்ணபுரம்.

பேறு தரினும் பிறப்பிறப்பு நோய்மூப்பு
வேறு தரினும் விடேன்கண்டாய்—ஏறுநீர்
வண்ணபுரத் தாயென் மனம்புகுந்தாய் வைகுந்தா
கண்ணபுரத் தாயுன் கழல். (17)

| | | | |
|---|---|---|---|
| ஏறு நீர் வண்ணம் புரத்தாய் | மேன்மேலு மேறுகின்ற நீரையுடைய கடலின் நிறம் போன்ற நிறமுடைய திருமேனியை யுடையவனே! | | (நீ அடியேனுக்கு) |
| | | பேறு தரினும் | பரம புருஷார்த்தமான முக்தியைக் கொடுத்தாலும் |
| என் மனம் புகுந்தாய் | எனது நெஞ்சிற் குடிகொண்டிருப்பவனே! | வேறு பிறப்பு இறப்பு நோய் மூப்பு தரினும் | அதற்கு மாறாக ஜனன மரண வ்யாதி ஜராமயமான ஸம்ஸ்ருதியையே கொடுத்தாலும் |
| வைகுந்தா | —ஸ்ரீவைகுண்டபதியே! | | |
| கண்ண புரத்தாய் | திருக்கண்ணபுரத்தெம் பெருமானே! | உன் கழல் விடேன் | உனது திருவடிகளை விட்டு நீங்கமாட்டேன், |

* * *—"திவி வா புவி வா மமாஸ்து வாஸோ நரகே வா நரகாந்தக! ப்ரகாமம், அவதீரித சாரதா ரவிந்தௌ சரணௌ தே மரணேபி சிந்தயாமி." என்ற முகுந்த மாலைக்கு ஒப்பானது இச் செய்யுள். ஏறுநீர்வண்ண புரத்தாய்= கடல் வண்ணனே! என்றபடி; புரம்-பட்டினம்; ஆன்மாவுக்கு இருப்பிடமான உடல் என்றதாகி, கடல் நிறத்தை யொத்த திருமேனியையுடையவனே! என்றதாயிற்று. இனி, ஏறு நீர்வண்ண! என்று பிரித்துத் தனி விளியாக்கி, புரத்தாய்! என்று தனி விளியாக்கியுரைக்கலா மென்பாருமுளர்; அப்போது, ப்ரஹ்மபுரத்தில் [ஹ்ருதய கோசத்தில்] உறைபவனே! என்றதாம். ... ... ... (17)



# ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி எம்பெருமானார் ஜீயர்ஸ்வாமி.

ஆழ்வார் திருநகரியில் சதுர்வேதிமங்கலம் என்கிற அக்ரஹாரத்தில் எம்பெருமானார் ஸன்னிதி மிக்க சிறப்புடன் விளங்குவது ப்ரஸித்தம். மணவாள மாமுனிகள் க்ருஹஸ்தாச்ரமியாய்த் திருவாய்மொழிப்பிள்ளையை ஆச்ரயித்தபோது அவர் ப்ரஸாதித்தருளின பவிஷ்யதாசார்ய விக்ரஹமென்று வ்யபதிஷ்டமான எம்பெருமானார் திருக்கோலம் இந்த சதுர்வேதி மங்கலத்தில் மாமுனிகளால் ப்ரதிஷ்டிதமாகி ஆராதிக்கப் பட்டு வருகிறதென்றும் இந்த எம்பெருமானார் விஷயமாகவே ஸ்வாமி யதிராஜ விம்சதி யருளிச்செய்தா ரென்றும், இவ்விஷயம் விம்சதியி லுள்ள *ஸ்ரீமந் யதீந்த்ர! தவ திவ்ய பதாப்ஜ ஸேவாம் ஸ்ரீ சைலநாத கருணாபரிணாமதத்தாம், தாமந்வ ஹம் மம விவர்த்தய நாத! தஸ்யா: காமம் விருத்த மகிலஞ்ச நிவர்த்தய த்வம்* என்கிற சுலோகத்தினல் விசதமென்றும் பெரியார் பணிக்கக் கேட்டிருக்கை. ஆதிநாதப்பெருமாள் நம்மாழ்வார் தேவஸ்தானத் திற்கு இஃது உள்ளீடாயிருக்கச் செய்தேயும் எம்பெருமானார் தேவஸ்தான மென்றும் வழங்கப்பட்டு வருகின்றதிது.



தற்காலம் இவ்விடத்து மடாதிபதியாக விளங்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான ஜீயர் ஸ்வாமி இங்கே ஸேவை ஸாதித்தருளாநின்ருர். ஜ்ஞானுஷ்டான ஸம்பன்னரான ஸ்வாமி பகவத் ராமாநுஜ கைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தரராய் நீடூழி வாழ்ந்தருளி எண்டிசையும் புகழோங்கி விளங்கவேணும். *



# ஸஹ்ருதய ஹ்ருதயோல்லாஸம்.

ஸ்ரீவைஷ்ணவ சிந்தாமணியின் இரண்டாம்பகுதி ஆரம்பமாகிறது. இதன் முதற்பகுதியைப் பெற்று வாசித்தவர்களில் தங்களுள்ளத்தில் தோன்றிய உகப்பின் மிகுதியை வெளியிட்டு நமக்குக் கடிதமெழுதாதவர்கள் மிகச்சிலரே. தினப்படியாகக் கடிதங்கள் வந்துகொண்டே யிருக்கின்றன. ஒரேவிதமான விஷயமன்றிக்கே பலவகைப்பட்ட விஷயங்கள் வெளிவந்திருப்பதனால் *லோகோ பிந்நருசி:* என்ற கணக்கிலே ஒவ்வொருவர் ஒவ்வொருவிஷயத்தை ரஸித்து உகப்பைத் தெரிவித்து வருகிறார்கள். பெரும்பான்மையாக ஜீவாத்ம பரமாத்ம போகக் கட்டுரையிலும் சென்னை ஷண்மதஸபைக் கட்டுரையிலும் தம்தம் ஸந்தோஷத்தை விளக்கியுள்ளார்கள்.

கான்பூரிலிருந்து, பிரபலஸம்ஸ்க்ருதபண்டிதர் ஒருவர் திருவேங்கடமுடையானை ஸேவிக்கவிரும்பித் திருமலைக்கு வந்திருந்தார். கீழ்த்திருப்பதியிலுள்ள வித்வான்களில் சிலரோடு அவர் உரையாடுகையில், ஹிந்தியில் நல்ல பரிசயமுள்ளவொருபண்டிதர் ஜீவாத்ம பரமாத்மபோகக் கட்டுரையின் கருத்துக்களைச் சிறிது எடுத்துரைத்தாராம். அதைப் பூர்த்தியாகக் கேட்டுணர விரும்பி அந்தபண்டிதரை 'வரிவரியாக வாசித்து (ஹிந்தியில்) சொல்லவேணும்' என்று கோரினாராம். அவர் ஏதோ தெரிந்தவளவு சொன்னாராம். பிறகு என்னோடு நேரில் பேச விரும்பிய அந்த கான்பூர்ப்பண்டிதர் காஞ்சீபுரத்திற்கு வந்து என்னைச்சந்தித்து, திருப்பதியில் நடந்த செய்தியைச் சொல்லி "அந்த ஜீவாத்ம பரமாத்ம போக வியாஸத்தை அப்படியே ஸம்ஸ்க்ருதத்தில் எழுதித்தரவேணு"மென்று விரும்பினர். எனக்கும் மிகுந்த உத்ஸாஹமுண்டாயிற்று. அன்று ஆனிதன்னிற் சோதிநன்னாள். பெரியாழ்வார் சாத்துமுறை. "ஸன்னிதிக்குச் சென்று பெருமாளை ஸேவித்து வாரும்; அதற்குள் எழுதிவைக்கிறேன்" என்று சொல்லி அவரை ஸன்னிதிக்கு அனுப்பிவிட்டு எழுதத் தொடங்கினேன். கோவிலுக்குச் சென்றவர் உடனே திரும்பிவந்துவிட்டார்—"கோவில் குளத்தில் ஏதோ ப்ரேதமாம்; பிற்பகலில்தான் பெருமாள் ஸேவைகிடைக்குமாம்" என்றார். பெருமாள் நமக்குச் சிறிது அவகாசமளித்தார் போலுமென்றுகொண்டு விரிவாகவே அதனையெழுதிக் கொடுத்தேன். அவரும் அதைப் பாடமாகவே கேட்டு மகிழ்ந்து 'இதை வைதிகமநோஹராவில் வெளியிடலாமோ?' என்றார். ஓமென்றிசைந்து அங்ஙனமேசெய்தேன். மநோஹராக்ராஹகர்களான ஸம்ஸ்க்ருதபண்டிதர்கள் (நமது நாட்டினரும்) அதையநுபவித்துக்கொண்டிருக்கிறார்கள். ... ... ... *

## ஸ்ரீமந்நாதமுனிகளைப்பற்றி ஆளவந்தாரும் பட்டரும்.

சிந்தாமணியின் முதற்பகுதி வெளிவந்தபிறகு இடையில், பெரியாழ்வார், வடக்குத் திருவீதிப்பிள்ளை, ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார், ஆண்டாள் ஆகிய ஐவருடைய மஹோத்ஸவங்கள் நடைபெற்றிருக்கின்றன. ஐவரைப்பற்றியும்

யதாசக்தி குணுநுபவம் பண்ணக்குதூஹலமெழுகின்றது. முன்னம், ஆனி அநூராதா நக்ஷத்ரமாகிய இன்று (27-6-69) வெள்ளிக்கிழமையுங் கூடினதால் பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் மாலை ஆறு மணிக்குப் புறப்பாடு கண்டருளி இரவு பத்து மணிவரையில் நம்மாழ்வார் ஸன்னிதியில் திவ்யகோஷ்டி தலைக்கட்டா நிற்கையில் ஆழிமழைக்கண்ணன் சிறிது வர்ஷிக்க, அப்போது நாதமுனிகள் வர்ஷித்தபடியை பட்டர் அருளிச்செய்திருந்தது நினைவுக்குவர, அந்த நினைவு தூண்ட இதனை விஜ்ஞாபிக்கிறேன். நாதமுனிகள் என்ன வர்ஷித்தாரென்னில்; பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஆசார்யவந்தன ப்ரகரணத்தில் நாதமுனிகளுக்கு இட்டச்லோகம்—

> ''நௌமி நாதமுநிம் நாம ஜீமூதம் பக்த்யவக்ரஹே,
> வைராக்யபகவத்தத்வஜ்ஞாந பக்த்யபிவர்ஷுகம்''

என்பது. இதில் நாதமுனிகளை ஒரு மேகமாக ரூபித்து, பக்திப்பஞ்சம் மலிந்த காலத்தில் ஞானபக்தி விரக்திகளை அந்தமேகம் எங்கும் வர்ஷித்ததாக வருளிச் செய்யப் பட்டது. நாதமுனிகளைப் பற்றி முதன்முதலாக அருளிச் செய்தவர் ஆளவந்தார். அவர் தாமருளிய மூன்று சுலோகங்களில் முதலது—

> '' நமோ சிந்த்யாத்புதாக்லிஷ்டஜ்ஞான வைராக்யராசயே,
> நாதாய முநயே அகாத பகவத் பக்தி ஸிந்தவே''

என்பது. இதில் நாதமுனிகள் பக்கலிலே ஜ்ஞான பக்தி விரக்திகள் புஷ்கலமாயிருந்ததாக வருளிச் செய்யப்பட்ட தத்தனை. ஒரு மஹானை தனிகர் என்று வருணிப்பது சிறந்ததா? உதாரர் என்று வருணிப்பது சிறந்ததா? என்று விசாரம் வரின், தனிகத்வ வர்ணனத்திற் காட்டிலும் ஔதார்ய வர்ணனமே சிறந்ததென்று தேறும். வாயைத் திறந்து பிறர்க்கு ப்ரவசனம் பண்ணுதவர்கள் எவ்வளவு கல்வி கற்றவர்களாயிருந்தாலும் அவர்களை வித்வானென்பர்களோ? பூலோக குபேரனென்னும்படி அளவுகடந்த தனம் படைத்திருந்தாலும் க்ருபணரைத் தனிகரென்பரேர? ஔதார்யத்தோடு கூடிய தனிகத்வமே ப்ரசம்ஸநீயமாகும், ஆளவந்தார் நாதமுனிகளை ஞானபக்தி விரக்திச் செல்வம் மிக்க தனிகரென்ருர். வெறும் தனிகரல்லர், ஔதார்யம் மிகுந்தவ ரென்ருர் பட்டர்.

ஸ்ரீரங்கநாதரென்று திருநாமமிடப் பெற்றிருந்த ஆசிரியர் நாமைகதேசக்ரஹண ரீதியில் நாதமுனிகளென வழங்கப்பட்டாரென்று ஸ்தோத்ர பாஷ்யத்திலுள்ளது. கூரத்தாழ்வானருளிச் செய்த குருப்ரம்பரா ஸாமாந்யத் தனியனை *லக்ஷ்மீநாத ஸமாரம்பாம் நாதயாமுந மத்யமாம், அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்* என்னும் சுலோகத்தின் ஸந்நிவேசம் வெகு அற்புதமானது. லக்ஷ்மீநாதனை எம்பெருமானைத் தொடக்கத்திலே கொண்டு, நாதமுனிகளையும் ஆளவந்தாரையும் இடையிலே கொண்டு, எம்பெருமானரை முடிவிலே கொண்டதான குருபரம்பரையைவணங்குகிறேனென்பது இதன் பொருள். முன்னிரண்டு பாதங்களில் நாமநிர்தேசம் பண்ணினது போல மூன்ருவது பாதத்திலும் நாமநிர்தேசம் பண்ணியிருக்கலாம்; (அதாவது) *ராமாநுஜார்ய பர்யந்தாம்*

[redacted]

என்று இட்டிருக்கலாம். அப்படி யிடாதது ஆழ்வானுடைய பரமசாதுர்யம். அதாவதென்னென்னில்; ராமாநுஜார்ய பர்யந்தா மென்றால் எம்பெருமானாரள விலே நின்றுவிடும் இவ்வநுஸந்தானம். ஆழ்வானுடைய அதிவிசாலமான திரு வுள்ளத்தின் போக்கு மிக அதிசயிக்கத் தக்கது. ஸூர்ய சந்திரர்களுள்ள வரை யில் ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹம் அநுஸந்திக்க வேண்டியதான இந்தத் தனியனில் அஸ்மதாசார்யபர்யந்தாம் என்றது அவரவர்களினுடைய ஆசார்யரைத் தொடும் படியாக வன்றோ அமைந்தது.

*ஆசார்ய தேவோ பவ* என்றும் *ஆசார்யவாந் புருஷோ வேத* என்றும் வேதமுரைத்த கட்டளையிலே ஒவ்வொருவர்க்கும் ஆசார்ய ரொருவர் இருந்தே யாகவேணும். அவர்க்குத் தனியனிட்டு அநுஸந்தானம் செய்தே யாகவேண்டும். தனியன் இயற்றிக் கொடுக்கப் பண்டிதர் துர்லபராகக் கூடும். அதனாலொரு குறையில்லை. *லக்ஷ்மீநாதஸமாரம்பா மென்கிற இந்தத் தனியனை யநுஸந்தித்து அனைவரும் க்ருதக்ருத்யராகலாமென்பது ஆழ்வான் திருவுள்ளம். ஒக்குமிது.

ஸ்ரீமந் நாதமுனிகள் பட்ட மஹாப்ரயாஸங்கள் வாசாமகோசரம். ஸ்ரீவைஷ் ணவஜகத் ப்ரஸித்தம். அக்காலத்தில் அவர் அப்பாடு பட்டிலரென்றால் இன்று நாம் ஸ்ரீவைஷ்ணவராக உலாவ முடியாதென்பது திண்ணம். ''இதம் அகிலதம: கர்சநம் ந: தர்சநம் நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தம்'' என்கிற நிகமாந்த மஹாகுரு ஸூக்தியில் நாதோபஜ்ஞமென்பதற்கு லக்ஷ்மீநாதோபஜ்ஞமென்று சிலர் பொருள் கூறுவது ஸ்வாமியின் வியாக்கியான ஸூக்தியோடு விரோதிக்கு மாகையாலே அநாதரணீயம்.

"தெருளுற்றவாழ்வார்கள் சீர்மையறிவாரார்? *
அருளிச் செயலையறிவாரார் *?—அருள் பெற்ற
நாத முனிமுதலாம் நந்தேசிகரையல்லால் *
பேதை மனமேயுண்டோ பேசு." (உபதேசரத்தினமாலை.)

ஸ்ரீமந்நாதமுனிகள் திருவடிகளே சரணம்.

## கல்கியின் மதுரமான வார்த்தை.

29-6-69 தேதியிட்ட கல்கியில் பக்கம் 16ல் ''ஸ்ரீராமபிரான் (ஜூன் 8 மாலை)'' என்ற தலைப்பின் கீழ் ''தலைமை வகித்த அண்ணங்கராசாரியர் ஸ்வாமி 'பிரதிவாதி பயங்கரம்.' ஆனால் பிரதிவாதம் செய்யாதவர்களுக்குப் பரம மதுரமானவர்'' என்றெழுதப்பட்டுள்ளது. பிரதிவாதம் செய்ய இயலாதபடி பேசுமவர் என்று காட்டுவது இதன் கருத்துப் போலும்.—என்று நாம் எண்ணியிருந்தோம். ஆனால், ''கல்கியில் வெளிவந்திருக்கின்ற இவ்வாசகங்களுக்கு என்ன பொருள்? என்ன கருத்து?'' என்று நம்மைப் பலர் கேட்டார்கள். கல்கியின் உதவியாசிரியர் ப்ரஹ்மஸ்ரீ. ரா. கணபதியவர்கள் நமக்கு உயிர்நண்பராதலால் அவர்க்கெழுதித் தெரிந்துகொள்வோமென்றெண்ணி அவர்க்கே யெழுதினோம். அவரிடமிருந்து கிடைத்த பதில் வருமாறு;—(அடுத்த பக்கம் காண்க.)

KALKI. CHETPUT, MADRAS. 31. 28-6-69.

"அனந்தகோடி வேதோக்த ப்ரணமங்கள். சிலவிஷமிகளுக்குப் பதிலாகக் கல்கியில் எழுதப்பட்டதை ஒருவேளை தாங்களே மனத்தை வருத்துவதாக எண்ணி விட்டீர்களோ என அஞ்சுகிறேன். 'தாங்கள் அத்வைதத்துக்கு மாருகப் பேசக் கூடும்' எனச் சிலர் குரல்கிளப்பினர். அப்போது "இது ஸ்ரீபெரியவாளே அங்கீ கரித்த விஷயம்; இவ்விழாவில் அத்வைத-விசிஷ்டாத்வைத சர்ச்சைக்கு இட மில்லை; அதை ஸ்ரீ பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி நன்கு உணர்ந்தவர்கள்; எனவே, சித்தாந்த விசார ஸதஸ்ஸில் வாதத்தில் தீவிரமாக ஈடுபடக்கூடிய ஸ்ரீ ஸ்வாமி நம் மாநாட்டில் அவ்விதம் பேச மாட்டார்" என்று கூறினேன். தாங்களும் ஷண்மத மாநாட்டின் அடிப்படை நோக்கத்தை யுணர்ந்தே சீரிய உரையாற்றிக் கௌரவித்தீர்கள். முதலில் அச்சம் தெரிவித்தவர்களுக்குப் பதிலாகவே "வாதம் செய்யாதவர்களுக்கு மதுரமானவர்" என எழுதப்பட்டது. ஸ்ரீவைஷ்ணவர்கள் விவாஹப்பத்திரிகைகளில் காண்கின்ற வாசகத்தைத் தங்கள்முன் வைக்கிறேன். "வாசகதோஷ: க்ஷந்தவ்ய:" அனந்தகோடிப் பிரணமங்கள். ரா—கணபதி."

P, B. A. மேலேகாட்டிய பதிலில் "தாங்கள் அத்வைதத்துக்கு மாருகப் பேசக்கூடுமெனச் சிலர் குரல் கிளப்பினர்" என்ற பகுதிக்குச் சில தத்துவங்களை நாம் விளக்க விரும்புகிறேம். அத்வைதிகள் எனப்படுமவர்களுக்கு விசிஷ்டாத்வைதத்தில் வெறுப்போ வெகுளியோ இருக்கலாம்; விசிஷ்டாத்வைதிகளெனப்படுமவர்களுக்கு அத்வைதத்தில் பகையிருக்க ப்ரஸக்தியே கிடையாது. விசிஷ்டாத்வைதமென்கிற சொல்லுக்கு வெவ்வேறு பொருள் கூறுவர். இதைப்பற்றி வடமொழியிலும் தென்மொழியிலும் நானெழுதியுள்ள நூல்களில் விவரித்திருக்கின்றேன். உபந்யாஸ மேடைகளில் நான் பிரசங்கம் செய்யும்போது "விசிஷ்டமான அத்வைதம்—விசிஷ்டாத்வைதம்—மிகச் சிறந்ததான அத்வைதத்தை விசிஷ்டாத்வைதமென்பதாகக் கொள்ளலாம்" என்று கூறுவதுண்டு. விசேஷ யுக்தமானது விசிஷ்டமெனப்படும். சிறப்புப் பொருந்தியது என்கை. விசிஷ்டாத்வைதிகளைச் சிறந்த அத்வைதிகளென்னலாம் என்பது எனது கருத்து. வேதங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் ஆழ்வார்களினுடைய திவ்வியப் பிரபந்தங்களிலும் அத்வைதவாதம் (அதாவது) அபேதமாகக் கூறுதல் மிகமிகக் காணப் படுகின்றது. * ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட் * என்றது வடமொழி வேதம். * அவனே யவனுமவனு மவனும் அவனே மற்றெல்லாமு மறிந்தனமே* என்றது தமிழ்வேதம் மேலே காட்டினவகையில் உபயவேதங்களிலும் எண்ணிறந்த வாக்கியங்களுண்டு. அவற்றை நிர்வஹிக்கும் வழியறியாதார்தாம் அத்வைதத்தைப் பகைக்கவேண்டும் நம்மாழ்வார் திருவாய் மொழி தொடங்கும்போதே* திடவிசும்பெரிவளி நீர் நிலமிவைமிசை படர்பொருள் முழுவதுமாய் அவையவைதொறும், உடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன, சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே* என்கிற பாசுரத்திஞல் அத்வைத நிர்வாஹம் பண்ணியருளினபடியை அறிந்தோமுக்கு அத்வைதத்தைக் கண்டிக்க அவசியமில்லை யென்பதை உலகமறியவேணும்.

ஷண்மதமென்றே அறுசமயமென்றே வழங்கப்பெற்ற மதவகுப்புக்கள் பல விருந்தனவென்பார் இதற்குப் புராதன நூல்களிலிருந்து தக்க சான்றுகள் காட்டி யுகப்பிக்கவேணும் பகவத் பாதருடைய நூல்களிலிருந்து காட்டுவது விசேஷம். *

இங்கே ஸேவை ஸாதிக்கும் பெரியார் சென்னை மாநகரில் சிறந்த அட்வொகேட்டாக விளங்குபவர். ஸ்ரீ. P. B. அனந்தாசாரியரென்று ப்ரக்க்யாதி பெற்றவர். P. B. என்பதற்கு பிள்ளைபாக்கம் பஹு குடும்பி யென்று விவரணங் காண்க. எனக்குத் தெரிந்த வரையில் இந்த ஸந்ததியார் ஆங்காங்கு மஹா மேதாவிகளாயும் சிறந்த பதவிகளில் வாழ்பவர்களாயும் விளங்கி வருகிறார்கள். இங்கே ஸேவை ஸாதிக்கிற அனந்தாசார்ய ஸ்வாமியைப் பற்றி ஸ்ரீ ராமாநுஜனில் ஏற்கெனவே விசேஷமாக ப்ரஸ்தாவித்திருக்கிறோம். சென்னை முத்தியால் பேட்டையில் விளங்கும் ஸ்ரீ வேணுகோபால க்ருஷ்ண ஸ்வாமி தேவஸ்தானத்திற்கு தர்மகர்த்தாவாக விளங்குபவர். ஆங்காங்கு ஸந்நிதிகளுக்கு ட்ரஸ்டிகளாக வருபவர்கள் பகவத் கைங்கரியங்களில் ஈடுபாடில்லாமல் ஸமய விசேஷங்களில் படாடோபமாக வருவதும் மாலை மரியாதைகளை யனுபவித்துப் போவதுமாயிருப்பர்கள். தர்மஹர்த்தாக்களென்றும் பெயர் பெறுவர்கள். நம் அனந்தாசாரியர் ஸ்வாமி மேலே குறித்த தேவஸ்தானத்தின் அபிவிருத்திக்குப் பாடுபடுவது இறந்த காலத்திலும் நிகழ் காலத்திலும் எதிர் காலத்திலும் வாசாமகோசர மென்னத் தட்டில்லை. இவரு



ஸ்ரீமதுபயவே. P. B. அனந்தாசாரியர் ஸ்வாமி

டைய தளராத ஊக்கத்தையும் உழைப்பையும் அடியேன் நன்கறிந்தவனாகை யாலே எதிர் காலத்தையும் சேர்த்து எழுதினது பொருந்தும்.

பஹுச்ருதராய் ஸம்ப்ரதாயார்த்த நுண்ணறிவு படைத்தவராய்ப் பரமரஸிகரான இந்த ஸ்வாமி தாம் மேற்கொண்ட பகவத் கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை மேன்மேலும் சிறப்புற நடத்திக்கொண்டு நீடூழி வாழ்ந்திடுகவென்று பெருந்தேவி மணவாளனை பேரருளாளனருளைச் சிந்தித்து ஆசாஸிக்கின்றேன். *

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

பங்குனி விசாக விசேஷ மலராக வெளிவந்த ஸ்ரீவைஷ்ணவ ஸர்வஸ்வம் பலபல அன்பர்களின் விருப்பத்தின்படி மறுபதிப்புச் செய்யப்படுகிறதென்று முன்னிதழில் (பக்கம் 32ல்) வெளியிட்டிருந்தோம். அந்த மறுபதிப்பு முடிவுபெற்று ஸர்வஸ்வம் ஸித்தமாகியுள்ளது. போஸ்டேஜ் உள்பட விலை 2–50. விருப்ப முள்ளவர்கள் எழுதிப்பெறலாம். —மானேஜர், கிரந்தமாலா ஆபீஸ்.

இங்கே ஸேவை ஸாதிப்பவரான மாடபூசி ஸ்வாமி ஸமீப காலத்தில் சென்னையில் திருநாடலங்கரித்த செய்தி மிக வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது. இவர் எண்பது பிராயம் வாழ்ந்தவரெனினும் இவ்வுலகின் பாக்கியத்திற்காக இன்னும் வெகு காலம் எழுந்தருளியிருக்கவேண்டியவர். இவர் ஜனித்தது ராஜமன்னார் ஸன்னிதிக் கடுத்த சேரன் குளத்தில். கும்பகோணம் காலேஜில் படித்து B.A., B.L., தேறி, சிலவாண்டுகள் சென்னை ஹைகோர்ட்டில் பிராக்டிஸ் செய்து, திருத் தகப்பனார் பரமபதித்த பின் தஞ்சை சேர வேண்டியதாயிற்று. அவ்விடத்தில் நாற்பது வருட காலம் பிரபல கிரிமினல் லாயராக இருந்து வந்தார். அவ்விடம் Bar அஸோஸியேஷன் யூனியன் Club களிலே பல காலம் President பதவியை வகித்தார். மற்றும் பல பொதுப் பணிகளில் ஈடுபட்டிருந்தார். காரப்பங்காட்டுத் தேவப் பெருமாள் ஸன்னிதியிலும் மன்னார்குடி ராஜகோபாலன் ஸன்னிதியிலும் 60 வருஷ காலம் உசித கைங்கரியங்களை நடத்தி வந்தார். இந்த ஸ்வாமியினுடைய சரம கைங்கரியம் ருக்யஜுஸ் ஸாமவேத பாராயணங்களுடனும் திவ்யப்ரபந்த ஸேவையுடனும் வெகு சிறப்பாக நடந்தேறியது. ... ... (*)



ஸ்ரீ. மாடபூசி M. K. ரங்காசாரியர் ஸ்வாமி

# பகவத் விஷய ரஸாநுபவம்

நாம் அநுபவிக்கும் இதிஹாஸ புராண நூல்களும் மற்றுமுள்ள அத்யாத்ம சாஸ்த்ரங்களுமெல்லாம் எம்பெருமானைப் பற்றியவையே யாதலால் அவற்றையும் பகவத் விஷயமென்னத் தட்டில்லை; ஆனாலும் பகவத்விஷயமென்கிற வ்யபதேசம் திருவாய்மொழி வியாக்கியான மொன்றுக்கே நெடுநாளாக வழங்கி வருகின்றது. திருவாய்மொழி காலக்ஷேபத்தையே எங்கும் பகவத்விஷய காலக்ஷேபமென்கிறோம். காஞ்சீபுரத்திற்குப் பெருமாள்கோயில் என்று அநாதிகாலமாக வ்யவஹாரமுள்ளது; இதைக் கேட்பவர்கள் சிலர் ''மற்றவை பெருமாள் கோயிலன்றோ? பிள்ளையார் கோவிலா?'' என்கிறார்கள். அதுபோலவே ''மற்றவை பகவத் விஷயமல்லவா?'' என்றும் சிலர் கேட்பதுண்டு. ஆரைக்கேட்பது? பூருவாசாரியர்கள் காலந்தொட்டு இப்படியே வ்யபதேசம் நிகழ்ந்துவாரா நின்றது. உண்மையில், திருவாய்மொழி யைக் கொண்டு அநுபவிப்பதுதான் பகவத் விஷயாநுபவமாகும். *நமாம்யஹம் த்ராவிடவேத ஸாகரம்* என்றபடி திருவாய்மொழி ஒரு கடல். *ஜீயாத் பராங்குச பயோதி:* என்றபடி, திருவாய்மொழியை யருளிச்செய்த நம்மாழ்வாரும் ஒரு கடல். திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யனான எம்பெருமானோ *பெரும்புறக்கடல். திருவாய் மொழிக்கு வியாக்கியானமான ஈடு முப்பத்தாறாயிரமோ *அப்ரமேய மஹோததி. இங்ஙனே ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வர்க்கமெல்லாம் கடலாகவே காண்கிறது. ஸாரமாகச் சில விஷயங்கள் கேளீர்;—

## — வடமொழி வேதத்திற்கொரு நான்முகன்; தென்மொழி வேதத்திற்கொரு நான்முகன் —

வடமொழி வேதமானது எப்படி அவதரித்ததென்று பார்க்கில் *அநாதி நிதநா ஹ்யேஷா வாக் உத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா* என்கிறபடியே நான்முகக் கடவுள் மூலமாய் அவதரித்ததாகத் தெரியவருகிறது. *யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை* என்கிற உபநிஷத்தும் எம்பெருமானிடத்தில் முதன்முதலாக நான்முகன் உபதேசம் பெற்றதாகத் தெரிவிக்கின்றது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் *ஸுப்தோத்புத்த விரிஞ்சபூர்வஜநதாம் அத்யாப்ய* என்று நான்முகனையே முந்தின அத்யேதாவாகத் தெரிவித்தருளினார். ஆக வடமொழி வேதத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் நான்முகனைப் போலே தென்மொழி வேதமாகிய த்ரமிடோப நிஷத்துக்கும் நான்முகனே ப்ரதம ப்ரவர்த்தகனாகவுள்ளான். எங்ஙனே யென்னில்; ஒரு பரம பக்தர்—''சதுர்முக ஸமாக்க்யாபி சடகோபமுநேர் ஸ்திதா, ஸ்வவாசா மாத்ரு துஹித்ரு ஸகீவாசா ச வர்ணநாத்.'' என்று சொல்லிவைத்தார். இதன் பொருளாவது, ஆழ்வார் நான்கு முகங்களாலே பேசியுள்ளபடியைப் பார்க்கிறோம். நான்கு முகங்கள் எவை என்னில்; [ஸ்வவாசா] ஆழ்வார் தாமான தன்மை குலையாமல் குருகூர்ச் சடகோபனாகவே யிருந்து *உயர்வற வுயர் நலம்* *வீடுமின் முற்றவும் *பத்துடையடியவர்*

முதலான பதிகங்கள் பேசியிருப்பதனுலும். [மாத்ருவாசா] *ஆடியாடியகங்கரைந்து* *பாலனுயேழுலகுண்டு* *மண்ணையிருந்துதுழாவி* முதலான பதிகங்கள் தாய்வாக்காகப் பேசியிருப்பதனுலும். [துஹித்ருவாசா] *அஞ்சிறையமடநாராய்* *வாயுந்திரையுகளும்* முதலான பதிகங்கள் மகள் பேச்சாகப் பேசியிருப்பதனுலும். [ஸகீவாசா] *தீர்ப்பாரையாமினி* *துவளில் மாமணிமாடம்* *கருமாணிக்கமலை* என்கிற பதிகங்கள் தோழி பேச்சாகப் பேசியிருப்பதனுலும் ஆழ்வார்க்கு நான்கு முகங்கள் தேறினதாகத் தெளிக.

## — ஆழ்வார்க்குண்டாகும் பெண்பாவனையின் பொருத்தம் —

நூறுபதிகங்கள் கொண்ட திருவாய்மொழியாயிரத்தில் எழுபத்து மூன்று பதிகங்கள் தம்முடைய திருவாக்காலே (ஆண்மை குன்ருமல்) பேசினவை; மிகுந்த இருபத்தேழு பதிகங்களில் பதினேழு பதிகங்கள் தலைமகள் பேச்சாலே பேசினவை; ஏழுபதிகங்கள் தாய் பேச்சாலே பேசினவை. மூன்று பதிகங்கள் தோழி பேச்சாலே பேசினவையென்று கண்டு கொள்வது. தலைமகளென்பது யாரை? தாயாரென்பது யாரை? தோழியென்பது யாரை? என்று தெரிந்துகொள்ள வேண்டும். இதை மிக விளக்கமாக கண்டு நிருபிக்கிறேன். நம்மாழ்வார் தம் வாயாலும் வேற்று வாயாலும் பேசுகிருரென்பதை முன்னம் குறிக்கொள்ள வேணும். தம் திருவாக்காலே பேசுவதென்பதில் விளக்கம் வேண்டியதில்லை. அஃது இயற்கையான பேச்சென்பது யாவருமறிந்தது. வேற்று வாயாலே சொல்லுவதாவது பெண்மை யெய்திப் பேசுவதாம். ஆழ்வார் ஆடவர்களில் தலைவராக அவதரித்திருக்கச் செய்தேயும் "பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா: ஜகனம் கனம், யாஸ் ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ் தா: பும்பாவம் மநஸா யயு:" என்று மஹாபாரதத்தில் சொன்ன கட்டளையிலே (அதாவது, விராட நகரத்தில் பாண்டவர்கள் அஜ்ஞாதவாஸம் பண்ணினபோது நீராடாநின்ற த்ரௌபதியின் ஒப்புயர்வற்ற ஸௌந்தர்ய லாவண்யாதி அதிசயங்களைக் கண்ட பெண்டுகள் 'ஐயோ! நாம் ஆண்களாகப் பிறவாமற் போனேமே' என்று நினைத்து மாநஸிகமாகப் புருஷபாவனையை யெய்தினராம் இதை வேதாந்தவாசிரியரும் *பாஞ்சாலீ காத்ர சோபாஹ்ருத ஹ்ருதய வதூவர்க்க பும்பாவ நீத்யா* என்கிற சுலோகத்தினுல் இட்டுவைத்தார். ஆகவே புமானுன ஆழ்வார்க்குப் பெண்பாவனை ஏற்கும்.

## — புமான்கள் பெண்மை காட்டுவதன் உட்கருத்து —

நம் பூருவாசாரியர்கள் மிகப் பொருத்தமாக இவ்விஷயத்தில் ஒரு காரிகை இட்டருளியுள்ளார்கள். அது திருநெடுந்தாண்டக வியாக்கியானத்தில் கையாளப்பட்டுள்ளது. (அதாவது) "ஸ்வாமித்வ ஆத்மத்வ சேஷித்வ பும்ஸ்த்வாத்யா: ஸ்வாமிநோ குணா:, ஸ்வேப்யோ தாஸத்வ தேஹத்வ சேஷத்வ ஸ்த்ரீத்வ தாயிந:" என்பதாம். இதன் பொருளாவது—எம்பெருமான் ஸர்வஸ்வாமியென்றும், ஸர்வபூதாந்தராத்மாவென்றும் ஸர்வசேஷியென்றும் புருஷோத்தமனென்றும் சொல்லப்படுகிருன் அவன் ஸ்வாமியாயிருப்பதற்குச் சேர நாம் தாஸர்களாகிருேம். அவன் ஆத்மாவாயிருப்பதற்குச் சேர நாம் சரீரபூதர்களாகிருேம். அவன் சேஷியாயிருப்பதற்குச் சேர நாம் சேஷ பூதர்களாகிருேம். அவன்

புருஷோத்தமனுயிருக்கும் தன்மையானது நமக்குப் பெண்மையை விளக்கின்றது என்கை. அவனும் ஸ்வாமியாய் நாமும் ஸ்வாமியாயிருக்க முடியுமோ? அவனும் அந்தராத்மாவாய் நாமும் அந்தராத்மாவாயிருக்க முடியுமோ? அவனும் சேஷியாய் நாமும் சேஷியாயிருக்க முடியுமோ? சேஷித்வமாவது கைங்கரியம் கொள்ளுகை; சேஷத்வமாவது தொண்டு செய்கை. இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில் இராதன்றோ. அப்படியே அவனும் புருஷனுய் நாமும் புருஷராயிருக்க முடியுமோ? எங்ஙனே முடியும்? ஆகவே தாஸத்வ தேஹத்வ சேஷத்வங்கள் போலே ஸ்த்ரீத்வமும் சேதனர்க்கு இயற்கையானதேயென்று தேறிற்று. புமானைப் புமான்களே அனுபவிப்பதென்பதில் ரஸமில்லையே. ஆண்களாய்ப் பிறந்தவர்களுக்கு சரீர தர்மமாகப் பெண்மை ஸம்பவிப்பதன்ருகிலும் பாவநாவிசேஷ அபரபர்யாயமான ஸ்த்ரீத்வம் ஸம்பவிக்கக் குறையில்லை. அத்யந்த பாரதந்த்ரியமன்றோ ஸ்த்ரீ தர்மம். அப்படிப்பட்ட பாரதந்த்ரியத்தை ப்ரகாசப் படுத்துவதுதான் பெண்ணுகை.

**— ஈச்வர சேதநாகளுக்குப் பதிபத்நீபாவம் திருமந்த்ரஸித்த மென்பது —**

எம்பெருமானுக்கும் நமக்கும் நவவித ஸம்பந்தம் திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தில் தேறுவதாக ஆசாரியர்கள் நிரூபிக்கிருர்கள். அவற்றுள் பதிபத்னீபாவ ஸம்பந்த மென்பது நான்காவதாகும்; திருமந்திரத்தில் இது எந்த சொல்லால் தேறுகின்றதென்னில், பிரணவத்தில் இடைச் சொல்லான உகாரத்திஞல் தேறுகின்றது. உகாரம் அவதாரணர்த்தமாய் சேதனன் எம்பெருமானெருவனுக்கே சேஷப்பட்டவனென்றுகாட்டி [அநந்யார்ஹத்வத்தைக்காட்டி] "கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானையல்லால் அறியாக் குலமகள் போல்" என்ற குலசேகராழ்வார் ஸ்ரீ ஸூக்தியின்படி பதிபத்நீபாவ ஸம்பந்தத்தை (அல்லது, பர்த்ரு பார்யா பாவரூப ஸம்பந்தத்தை)க்காட்டி நிற்கும். ஆகவே ஜீவாத்மாவின் ஸத்ரீத்வம் ஸகல சாஸ்த்ர ஸாரமான திருமந்திரத்தில் ஸித்த மென்றதாயிற்று. எம்பெருமானுடைய அந்தரங்க மஹிஷிகளான ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளின் ஸாதர்மியத்தையே ஆழ்வார் அடைகின்ருர். ஆனது பற்றியே திருவாய்மொழியில் (6-5-10) *பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்* என்று தோழி பாசுரமுள்ளது. பெரிய திருமொழியிலும் *காவியங் கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள்* என்று தாய் பாசுரமுள்ளது. இவற்ருல் ஆழ்வார் எய்தும் பெண்மை ஸாமான்யமான ஸ்த்ரீத்வமன்று; தேவ தேவதிவ்ய மஹிஷீஸாதர்மியம் என்றதாயிற்று. இது கீழே ஜீவாத்ம பரமாத்ம போகக் கட்டுரையில் விரிவாக விளக்கப் பட்டிருப்பது காண்க.

**— பக்திநூல்களுக்குப் பெண்பேச்சு பொருந்தும் வகையும், மகள் தாய்பேச்சுக்களின் ஸ்வாபதேசமும் —**

தலைமகளென்பதும் நாயகி யென்பதும் பர்யாயம். தாயாருடைய த்ருஷ்டியாலே மகளாகிருள். நாயகனுடைய த்ருஷ்டியாலெ நாயகியாகிருள். மகளுக்குத் தாயொருத்தி யிருப்பதும், நாளடைவில் தோழிமார் ஏற்படுவதும் ஸஹஜம். ஸ்த்ரீ பாவனையில் ஒருபோது தாய் பேச்சும் ஒருபோது மகள் பேச்சும், து தோழிபேச்சும் நிகழ்கின்றன. பக்தியே ச்ருங்கார வகையில் பரிணல் இத்தகைய பேச்சுகள் பக்திநூல்களுக்கு அவத்யமாகாது.

மணவாள மாமுனிகள் நூற்றந்தாதியில் (4) * அஞ்சிறைய மடநாராய்ப் பதிகத்திற்கு ஸாரமருளிச்செய்பவர் * அஞ்சிறைய புட்கள் தமை ஆழியானுக்கு நீர். என்செயலைச் சொல்லுமென விரந்து—விஞ்ச நலங்கியதும் மாறனிங்கே நாயகனைத் தேடி மலங்கியதும் பத்திவளம்'' என்று அருளிச்செய்தது காண்க. அதில் பத்திவளமென்றது உயிரான பேச்சு. இங்ஙனே தாய்பேச்சாகவும் தலைவி பேச்சாகவும் தோழி பேச்சாகவும் வெளிவருவதற்கு என்ன கருத்தென்பதை இனி விவரிக்கிறேன்.

பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத்தின் தொடக்கத்தில் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களை யருளிச்செய்யுமிடத்து "பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்கு த்வரிக்கையும்'' என்று இரண்டு அருளிச் செய்கிறார். பேறு தப்பாதென்று துணிந்திருக்கையாவது தம்மிடத்தில் உபாயாநுஷ்டான மொன்றுமில்லாமையையும் தாம் செய்த குற்றங்களின் மிகுதியையுங்கண்டு பேறு கிடைக்குமோ கிடைக்காதோ வென்று தளும்பியிருக்கையன்றிக்கே பேறு தப்பாமல் ஸித்திக்குமென்று திடமான அத்யவஸாயத்தோடிருக்கை. பேற்றுக்கு த்வரிக்கையாவது இந்த அத்யவஸாயங்கொண்டு பேறு ஸித்தித்தபோது ஸித்திக்கட்டும் என்றிருக்கையன்றிக்கே க்ரமப்ராப்தி பற்றாமல் பதறுகை. ஆக இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில் இருக்கப் பொருத்தமில்லை; திடமான அத்யவஸாயங் கொண்டிருந்தால் பதறுகை அப்ராப்தம் பதறுவதானால் அத்யவஸாயத்திற்கு அர்த்தமில்லையாகும் பதறாமலிருப்பதற்கு உறுப்பன்றோ அத்யவஸாயம். இரண்டும் அவர்ஜநீயமாயிருக்கையாலே தாய் பேச்சாலே அத்யவஸாயத்தை வெளியிடுவதும் மகள் பேச்சாலே பதற்றத்தை [பேற்றுக்கு த்வரிக்கையை] வெளியிடுவதுமாய்ச் செல்லுகிறது. தாய் அத்யவஸாய நிஷ்டை; மகள் த்வரா நிஷ்டை என்றதாயிற்று.

**— தோழி தாய் மகள்-பேச்சுக்களின் சுவையாராய்ச்சி —**

திருவாய்மொழியில் (5.5) * எங்ஙனேயோ வன்னைமீர்காளென்கிற பதிகத்தைக்கொண்டு தோழி தாய்மகள் பேச்சுக்களின் சுவைகளை ஆராய்வோம்! இதில் பாசுரந்தோறும் 'அன்னையரும் முனிதிர்' 'அன்னைகாணகொடாள்' என்கிற சொல் தொடர்ந்துவருவதைக காண்கிறோம். [முனிதலாவது சீறுதல், காணகொடாளென்றது வெறுப்புக்கொள்ளுகிறாளென்றபடி.] இது மகள் பாசுரமான பதிகம். தாய்க்கு மகள்மேல் சீற்றமும் வெறுப்பும் மிகமிகவுண்டாகியிருப்பதாக இதனால் தெரியவருகிறது. இவையுண்டாகைக்குக் காரணமென்னவென்று பார்க்கவேணும். அது மகள் வாயினாலேயே ஸ்பஷ்டமாக வெளிவந்துள்ளது. எங்ஙனேயென்னில்; "மேலும் வன்பழி நங்குடிக்கிவளென்று அன்னை காணகொடாள்'' "நிறைந்த வன்பழி நங்குடிக்கிவளென்று அன்னை காணகொடாள்'' "கழியமிக்கதோர் காதலள் இவளென்று அன்னை காணகொடாள்'' என்றன்றோ வசனவ்யக்தியுள்ளது. இம்மகளால் ப்ரபந்நஸந்தானத்திற்குப் பெரும்பழி விளையுமென்றும் திடமான அத்யவஸாயங்கொண்டிருக்கையன்றிக்கே மேல்விழுந்து பதறுவதற்குறுப்பான எல்லை கடந்த அன்பையுடையவளா யிருக்கிறாளிவளென்றும் வாய்விட்டுச் சொல்லியேயன்றோ தாயானவள் மகளை க்ஷேபிக்கின்றாள். மகள் பதறுவது ப்ரபந்நஸந்தானத்

திற்குப் பெரும்பழியென்று தாயார் முடிவுகட்டினதாக இங்கு ஸ்பஷ்டமாகிறது. ஆனால் மேலே (6-7.) *உண்ணுஞ்சோறு பருகுநீர்ப்பதிகத்திலே (பா. 4.) 'கொல்லை யென்பர்கொலோ! குணம் மிக்கனளென்பர் கொலோ!'' என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து இது நிர்த்தாரணம் பண்ணவொண்ணாத விஷயமென்று தாயார் கருதியிருப்பதாகத் தெரியவருகின்றது. இப்பாசுரத்தின் கருத்தாவது என் மகளு டைய நடவடிக்கையை உலகத்தார் வெறுப்பர்களோ? அன்றி உகப்பர்களோ? பேறு தப்பாதென்று துணித்திருப்பதே கடமையென்று திண்ணிய அத்யவஸாய முடையார் 'இவள் இங்ஙனே பதறுகையாவதென்?' என்று வெறுக்கக்கூடும். 'பெறும்பேற்றின் கனமறிந்தால் அதற்குப் பதருமலிருக்கமுடியுமோ' என்றிருக்கு மவர்கள் உகக்கக்கூடும். உலகத்தாருடைய நினைவை ஒருபடி நிர்ணயிக்க முடியாதாகையாலே, அவத்யம் சொல்லும்படி யாகுமோ? அன்றி சிலாகிக்கும்படி யாகுமோ தெரியவில்லையேயென்று தாயார் தளும்பி நிற்கும்படி இப்பாசுரத்தில் தெரியவருவதால் தாயின் கருத்தாலும் மகளுடைய பதற்றம் பரிபூர்ணமாகப் பழிக்கப்படுவதில்லையென்பது விளங்கும்.

மேலேயெடுத்த *எங்ஙனேயோபதிகத்தில் தாய்மார் சீறுவதைமட்டும் சொல்லி நில்லாமல் அவர்களோடு தோழிமார்களையுஞ் சேர்த்து அவர்களும் சீறுவ தாகச் சொல்லியிருக்கிறது. (9.) *முன்னின்றுயென்று தோழிமார்களும் அன்னை யரும் முனிதிர்* என்றன்றே பாசுரமுள்ளது. அன்றியும், மேலே *மானேய் நோக்குப்பதிகத்தில் (2.) ''என்றுகொல் தோழிமீர்காள்! எம்மைநீர் நலிந்தென் செய்தீரோ?'' என்று தோழி தாய்மாரோடு சேர்ந்து நலியுமளவேயன்றிக்கே தனிப்படவும் நலிவதாகக் காட்டப்படுகிறதே, இது பொருந்துமோ? தலைவிக்கு அந்தரங்கமாயிருப்பவளன்றே தோழி. அவளும் நலிவதாகச் சொல்லத் தகுமோ வென்கிற சங்கை வலிதாகத் தோன்றும். இதற்குக் கேண்மின். தோழியானவள் தலைவியிடத்தில்மட்டும் அன்புகொண்டு தாயாரோடு உடன்பட்டிருந்திலளாகில் அவள் தலைவியோடு கூடிவாழவே முடியாது. ''பூனைக்கும் தோழன், பாலுக்குங் காவல்'' என்கிற விநோதோக்திரீதியிலே தாய்பக்ஷத்திலிருப்பதாகவும் காட்டிக் கொள்ளவேண்டும் தோழி. தோழி தாய் மகளாகிய மூவருடையவும் பாசுரங்களை ஆங்காங்கு உற்று நோக்கினல் இன்சுவைமிக்க சில விசேஷங்கள் புலப்படும். சிறிது விவரிக்கிறேன். ''என் பெண்மகளையெள்கித் தோழிமார்பலர் கொண்டு போய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்'' என்கிற தாய்பாசுரத்தை நோக்கு மிடத்து தாயார் தோழிமார்மேல் பழியிடுவதாக விளங்கும். என் மகளுக்கு பகவத் விஷயத்திலேயுண்டான அவகாஹனமாகிற அனர்த்தம் தோழிமார் பலராலே வந்ததையோ! என்றன்றே இப்பாசுரத்தில் சொல்லிற்று. தோழி பாசுரமோ இதற்கு எதிராகவுள்ளது. தோழி சொல்லுவதாவது. ''குமுறுமோசை விழ வொலித் தொலைவில்லிமங்கலங் கொண்டுபுக்கு அமுதமென்மொழியாளை நீர் உமக்காசையின்றியகற்றினீர்'' என்றும் ''கரைகொள் பைம்பொழில் தண்பணைத் துலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு, உரைகொ ளின்மொழியாளை நீர் உமக்காசை யின்றி யகற்றினீர்'' என்றும் இங்ஙனேயுள்ளது. உத்ஸவாதி காலங்களில் கோவிலுக்குச் செல்லுகிற தாய்மார்கள் தாங்கள் தனியே போகாமல் இப்பெண்

பிள்ளையை இடுப்பிலே கொண்டுபோய் 'கண்ணழகைப்பார். மூக்கழகைப்பார், ஆடையாபரணங்களின் அழகைப்பார்' என்று காட்டினபடியாலன்றோ. இவ்வனர்த்தம் விளைந்தது! என்று தோழி தாய்மார்மீது பழியிடுவதையன்றோ இங்குக் காணுநின்றோம். இப்படி தாய்மாரும் தோழிமாரும் பரஸ்பரம் பழியிடுவதேயல்லாமல் இப்பழி இருவர்க்குமுள்ளதே யென்று தலைவி ஸ்தாபிப்பதையும் காண்கிறோம். எங்ஙனே யென்னில்; தலைவி பாசுரத்தில் "இணக்கியெம்மை யெந்தோழிமார் விளையாடப் போதுமினென்னப் போந்தோமை" என்றுள்ளது. கண்ணே! நான் உன் வலையில் அகப்பட்டிருக்கவேமாட்டேன்; தோழிமாரன்றோ இணங்கவைத்தார்கள்! என்று இதில் சொன்னபடியால் தோழியர்மேல் பழி ஸ்தாபிக்கப்பட்டது. தலைவி பாசுரத்திலேயே "எங்ஙனேயோவன்னைமீர்காளென்னை முனிவதுநீர்!" என்று முன்னம் காட்டினதை யுற்றுநோக்குமளவில், தோழி தாய்மீது இட்டபழி தலைவியால் ஸ்தாபிக்கப்பட்டமை தெரியும். அன்னைமீர்காள்! நீர் என்னை முனிவது எங்ஙனே? = நீங்களே ஆதியில் என்னை பகவத் விஷயத்திலீடுபடுத்திவிட்டு இப்போது சீறுவது நியாயமா? என்பது இவ்வடிக்கு ஆழ்ந்த கருத்து. ஆக தலைவி தோழிமீதும் தாய்மீதும் பழியை ஸ்தாபித்தபடி விளக்கப்பட்டதாயிற்று.

## — அந்யாபதேசப் பாசுரங்களின் அந்தரங்கமான ஆராய்ச்சி —

தோழியானவள் தாய்மாரோடே கூடிநின்று தலைவியைக் கண்டிப்பதாகக் காட்டுவதும், தாய்மார்க்கு நன்மை சொல்லுவது போலவிருந்து தலைவிக்கு அந்தரங்கமாக நன்மை செய்வதும் பாசுரங்களில் காண்பதுண்டு. *எங்ஙனேயோ பதிகத்தில் "முன்னின்றுயென்று தோழிமார்களு மன்னையரும் முனிதிர்." என்கிற தலைவிபாசுரத்தினால் தோழி தாயோடு கூடித் தலைவியைக் கண்டிப்பது கண்டோம். "துவளில் மாமணி மாடமோங்கு துலைவில்லி மங்கலம் தொழுமிவளை. நீரினி யன்னைமீர்! உமக்காசையில்லைவிடுமினோ" என்கிற தோழி பாசுரத்தை மேலெழ நோக்குமிடத்து தாய்மார்களே! அடங்காப் பிடாரியான இவளை விட்டுத் தொலையுங்கள்; இவள் கெகேடாவது கெடட்டும்; இவள் நம்வழிவாராள்; இவளோடு உறவையறுத்துக் கொள்வதே நமக்குநலம்' என்று தாய்மார்க்கு நன்மை சொல்லுவதுபோல் காணப்படும். ஆழ்ந்து நோக்கின் தலைவிக்குத் துணை செய்வதே இதன் கருத்தாகும். தாய்மார் க்ஷேபித்து மகளுடைய செய்கைகளைத் தடைசெய்ய இடமில்லாதபடி பண்ணுவதன்றோ இங்குப் பலிப்பது. இது தலைவிக்குச் செய்த நன்மையேயாம். தலைவியானவள் தாய்மார் தோழிமாராகிற இரண்டு தலையையும் உதறிக் கைவிடுவதுமுண்டு; எங்கே கண்டதென்னில் *ஏலமலர்க் குழலன்னைமீர்காள்! என்னுடைத் தோழியர்காள்! உங்களோடெங்களிடையில்லையே* என்கிற தலைவி பாசுரத்தில் இது காணலாம். தலைவியினிடத்தில் தோழியர்க்கும் தாய்மார்க்கும் மஹத்தான கௌரவ ப்ரதிபத்தியுண்டென்பதையும் இவ்விருவர் பாசுரங்களிலும் நன்கு காண்கிறோம். * இவளை நீரினியன்னைமீர் உமக்காசையில்லை விடுமினோ * என்று சொன்ன தோழிதானே பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்!" என்று கொண்டாடினமை காண்கிறோம். "என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் என்னை முனியாதே" என்று மகள் சொல்லும்படியாகச் சீற்றமும் வெறுப்புங் கொண்டிருந்த தாய்தானே

*உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றே யிருப்பளென்மகளென்றும், *ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்றும்படி உலகத்தையெல்லாம் திருத்துமவளென்மகளென்றும் மற்றும் பலபடியாகவும் கொண்டாடிக் கூறுநின்றமை காணநின்றோம். ஆக, மகள் தோழி தாய்களுக்குப் பரஸ்பரம் ஐகமத்யக் கூறைவபோல் மேலெழக் காண்பதும், ஆழ்ந்த நோக்கில் மூவர்க்கு முண்டான அந்தரங்கவுகப்பு காண்பதும் ப்ரமாணரூடமாக நிரூபிக்கப்பட்டதாயிற்று.

## — ஜநகசக்ரவர்த்தியின் கந்யகாதானமும் நம்மாழ்வாருடைய கன்யகாதானமும் —

பெண்மையெய்தின ஆழ்வார் ஸாக்ஷாத் திருமாமகளே யென்பது இனி நிரூபிக்கப்படுகிறது. * காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள் * என்கிற திருமங்கையாழ்வார் பாசுரமும் *திருமகள்கொல் பிறந்திட்டாள்* என்கிற நம்மாழ்வார் பாசுரமும் அர்த்தவத்தென்று மூதலிக்கப் படுகின்றதென்க. ஜநககுல ஸுந்தரியான ஸீதாபிராட்டியாரும் நம்மாழ்வாருமொப்பர். 'எங்ஙனே? பிராட்டியானவள் *விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ* என்கிறபடியே ஒருபோதும் எம்பெருமானை விட்டுப் பிரியாதவள். *ராகவத்வே அபவத் ஸீதா* என்கிறபடியே ராமாவதாரத்தில் பெருமாளுக்குப் பத்தினியாக வாய்த்தவள். எப்பெருமான் மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன் * என்கிறபடியே ஒருவர்க்கும் புத்திரனல்லாதவனாயிருக்கச் செய்தேயும் தசரதாதிகளுக்குப் புதல்வனாகப் பிறந்ததுபோல அவளும் ஒருவர்க்கும் புத்திரியல்லாதவளாயிருக்கச் செய்தேயும் ஜநகாதிகளுக்குப் புதல்வியாகப் பிறந்தாள். ஜநகசக்ரவர்த்தி மற்றவர்களைப் போலன்றிக்கே மஹா வேதாந்தியாகையாலே "பகவத் திவ்ய மஹிஷியானவிவள் நம்முடைய புதல்வியல்லள்" என்று தெளிந்திருக்கச் செய்தேயும் *இயம் ஸீதா மம ஸுதா* என்று கலங்கிச் சொல்லித் தனது புத்திரியாகப் பாவித்து அவளைப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார். இதுதான் ஸீதா விவாஹமென்பது. அதேபோல ப்ரக்ருதத்திலும் காணலாம். நம்மாழ்வாரை ஜனகசக்ரவர்த்தி ஸ்தானத்திலும், அவருடைய ஆத்மாவை ஸீதாபிராட்டி ஸ்தானத்திலும் கொள்க. இவ்வாத்மவஸ்து எம்பெருமானுடையதேயன்றித் தன்னுடையதன்று என்கிற தெளிவு ஆழ்வார்க்கு நன்றாகவுண்டு; ஆகவேதான் *உதவிக் கைம்மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில், அதுவுமற்றாங்கவன் தன்னது—அப்பனுக்கு எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே * என்று ஸித்தாந்தமாகப் பேசி முடித்தார். இங்ஙனே தெளிவு இருக்கச் செய்தேயும் உபகாரஸ்ம்ருதியாலே வந்த ஹர்ஷத்தாலே கலங்கி "தோள்களையாரத் தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன்" என்று அவனுடையதான ஆத்மவஸ்துவை (தன்னதுபோல்) அவனுக்கு ஸமர்ப்பித்தார். ஆத்மவஸ்து அமூர்த்தமாயிருக்கச் செய்தேயும் தாளும் தோளுமாய்ப் பணைத்துத் தோற்ற [கன்னிகையைத் தழுவி வரனுக்குக் கொடுக்குமாபோலே] ஆத்மவஸ்துவாகிற கன்னிகையைத் தழுவிக் கொண்டு எம்பெருமானாகிற வரனுக்கு அநந்யார்ஹமாக ஸமர்ப்பித்தாராழ்வார். ஆக ஸீதா விவாஹம்போலே ஆழ்வார் விவாஹமும் தேறிற்று.

### — இரண்டு விவாஹத்திலும் கண்ட ஸந்தோஷாதிசயம் —

ஜனகர் தன்னதல்லாததைத் தன்னதாக ப்ரமித்துக் கொடுத்தாப்போலே ஆழ்வாரும் தம்மதல்லாத தொன்றைத் தம்மதாக ப்ரமித்துக் கொடுத்தார். பெற்றுக்கொண்ட பெருமானும் தன்னதல்லாத தொன்றைப் புதிதாகப் பெற்ருப் போலே. ப்ரமித்து அபரிமிதமாக அகமகிழ்ந்தானென்பது இரண்டிடத்திலும் காண லாயிருக்கின்றது. எங்ஙனே யென்னில்; ஸீதாவிவாஹ ஸமநந்தரம் *தயா ஸ ராஜர்ஷிஸுதோபிராமயா ஸமேயிவாந் உத்தமராஜகந்யயா, அதீவ ராம: சுசுபே * என்று வான்மீகி பேசும்படி, ஸந்தோஷாதிசயத்தாலே பெருமாள் மிக விளங்கிஞ ரென்று கண்டோம். இங்கு ஆழ்வார்விவாஹ ஸமனந்தரத்திலும் எம்பெருமான் அபரிமிதமாக மகிழ்ச்சிகொண்டதை ஆழ்வார் பாசுரத்தாலே நன்கு காண்கிறோம். "என்னுயிரை அறவிலை செய்தனன்" என்று சொல்லி ஆத்மஸமர்ப்பணம் பண்ணின வுடனே ஆழ்வார் கீழ்க்கண்ணாலே எம்பெருமானை நோக்கினர்; 'நாம் தவறுதலாக ஸமர்ப்பித்ததற்கு எம்பெருமான் திருவுள்ளம் புண்பட்டிருக்குமோ! என்று அஞ்சி நோக்கினர்; அவனோ இவர் ஸமர்ப்பித்த ஆத்மவஸ்துவைப்பெற்ற ஹர்ஷாதி சயத்தாலே பளபளவென்று விளங்குவதும், தன்னுடைய திவ்யாவயவங்கள் சத சாகமாகப் பணைப்பதுமாயிருந்தான்; அதனைக்கண்ட ஆழ்வார் "சோதி! தோள் களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் தாள்களா யிரத்தாய்" என்று சொல்லி 'நான் தவறுதலாகச்செய்த செயலாலும் இப்படி ஹர்ஷங் கொள்வதே!' என்று வியந்தார். ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணின அடுத்த க்ஷணத்திலன்றோ இது.

### — ஜன்மபூமியில் பாசமற்றமை பிராட்டிக்குமாழ்வார்க்கு மொக்கும்படி —

பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்தபின்பு பன்னிரண்டாண்டு திருவ யோத்தியில் வாழச்செய்தேயும் ஒருநாளும் மிதிலைக்குச் சென்றறியாள் விச்லேஷபீதியாலே; இதனை அவள் தானே தன்வாக்காலே சொல்லிவைத்தாள். (ஆரண்ய 47-4.) இராவணனோடு வார்த்தையாடும்போது 'ஸமா: த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ" என்ருள். மேல் ஸுந்தரகாண்டத்தில் (33—18.) திருவடியோடு வார்த்தையாடும்போதும் இதே வார்த்தையைச் சொல்லியிருக்கின்ருள். விவாஹத் திற்குப் பிறகு பன்னிரண்டாண்டு திருவயோத்தியில் அமாநுஷ போகங்களை யநுபவித்துக்கொண்டு பெருமாளோடே கூடிவாழ்ந்தபடியைச் சொன்னுள் இதனுல். இதில் ஸமா: என்றது த்விதீயாபஹுவசனம். வியாகரணத்தில் "காலாத்வநோரத்யந்த ஸம்யோகே த்விதீயா" என்பது ஸூத்ரமாகையாலே அவிச்சின்னமாகப் பன்னிரண்டாண்டு உடன்கூடி வாழ்ந்தபடியை இந்த த்விதீயாவிபக்தி தெரிவிக்கும். ஆக, பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்தபின்பு மிதிலையை மிதித்தறியா ளென்பது தேறிற்று. ஆழ்வாரும் *கடையறப் பாசங்கள் விட்டபின்னையன்றி அவனவை காண்கொடானே* என்றும், *பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டுக் கோதில் புகழ்க்கண்ணன் தன்னடிமேல்* என்று முள்ள பாசுரங்களினுல் அதே நிலைமையைத் தமக்குத் தெரிவித்துக்கொண்டார்.

இங்ஙனே மற்றும் பல பொருத்தங்களுண்டு. அவை நமது திவ்யார்த்த தீபிகை யில் விரிவாகக் காணத்தக்கன. இவையெல்லாம் ஆசார்ய ஹ்ருதய திவ்யார்த்தங்கள்.

# பகவத்விஷய திவ்யார்த்தாநுபவம்

அநுபவரஸிகர்காள்!, கீழே பகவத்விஷய ரஸாநுபவமென்னுங் கட்டுரை தந்தோம். அதை ஒருகாலிருகால் வாசித்துப் பயன்பெற இயலாது. பலகால் வாசிக்கவேணும். பெரியார்களிடம் பாடங்கேட்கிற முறையிலும் கேட்கவேணும். ஸ்ரீபாஷ்யத்திற்கு அதிகாரிகள் பலர் தேறுவர்கள். பகவத் விஷயத்திற்கு அதிகாரிகள் மிகச்சிலரே. அநுபவரஸிகர்களைத் தேடிப்பிடிக்க வேண்டியன்றோ இருக்கிறது. இப்போது பகவத்விஷய திவ்யார்த்தாநுபவம் என்று மகுடமிட்டு, திருவாய்மொழியில் [பத்தாம்பத்து ஆரும்பதிகத்தில்] நான்கு பாசுரங்களுக்கு எனது திவ்யார்த்த தீபிகையுரையை வெளியிடுகின்றேன். இந்தப் பதிகமானது தலைவி பேச்சன்று, தாய் பேச்சன்று, தோழி பேச்சன்று; ஆழ்வார் தாமான தன்மையிலிருந்து பேசும் பேச்சு. எம்பெருமானுடைய திருக்குணத்தை ஆழ்வார் எப்படி யநுபவிக்கிறார்? அதனை நம்பிள்ளை எப்படி விவரிக்கிறார்? நம்பிள்ளையின் திருவுள்ளக் கருத்துகளை அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையுரை எப்படி விளக்கியுள்ளது! என்னும் இம்மூன்று விஷயங்களை அன்பர்கள் அறிந்துகொள்ளப்பாங்காக இக்கட்டுரை அமைக்கப்படுகின்றது.

## திருவாய்மொழி—பத்தாம்பத்து (6) அருள் பெறுவாரடியார்.

(அவதாரிகாஸம்க்ஷேபம்.) ஆழ்வார் தாம் திருநாடு செல்லப்பெறுவதை நிச்சயித்து, சரமஸந்தேசமென்னும்படியாகக் கீழே * கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீரென்னும் பதிகத்தில் பரோபதேசம் செய்து தலைக்கட்டினார். எம்பெருமான் ஆழ்வாரைத் திருநாட்டுக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதற்காகத் திருவாட்டாறென்னும் மலைநாட்டுத் திருப்பதியிலே தங்கு வேட்டையாகத் தங்கியிருந்து ஆழ்வார் பக்கலிலேவந்து "ஆழ்வீர்! அடியேன் இப்போது என்ன செய்யவேணும்! தேவரீருடைய கட்டளையை அடியொற்றிச் செய்வதாக நிச்சயித்து நியமனத்தை எதிர்பார்க்கின்றேன்; இன்னபடி செய், இன்னபடி செய் என்று விதித்தருளவேணும் என்று கைகூப்பி நின்று பிரார்த்திக்க, இந்த சீலகுணத்தை யநுபவிக்க இழிந்துவிட்டாராழ்வார்; அநுபவிக்குமிடத்துக் கைவல்யாநுபவம் போலே தனி யனுபவிக்கமாட்டாமல் நால்வரோடே கூடியநுபவிக்க விரும்பி நாட்டார் பக்கலிலே கண்வைத்தார்; அவர்கள் * உண்டியே உடையே உகந்தோடுவாராய் சப்தாதி விஷயங்களிலே அந்யபரராய் அவற்றோடே பணிபோந்திருந்தார்கள். அவர்களைவிட்டு, பரம ரஸிகனனஸர்வேச்வரனோடுதான் கூடி இக்குணத்தை யநுபவிப்போமேயென்று அவன்மேலும் கண்செலுத்தினார்; அவனோ ஆழ்வாரைக் கொண்டு போகையிலே விரைந்திருப்பானொருவனாகையாலே அதிலே அந்யபரனாய் ஆழ்வாருடைய அநுபவத்திற்கு உசாத்துணையாக மாட்டிற்றிலன். இப்படி ஸம்ஸாரிகளும் துணையன்றிக்கே ஸர்வேச்வரனும் துணையன்றிக்கே யானவிடத்து * யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம் * என்று முன்னமே சொல்லியிருக்கிறாரே யாழ்வார், தம்மோடு உடன் கேடான நெஞ்சிருக்க இனி என்னகுறையென்று தேறி அந்த நெஞ்சோடே யநுபவிக்கிறார்—நெஞ்சே! அவனுடைய மேன்மையிருந்தபடி கண்டாயே, அப்படி மேன்மையுடையவன் நம்பக்கல் இப்போது தாழநிற்கும்நிலை கண்டாயே; நாம் பெற்ற பேற்றின் கனமிருந்தபடி கண்டாயே! என்று சொல்லிச் சொல்லி உள்குழைகிறார்.

ஸர்வேச்வரனுகிறன் ஸர்வ நியாமகனுய் ஸ்வதந்திரனுயிருப்பானெருவன் என்று இதுவரை நினைத்திருந்தாராழ்வார்; ஆச்ரித பாரதந்திரியமே அவனுக்கு ஸ்வரூபமென்கிற உண்மையை இப்போதறிந்து இஃது என்ன சீலம்! என்று வியக்கிறுராயிற்று இப்பதிகத்தில். .... .... ... .... *

அருள்பெறுவாரடியார்தம்மடியனேற்கு * ஆழியான்
அருள்தருவானமைகின்றுன் அதுநமதுவிதிவகையே *
இருள்தருமாஞாலத்துள் இனிப்பிறவியான்வேண்டேன் *
மருளொழிநீமடநெஞ்சே! வாட்டாற்றனடிவணங்கே. (1)

* * *—நெஞ்சே! எம்பெருமான் இன்று நமக்குப் பேரருள் செய்யக் கோலா நின்றுன்; அதுவும் நாம் விதித்தபடியே செய்யவேணுமென்று நம்முடைய நியமனத்தை யெதிர்பாரா நின்றுன்; அந்தோ! இஃது என்ன குணம்! இக்குணத்தை யநுபவிக்க இந்நிலவுலகில் ஆளில்லாமையாலே நாம் திருநாட்டிலேபோய் மூதுவரோடு கூடியநுபவிக்கலாமா? வருகிறுயா? என்று தம் திருவுள்ளத்தோடே உசாவுகிறுர். இப்பாட்டுக்கு இரண்டாமடியே உயிர்நிலையானது. **ஆழியான் அருள் தருவானமைகின்றுன்**—நெஞ்சே! கையுந் திருவாழியுமான ஸர்வேச்வரன் நம்மேல் முழுநோக்காக நோக்கிப் பரம க்ருபையைப் பண்ணுவானுகப் பாரிக்கின்றுன். திருவாழியை ஒரு கண்ணுலே பார்ப்பது, என்னை யொருகண்ணுலே பார்ப்பதாகா நின்றுன்; திருவாழியை விட்டாலன்றே உம்மை நான் விடுவது என்று நின்றுன்; திருவாழியாழ்வான் முதலான நித்யஸூரிகள் பக்கலிலே பண்ணும் ப்ரேமத்தை யெல்லாம் என்னெருவன் திறத்து ஒரு மடைசெய்து பண்ணுநின்றுன். இங்ஙனே செய்வது ஆர்பக்கலிலேயென்ன, **அருள் பெறுவாரடியார்தம் அடியனேற்கு** என்கிறுர். எம்பெருமான் இப்படிப்பட்ட பேரருளைத் தம்பக்கலிலே செய்வதற்குக் காரணமுங் காட்டிக்கொண்டு சொல்லுகிறபடி. எம்பெருமான் பண்ணும் பேரருளுக்கு இலக்காயிருப்பார் சிலருண்டு; அவர்கள் நமக்கு ஸ்வாமிகள். அவர்கள் பக்கலிலே அவன் பண்ணின அருள் அவர்களளவிலே பர்யவஸியாமல் நம்வரையிலும் வெள்ளங் கோத்ததுகாண் என்கிறுர். நாம் அவன் தன்னையே பற்றியிருந்து அவனையே பார்த்திருந்தோமாகில் இப்பேரருள் பெறமுடியாதுகாண்; அவனருளுக்கிலக்கான அடியார்களையே நாம் பற்றினேமானது பற்றியே இப்பேரருளுக்கு நாம் இலக்காக வேண்டிற்று என்கிறுர். எட்டாம்பத்தில் *நெடுமாற்கடிமைப் பதிகம் பாடினதற்குப் பலன் இன்று பெற்றேம் என்கிறுர்போலும்.

'அவனே அருள்தருவானுயிருந்தான்; நீரோ அருளைப்பெற அவகாசம் பார்த்திருந்தீர்; அது கிடைக்கிறபோது பெறவேண்டியது தானே, பெற்றுக்கொள்ளும்; இதற்குத் தடையென்ன?' என்றது நெஞ்சு; அதற்குமேல் கூறுகிறுராழ்வார் **அது நமது விதிவகையே** என்று. நெஞ்சே! அவன் வெறுமருளையே தருவானுயிருந்தால் அதை நான் பெற்றுவிடமாட்டேனே? அவன் அருள் தருவதோடு நிற்கவில்லையே! *அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* என்று பாரித்துவந்த இளையபெருமாள் * **க்ரியதாமிதி மாம் வத** * என்று ஒரு நிர்ப்பந்தங்கொண்டாரன்றே. ஏவிக் கொள்ள வேணும் என்றுரே; அதுபோல இந்த ஸர்வேச்வரன் தானும் 'ஆழ்வீர்! என்னை ஏவி அடிமைகொள்வீர்' என்று நின்றுனே; என்னுடைய விதிநிஷேதங்களுக்குத் தான் கட்டுப்பட்டவனுய், இன்னதை இன்ன விதமாகச் செய்யுமாறு தன்னை நோக்கி விதிக்கவேணுமென்று வேண்டாநின்றுனே; இப்படியுமொரு அநியாயமுண்டோ? என்கிறுராழ்வார் நெஞ்சை நோக்கி.

எம்பெருமானுர்க்கு முன்புள்ளார் சிலர் ''அது நமது விதிவகையே'' என்பதற்கு 'அது நம்முடைய பாக்யாநுகுணமாக' என்று பொருள் பணித்தார்களாம்;

*தைவம் திஷ்டம் பாகதேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:* என்ற அமரகோசத்தை அவர்கள் கருத்திற் கொண்டனர் போலும். அப்படியன்றிக்கே எம்பெருமானுர் "அப்பொருள் பொருந்தாது, இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது; நாம் விதித்தபடியே செய்வானுயிருந்தான் என்னும் பொருளே இணங்கும்" என்றருளிச் செய்வராம். "அது நமது சொல்வகையே" என்றும் பாசுரம் பணித் திருக்கலாம்; அங்ஙனன்றி '**விதிவகையே**' என்றதில் ஒரு விசேஷமுண்டு. விதியைக் கடந்தால் ப்ரத்யவாயம் வருமென்று அஞ்சுவாரைப்போலே அஞ்சாநின்றுனும் எம்பெருமான். 'நமக்கு இஷ்டமானதை ஆழ்வாருடைய நியமனமின்றி நம் மனம் போனபடி செய்துவிட்டோமாகில் என்ன ப்ரத்யவாயம் நேருமோ? என்று அஞ்சி 'ஆழ்வீர்! விதிக்கவேணும், விதிக்கவேணும்' என்றுனும்; அதை அப்படியே அநுவதிக்கிருராழ்வார். "என்னைப் பரமபதத்திற்குக் கொண்டுபோ; வழியெல்லாம் குடைகளும் சாமரமும் தோரணமும் வாத்யமுமாக இருக்கவேணும்; நீ கைப்பந்தம் பிடித்துக்கொண்டு ஸ்வாமியெச்சரிக்கை! என்று சொல்லிக்கொண்டு முன்னே செல்லவேணும்; நடைபாவாடை பரப்பவேணும்; திருச்சின்னமும் காஹளியும் பணிமாறவேணும்; திருவிருத்தம் விண்ணப்பம் செய்வாரும் ஸ்தோத்ரரத்னம் சொல்லுவாரும் புடைசூழவேணும்—இப்படிப்பட்ட ஏற்பாடுகள் நீ செய்யவேணும்; என்று ஆழ்வார் திருவாக்கிலே விதிவாசகங்கள் வெளிவரவேணுமென்று எம்பெருமான் நிரீக்ஷிக்கிறபடி.

**நமது விதிவகையே** என்றவிடத்து ஈட்டில் "**தத் ததா அநுஜாநந்த முதாரவீக்ஷணை:**" என்ற ஸ்தோத்ர ரத்நஸூக்தியை ப்ரஸங்கித்து நம்பிள்ளையருளிச்செய்துள்ள திவ்ய ஸூக்திகளுக்கு விண்ணெல்லா முண்டோவிலை! என்ன வேண்டும்படியாயிரா நின்றது. கல்லுங்கரையநின்ற அந்த ஸ்ரீஸூக்திகளை அப்படியே அநுவதிப்போம்:—

"(நமது விதிவகையே) [ததாநுஜாநந்த முதாரவீக்ஷணை:] இது பட்டர்தாமே யருளிச்செய்ய நான் கேட்டேனென்றருளிச் செய்தார். சேனை முதலியார் சட்டையும் மயிர்க்கட்டும் கையும் பிரம்புமாய் வந்து புகுரப்புக்கவாறே நாச்சிமாரும் தானுமாய் ஸ்வைரமாக விருக்கிறவது தவிர்ந்து, நாச்சிமாரும் ஸிம்ஹாஸனத்தில் ஓரோ மூலைகளிலே யொதுங்க, தானும் ஸவிநயமாக இருக்குமாய்த்து வ்ருத்த ஸாமந்தரைக் கண்ட ராஜாக்களைப்போலே. இவர் தாமும் 'இவ்விருப்புக்குத் தண்ணீர்த் துரும்பாக வொண்ணுது' என்று ஜகந்நிர்வாஹத்துக்கு வேண்டுமவற்றைப் பாசுரப்பரப்பற விண்ணப்பஞ் செய்வராய்த்து. பிராட்டிமாரோடிருக்குமதிலும் இனிதாயிருக்குமிறே அவனுக்கு இவர்தம்மைக்காண. *ப்ரியேணவிறே. இன்னுனை ப்ரஹ்மாவாக்க வேணும் இன்னுனை மாற்றவேணும்' என்று வேண்டுமவற்றைச் சுருங்க விண்ணப்பஞ் செய்வர். ஐயர் யாதொன்று சொல்லிற்று அவையெல்லா மப்படியே' என்று கண்களாலே மேலெழுத்திட்டுக் கொடுக்கும்—இவ்வார்த்தை யருளிச்செய்தபோது கிடாம்பியாச்சானேடு அல்லாதாரோடு வாசியறக் குமிழி நீருண்டது. ஆச்சான் தான் பட்டருக்கு ஸ்நேஹித்திருக்கும் போர. இளையாழ்வான் ஆச்சானை 'பட்டர்தம்மையாச்ரயித்தவர்களிற் காட்டிலும் நீர் தாழ அநுவர்த்திப்பானென்?' என்று கேட்க, நீ அன்று கண்டிலைகாண்; எம்பெருமானுர் பட்டர்கையிலே புஸ்தகத்தைக் கொடுத்துத் திருமுன்பே ஒரு ச்லோகத்தை விண்ணப்பஞ் செய்வித்துத் திருப்பிரம்புக்குப் புறம்பாகக்கொண்டு புறப்பட்டுச் சுற்றும் பார்த்தருளி நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமாபோலே இவனை நினைத்திருங்கோள் என்றருளிச் செய்தார்." (இவை ஈட்டு ஸ்ரீஸூக்திகள்.)

**இருள் தருமாஞாலத்துளினிப்பிறவி யான் வேண்டேன்**—இது ஆழ்வார் தாம் தம் திருவுள்ளத்தோடே சொல்லுகிறபடி. "ஆழியானருள் தருவானமைகின்றுன் அது நமது விதிவகையே" என்று சொன்ன ஆழ்வாரை நோக்கி நெஞ்சு கேட்டது

'எம்பெருமானுடைய ஆசையிருக்கிறபடி தெரிந்து கொண்டேன், நீர் அவனுடைய ஆசையின்படியே ஒழுகுவதாயிருக்கிறீரா? இங்கேயே குணநுபவம் செய்வதாயிருக்கிறீரா?'' என்று. அதற்கு ஆழ்வார் விடை கூறினர் அவன்வழியே போவதாகத் தானிருக்கிறேனென்ருர். அதற்கு நெஞ்சு சொல்லிற்று ''வானுயரின்பமெய்திலென்? மற்றை நரகமே யெய்திலென்? என்று சொன்னவரன்றோ நீர். அங்குப்போனல் திருநாடு ஒன்றே; இங்கு *சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே, மதிட்கச்சி யூரகமே பேரகமே; பேராமருதிறுத்தான் வெள்ளறையே வெஃகாவே, பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர், ஆராமஞ் சூழ்ந்தவரங்கம், கணமங்கைக்காரார் மணிநிறக்கண்ணனூர் விண்ணகரம், சீரார்கணபுரம் சேறை திருவழுந்தூர், காரார் குடந்தை கடிகை கடன்மல்லை, ஏரார் பொழில்சூழிட வெந்தை நீர்மலை, சீராரும் மாலிருஞ் சோலை திருமோகூர், பாரோர்புகழும்வதரி வட மதுரை யென்றிப்படி நூற்றெழு திருப்பதிகளை யநுபவிக்கலாமே; ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போகவா நினைக்கிறீர்'' என்று. அதற்குமேல் ஆழ்வார் சொல்லுகிருர்—[**இருள்தரு மாஞாலத்து ளினிப் பிறவி யான் வேண்டேன்**] நெஞ்சே! இந்நிலம் இருள் தருமாஞால மென்பதறியாயோ? நித்யஸூரிகள் தாமே இங்கு வந்தாலும் அவர்களையும் மருளச் செய்யுமதன்றோ, இந்நிலம். நித்யஸூரிகளென்று என்ன? நித்யஸூரி நாதன்தானே வந்தாலும் அங்ஙனே யன்றோ? ***உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்*** என்று புகழப்பட்ட ப்ரஹ்லாதாழ்வானை யுமன்றோ மருளப்பண்ணிற்று இந்நிலம். இருக்கவிருக்க அஜ்ஞானத்தை வளர்ப்பதான இந்நிலத்திலே யிருப்பதை இனி யான் வேண்டேன்.—என்கிருராழ்வார்.

" இனியிருக்க யான் வேண்டேன் '' என்ன வேண்டுமிடத்து " இனிப்பிறவி யான் வேண்டேன் '' என்றதில் ஒரு மருமமுண்டு; அதாவது—***க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம்*** என்று ஸ்ரீபாகவதத்திற் கூறியபடி ஆழ்வார் ஆசைப் பட்டு வந்து பிறந்தவராதலால், இப்படி நான் ஆசைப்படப் பெற்றதாயினும் இப் பிறவி இனி வேண்டா; கலியுகத்தில் வந்து பிறந்து இந்த யுகத்தவர்களுக்குத் திருவாய்மொழி பாடித்தரவேணுமென்று ஆசைப்பட்டேன்; [இனி] அக்காரியம் நிறைவேறியானபின்பு இதுவரையிலும் மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்ததுபோல் இனிப்பிறக்க விரும்பமாட்டேனென்கிருர் என்பதாம்.

இப்படிச் சொன்ன ஆழ்வாரை நோக்கி மீண்டும் நெஞ்சு சொல்லிற்று— ஆழ்வீர்! உமக்கு ஒன்று நினைப்பூட்டுகிறேன்; கீழே நீர் திருவாறன் விளையை யநுபவிக்கும்போது எம்பெருமான் வந்து உம்மைத் திருநாட்டுக்கு அழைத்தான்; அப்போது " தீவினை யுள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும் பேறலுற்றால்........ திருவாறன் விளையதனை மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்னு மென் சிந்தனையே '' என்று சொல்லியிருக்கிறீர். அதனை மறந்தீரோ? 'இது பரமபதத் துக்குப் போம்வழி, இது திருவாறன் விளைக்குப் போம்வழி. எந்தவழியிற் செல்ல விரும்புகிறீர்?' என்றால் திருவாறன் விளைக்கே என்னெஞ்சு செல்லுமென்றீர்; அப்படியிருக்க அதற்குமாருக இப்போது சொல்லத்தகுமோ? என்றது (நெஞ்சு). அதற்கு மேல்சொல்லுகிருராழ்வார்—**மருளொழிநீ மடநெஞ்சே!**—அப்படி நான் நினைத் திருந்தது உண்மையே; ஆனல் இவ்விருள்தருமா ஞாலத்தின் தண்மையை அறிய வறிய அந்நினைவு மருளேயாய்த் தோன்றிற்று. நெஞ்சே! அந்தமருளை நீயும் தவிர்ந்திடு. உகந்தருளின நிலங்களிலுண்டான ஆதராதிசயத்தில் ஒருகுறையில்லை. ஆனல் ப்ரக்ருதிவச்யனாக்கி சப்தாதி விஷயங்களிலே கொண்டுபோய் மூட்டும் ஸம்ஸாரஸ்வபாவத்தை யுணர்ந்த பின்பு *இருபாடெரி கொள்ளியினுள்ளெறும்பே போல் நலிவுபடப்பாராதே. *பாம்போடொரு கூரையிலே பயிலப்பாராதே; பின்னை என் செய்யவேணு மென்கிருயோ;

**வாட்டாற்றானடி வணங்கே**—திருவாட்டாற்றெம்பெருமானுடைய மனோரதத்தின் வழியே யொழுகப்பார் என்றபடி. திவ்யதேசங்களை விட்டுப் பரமபதத்தேறப் போவதாக நிச்சயித்திருக்குமாழ்வார் இப்போது "வைகுந்தனடி வணங்கே" என்றன்றோ சொல்லப்ராப்தம்; அதைவிட்டு, மீண்டும் திவ்யதேசத்தில் நசை தோன்ற "வாட்டாற்றானடி வணங்கே" என்று சொல்லுவதென்? என்று சங்கைதோன்றும். கேண்மின்; இப்போது திருவாட்டாற்றில் வந்து காட்சிதரும் பெருமான் ஆழ்வாரைத் திருநாட்டுக்கு அழைத்துச் செல்ல விரைந்திருப்பவன்; அது மேற்பாசுரங்களில் வியக்தமாகவுள்ளது. ஆகவே, வாட்டாற்றானென்பதற்கு நமக்கு ஹிதகாமனாய் நம்மைக் கொண்டுபோக வந்திருப்பவனென்றிவ்வளவே பொருள். **அடிவணங்கே** யென்றதும்-அவன் வழியையே பின் செல்லப்பார் என்றபடி. வேறு அபிப்ராயமின்றிக்கே ஒரேவிதமான அபிப்ராயமுடையவன் என்பதைக் காட்டும்படியான அடிவணங்குகையைச் சொன்னது—'நமஸ்காரம் பண்ணு' என்ற பொருளில் சொன்னதன்று; அவனுடைய கருத்துக்கிணங்கியிரு என்றவாறு. இங்கே நம்பிள்ளையீடு;—நமக்கு ஹிதகாமனாய் வந்திருக்கிற அவன்வழியேபோய் அவனையநுபவிக்கப் பாராய். உகந்தருளின நிலங்களிலே வந்து நிற்கிறது நம்மை அவ்வருகே கொடுபோகைக்காயிருக்கும். நீயும் அவன்னினைவிலே போகப் பாராய். அடிவணங்குகையாவது—ஈரரசுதவிருகையிறே; அவன்கருத்திலே போகை." (1)

**வாட்டாற்றானடிவணங்கி மாஞாலப்பிறப்பறுப்பான் ***
**கேட்டாயேமடநெஞ்சே கேசவனெம்பெருமானை ***
**பாட்டாயபலபாடிப் பழவினைகள்பற்றறுத்து ***
**நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணினமே.** (2)

* * *—இப்பாட்டும் நெஞ்சோடே ஸம்வாதமாயிருக்கிறது. "ஆழியானருள் தருவானமைகின்றான்" என்று எம்பெருமான் அருள் செய்வதாகச் சொல்வதற்கு இங்கு விஷயமில்லையே; "பொய்ந்நின்றஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்புமிந்நின்ற நீர்மையினி யாமுறாமையென்று அடிதொடங்கியே நீர் பிரார்த்தித்தவரன்றோ. பலகால் நிர்ப்பந்தித்துக் கேட்டதற்குப் பலன்பெற்றால் அது அருள் பெற்றதாகுமோ? என்று நெஞ்சுகேட்க; அதற்கு விடையிறுக்கிறாராழ்வார்—அறிவிலியான நெஞ்சே! நாம் அபேக்ஷித்தது எவ்வளவு? பெற்றது எவ்வளவு? என்று ஆராயமாட்டிற்றிலையே; இப்போது எவ்வளவு பெற்றோமோ அவ்வளவும் முன்பு அபேக்ஷித்திருக்கிறோமாவென்று சிறிது விமர்சித்துப்பார். பொய்ந்நின்ற ஞானம் போகவேணும், பொல்லாவொழுக்கு கழியவேணும், அழுக்குடம்பு தொலையவேணும் என்று இவ்வளவே யன்றோ நாம் இரந்தது. அதாவது விரோதிகள் கழியவேணுமென்று இவ்வளவு மாத்திர மன்றோ நாம் வேண்டினது. நாம் பெற்றது இவ்வளவேயோ? பழைவினைகள் பற்றறுதற்கு மேற்பட, பாட்டாயபல்பாடப்பெற்றோம், நாட்டாரோடியல்வொழியப் பெற்றோம்; நாரணனை நண்ணப்பெற்றோம்; இவ்வளவும் அவனருள் பலித்தபடியன்றோ; இதை நன்கு உணர்ந்து பாராய் நெஞ்சே! என்று சொல்லும் முகத்தால் தாம்பெற்றபேற்றின் கனத்தைப் பாராட்டிக் கூறுகிறாராயிற்று.

**மாஞாலப்பிறப்பறுப்பான் வாட்டாற்றானடிவணங்கி**—எம்பெருமானையடிவணங்கி நாம் பிரார்த்தித்தது மாஞாலப்பிறப்பறுப்பது மாத்திரமே; மற்றொன்றன்று. ஆயினும் நாம்பெற்ற பேறுகாணாய். "கேட்டாயேநெஞ்சே" என்பது ஆனந்தமேலீட்டால் சொல்லுகிற வார்த்தை. **கேட்டாயே** யென்றது—நன்றாக ஆராய்ந்துபார் என்றபடி. நாம் பெற்றபேறு என்னவெனில், **கேசவனெம்பெருமானைப் பாட்டாயபலபாடி**—தன்னுடைய குழலழகைக் காட்டி நம்மையடிமைகொண்டான்; *பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்பாடலை நம்மை யிட்டுக் கவிபாடுவித்துக்கொண்டான். இது

பெருப்பேறன்றே? பச்சைப்பசும்பொய்கள்பேசி மானிடத்தைக் கவிபாடுவார் மலிந்தவுலகில் *என்னுனையென்னப்ப னெம்பெருமானைக் கவிபாடப் பெற்றதும், அதுதானும் ஒருநூறு இருநூறன்றிக்கே ஆயிரமாகப் பாடப்பெற்றதும் நாம் வேண்டிப்பெற்றதோ? இதற்குமேலே, **நாட்டாரோடியல்வொழிந்து**—உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலத்தாரோடு ஸங்கம் ஒழியப்பெற்றபடி கண்டாயே; "யானேயென்றனதே" என்று அஹங்காரமமகாரவச்யராயிருக்குமிந்த நாட்டாரோடு ஸங்க மறுகை ஸாமான்யமானதோ? இதற்கும்மேலே, **நாரணனை நண்ணினமே**—ஔபாதிகபந்துக்களைவிட்டு நிருபாதிகபந்துவான நாராயணனையே ஸகலவிதபந்துவுமாக நண்ணப்பெற்றோம். இவ்வளவும் நாம் இரந்து பெற்றதன்றிக்கே அவனருள் பலித்தபடிகாண்-என்றுராயிற்று. ... ... ... ... (2)

**நண்ணினம்நாராயணனை நாமங்கள்பலசொல்லி ***
**மண்ணுலகில்வளம்மிக்க வாட்டாற்ருன்வந்து * இன்று**
**விண்ணுலகந்தருவாளுய் விரைகின்ருன்விதிவகையே ***
**எண்ணினவாருகா இக்கருமங்கள்என்னெஞ்சே.** (3)

* * *—இப்பாட்டும் நெஞ்சோடே கொண்டாடிச் சொல்லுகிறது. நம்முடைய பேற்றுக்கு அவன் விரையும்படியாயிற்றே! இப்படியாகுமென்று நாம் கனவிலாவது எண்ணினதுண்டோ? நாமெண்ணினதொன்று, நிகழ்ந்தது மற்றொன்றாயிற்றே! இதுவென்! என்று வியக்கிருர். ப்ரேமம் தூண்டச் சொல்லுவார்க்கு இன்ன திருநாமந்தான் சொல்லவேணுமென்கிற நியதியில்லாமையாலே "**நாமங்கள் பலசொல்லி**" என்கிருர். **மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாறு**—பரமபதத்திலே எம்பெருமானுடைய திருக்குணங்கள் பகல்விளக்குபோலே அப்ரகாசமாயும் அல்பப்ரகாசமாயுமிருக்கும், இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பதிங்கே யாகையாலே, வளம் மண்ணுலகில் மிக்கதாயிற்று.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (184) "மோக்ஷதானத்தில் ப்ரணத பாரதந்த்ர்யம் வளம்மிக்க நதியிலே கரைபுரளும்" என்றருளிச் செய்தார். இங்கு, திருவாட்டாற்றை வளம்மிக்க நதியென்று வ்யபதேசித்து இதில் 'ப்ரணத பாரதந்த்ரியம் மிக மிக விளங்குமென்கையாலே இக்குணம் விளங்கப்பெறுகையே இத்தலத்திற்கு வளமிகுதியென்க. கேட்பாரற்ற ஸ்வதந்திரனுய் ஸர்வநியந்தாவாயிருக்கிற ஸர்வேச்வரன் "நமது விதிவகையே" என்று ஆழ்வார் பலகாலுஞ் சொல்லும்படி பரதந்திரனுய் நியாம்யனுயிருந்தானென்றால் இதனில் மிக்க வளமில்லையிறே.

"இன்று விண்ணுலகம் விதிவகையே தருவானுய் விரைகின்ருன்" என்று மூன்றுமடியை அந்வயித்துக் கொள்வது. [**இன்று**] நேற்றுவரை எதிர் பார்த்ததன்று இது; இன்று இங்ஙனே விடியக்கண்டதித்தனை. "விண்ணுலகில் வாழ்ச்சிதருவானுய்" என்னுமல் "விண்ணுலகம் தருவானுய்" என்றதை நோக்கி நம்பிள்ளையருளிச் செய்வது பாரீர்; "அங்கே ஒரு குடியிருப்பு மாத்ரமே கொடுத்து விடுவானுயிருக்கிறிலன்; *வானவர்நாடு* *ஆண்மின்கள் வானகம்* என்கிற பொதுவை யறுத்து நமக்கே தருவானுக த்வரியா நின்ருன்" என்று. [**விரைகின்ருன்**] எம்பெருமான் தான் மூட்டை கட்டிக்கொண்டு முன்னேபோவது, பின்னே ஆழ்வார் புறப்பட்டு வராமை கண்டு திரும்பிவந்து 'ஆழ்வீர்! வாரும் வாரும்' என்று சொல்லிப் பதரு நின்ருனும். இன்று இப்படிப் பதறுகிறவன் "தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ" என்று கதறினபோது எங்கே யுறங்கினுனென்று கேட்கவேண்டா? ஒரு காரியத்திற்காக வைத்திருந்தான்; அக்காரியம் முடியுமளவானவாறே விரைகின்ருனென்பது யுக்தமேயன்றே. (காரியமாவது—*தொண்டர்க் கமுதுண்ணச் சொன் மாலைகள் சொல்லுவிக்கை.)

விரைகின்ருனென்கைக்கு விஷயமுண்டோ? ஸர்வசக்தனுன தனக்கு ஆழ்வாரைக் கொண்டுபோக ருசியிருந்ததாகில் கொண்டுபோகத் தடையென்ன? தடுப்பாரொருவரு மில்லையே, 'விரைகின்ருன்' என்கையாலே ஏதோ தடையிருப்பது போலவன்றோ தெரிகிறது; அது என்னதடை? என்று கேட்க நேரும். கேண்மின்; தன்னிஷ்டப்படி ஆழ்வாரைக் கொண்டுபோவதில் அவனுக்கு ஈஷத்தும் ருசியில்லை; 'இப்படிசெய், இப்படிசெய்' என்று ஆழ்வார் விதிக்க, அதன்படி நடந்துகொண்டால்தான் தனக்கு ஸ்வரூபஸித்தியென்று அவன் நினைத்திருக்கையாலே அந்த நியமனம் பெறுவதற்காகவே அவன் விரைகின்ருனென்றுணர்க; அதற்காகவே முதற்பாட்டிற்போல இப்பாட்டிலும் "விதிவகையே" என்றது.

விரைகின்ருனென்றதில் ஒரு சிறந்த சாஸ்த்ரார்த்தம் தொனிக்கும்; உலகில், உடைமையைப் பெறுவது உடையவனுக்கே பணி. உடைமை தவறிவிட்டால் அது கரையமாட்டாது, அதைத் தேடிப்பெற்றுப் பூண்டுகளிக்கவேணுமென்று உடையவன்தான் விரைவது இயல்பு, அதுபோல, சேதநலாபம் ஈச்வரனுக்கே யாகையாலே அவன் விரைவதுதான் ப்ராப்தம்; ஸபலமாகக் கூடியதும் அதுதான்—என்பது சாஸ்த்ரார்த்தம்.

**எண்ணினவாருகா**—* பொய்ந்நின்றஞானமும் ...... இந்நின்ற நீர்மை யினியாமுருமை* என்று இவ்வளவேயன்றோ நாமெண்ணினது. அவன் இங்ஙனே விரைய வேணுமென்ருவது, விரையப்போகிருனென்ருவது எண்ணினோமோ? [இக்கருமங்கள்] எம்பெருமான் விஷயமான காரியமெல்லாம் இப்படியே யென்றவாறு. நாம் எண்ணினவளவுக்குப் பதின்மடங்காகக் காரியம் பலிப்பது பகவத்விஷயத்திலே யென்க. லௌகிகரிலே சிலரை நோக்கி "என்காரியத்திற்கு நீயே கடவை" என்கிருேம்; அவர்களும் அப்படியேயென்று தலை துலுக்குவதுண்டு; ஆயினும் எண்ணினதில் நூற்றிலொருபங்கும் பலிக்கக் காணமாட்டோம்; சிறிது பலித்தாலும் அதற்கும் நம்முடைய முயற்சியே ஊடுருவச் செல்லும். இதற்கு மாருயிருக்கும் பகவத்விஷயம்.

இப்படிப்பட்ட கனத்தபேறுபெறுகைக்கு அடி நீயேயென்று நெஞ்சைக் கொண்டாடிச் செல்லுகிருர் என்னெஞ்சே யென்று, என் என்பதைப் பிரித்து என்னே! யென்கிற பொருளிற்கொண்டு, வியந்து சொல்லுகிறவாருகவும் கொள்ளலாம். (3)

**என்னெஞ்சத்துள்ளிருந்து இங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து ***
**வன்னெஞ்சத்திரணியனை மார்விடந்தவாட்டாற்ருன் ***
**மன்னஞ்சப்பாரதத்துப் பாண்டவர்க்காய்ப்படை தொட்டான் ***
**நன்னெஞ்சே! நம்பெருமான் நமக்கருள்தான்செய்வானே. (4)**

* * *—கீழ் முதற் பாட்டிலும் மூன்ரும் பாட்டிலும் "விதிவகையே" என்று, எம்பெருமான் நியாமகனுயிருக்கு மிருப்புத்தவிர்ந்து நியாம்யனு யிருக்கும்படியை யருளிச்செய்தாரே, ஸர்வேச்வரனிடத்தில் இது ஸம்பவிக்குமோ வென்று சிலர் சங்கிப்பர்களென்று கருதி அந்த சங்கைக்குப் பரிஹாரமாக இப்பாட்டு அருளிச் செய்கிறபடி. இப்பாட்டில் இரண்டாமடியும் மூன்ருமடியும் உயிர்நிலையாயிருக்கும். எம்பெருமான் தான் அடியார்கட்கு விதேயனென்னுமிடத்தை ப்ரஹ்லாதாழ்வான் திறத்திலும் பாண்டவர்கள் திறத்திலும் காட்டினுனயிற்று. முன்னே நின்ற தூணைக்காட்டி "நீ சொல்லுகிறபகவான் இங்குளனோ?" என்று இரணியன் கேட்க, எங்குமுளனென்று ப்ரஹ்லாதன் சொல்ல, அவனுடைய சொல்லை மெய்ப்பிக்கைக்காகவே அப்போதே அத்தூணில் நின்றும் தோன்றினபடியாலே இந்த அபதானத்தாலே பக்த விதேயத்வம் வெளியாயிற்று. அர்ஜுநன் *ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத * என்றுசொல்ல, அப்படியே உபய ஸேனைகளி

னிடையே ஸேனையைக் கொண்டுபோய் நிறுத்துவது முதலிய பலகாரியங்களினால் அவ்வவதாரத்தில் ஆச்ரிதவிதேயத்வத்தை வெளியிட்டுக் கொண்டானாயிற்று.

**என்னெஞ்சத்துள்ளிருந்து**—நெடுங்காலம் ஸம்ஸாரத்திலே விஷயாந்தரங் களிலே மண்டிக் கிடந்தமையாகிற தண்மைதோற்ற **என்னெஞ்சு** என்கிறார் ஆழ்வார்; ஆழ்வாருடைய மமகாரத்திற்கு இலக்கான வஸ்துவே நமக்கு உத்தேச்ய மென் றிருக்கும் எம்பெருமான் இவர் **என்னெஞ்சு** என்றதுவே ஹேதுவாக மேல்விழுந்து உள்ளே புகுந்தான்; மறுபடியும் வெளியே வந்தால் மீண்டும் உள்ளேபுக வழி கிடைப்பது அரிதாகுமோ வென்கிற அச்சத்தினால் அங்கேயே ஸ்தாவரப்ரதிஷ்டை யாயிருந்தான்; அப்படியிருந்து செய்வதென்? என்னில், இங்கு **இருந்தமிழ் நூலிவை மொழிந்து**=இப்படிப்பட்ட திருவாய்மொழியை யருளிச்செய்தானாயிற்று. "தொண் டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் **சொன்னேன்**" என்கிறார் ஒருகால்; மற்றொருகால் இத்தமிழ் நூலை அவன்மொழிந்தானாகச் சொல்லுகிறார்; உண்மைதானிருந்தபடி யென்னென்னில்; இரண்டும் உண்மையே. வடமொழி வேதத்தைப்பற்றிச் சொல்லு மிடத்து ***அநாதி நிதநா ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா*** என்றது. 'அநாதிநிதநா' என்று சொல்லி வைத்து ஸ்வயம்புவா உத்ஸ்ருஷ்டா வாக், என்றதில்லையோ? அதுபோலவே இங்குங் கொள்க.

இப்படி திருவாய்மொழியைப் பேசி வெளியிடுவித்துக்கொண்ட குணம் பரத்வமன்று ஸௌலப்யமே யென்று காட்டிக்கொண்டு மேல் அருளிச்செய்கிறார் **வன்னெஞ்சத்திரணியனை மார்விடந்த**—இங்கு இரணியன் மார்விடந்ததைச் சொல்லு வதில் நோக்கில்லை; சிறுக்கனுக்கு உதவினபடியைச் சொல்லுவதே விவக்ஷிதம். சிறுக்கன் நினைத்தபடி செய்தவன் நான் சொன்னபடி செய்யானோ என்கைக்காக இது சொல்லிற்று. மன் அஞ்ச—*மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழிய என்றபடி. பாண்டவர்க்காய்ப் படை தொட் டது—ஆயுதமெடேனென்று சொல்லிவைத்து ஆயுதமெடுத்தது. பெரியாழ்வார் திருமொழியில் *மன்னர் மறுக மைத்துனர்மார்க்கொரு தேரின்மேல் முன்னங்கு நின்று மோழை யெழுவித்தவன் மலை* என்று ஒரு கதை யருளிச்செய்திருப்பதுண்டு; அதையும் இங்கு நம்பிள்ளை யெடுத்துக்காட்டியருளினர். அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகள் இளைத்தபோது, கடினமானவிடங்களிலும் நீர் நரம்பு அறியுமவ னாகையாலே வாருணாஸ்த்ரத்தைவிட்டு அங்கே நீரை யுண்டாக்கிக் குதிரைகளை விட்டு நீரூட்டிப் புரட்டி யெழுப்பிக் கொண்டுபோனானென்பது கதை. இதைக் கண்ட எதிரரசர்கள் 'இவனுடைய ஆச்ரித பக்ஷபாத மிப்படியிருக்கையாலே நாம் இவர்களை வெல்லுகை கூடுமோ!' என்று குடல்மறுகினராகையாலே இங்கு **மன்னஞ்ச** என்றது. மன்னர் அஞ்ச என்றபடி. .... ... .... (4)

---

அன்பர்களே! பகவத் விஷயமென்பது ஒரு பெரிய சாஸ்த்ரம். இதற்கு அதிகாரிகள் துர்லபர். பகவத் விஷய ப்ரவசனம் செய்பவர்களெல்லாரும் அதி காரிகளல்லர்; ச்ரோதாக்களென்று பேர்பெற்றவர்களெல்லாரும் அதிகாரிகளல்லர். எம்பெருமானுடைய தயை, வாத்ஸல்யம் என்னுமிரண்டு திருக்குணங்களில் நெடுநாளாகவே விப்ரதிபத்தி கொண்டிருக்குமவர்கள் பகவத் விஷயாநுபவத்திற்கு நெடுந்தூரத்தில் நிற்க வேண்டுமவர்கள். ... .... ... *

# ஸம்பந்தஜ்ஞானமே ஸகலநன்மைகளுக்கும் மூலம்

எம்பெருமான், சேதனர்களையும் அசேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன். அவன் பெருமையில் தலைநின்றவன். நாம் சிறுமையில் தலை நிற்பவர்கள். நாம் அப்பெருமானை வழிபடுவதற்கு உரியோம். அப்பெருமான் திறத்து நாம் செய்யக்கூடிய வழிபாடுகள் பல வகைப்பட்டிருக்கும். அவற்றைப்பற்றின விரிவுகள் சாஸ்திரங்களில் விசதமாகக் காணக் கிடைக்கும். அந்த வழிபாடுகளெல்லாம் ஒருபுறமிருக்கட்டும். அவாப்த ஸமஸ்தகாமனுன பெருமானுக்கு நாம் செய்யும் வழிபாடுகள் என்ன பயனைத் தரப்போகின்றன! நம்முடைய ஸ்வரூபம் நிறம் பெறுதற்காகவே நாம் வழிபடுவோமத்தனை. எம்பெருமான் அல்ப ஸந்துஷ்டன். அநாதி காலமாக அவனோடு எதிரம்பு கோக்கின்ற (அதாவது—விவாதப் படுகின்ற) கொடிய ஸம்ஸாரிகள் நாம். இந்நிலைமையில் நின்றும் நாம் நீங்கி அவனோடு நமக்குண்டான ஒழிக்க வொழியாத உறவுகளைத் தெரிந்துகொண்டோமாயின் இதுவே பரம பூஜையாகும். ஸம்பந்தஜ்ஞான மாத்திரமே நமக்கு, மேலான நன்மைகளுக்கு எல்லை; அஃது உண்டானல் நாம் எம்பெருமானோடு விவாதப்படமாட்டோம். விவாதம் தொலைந்ததென்னில் எவ்விதமான பணிவிடைகளும் நாம் செய்தோமாவோம்.

மநுஸ்ம்ருதியில் (8—92) ''யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித:, தேந சேத் அவிவாதஸ் தே மா கங்காம் மா குரூந் கம:'' என்று சொல்லிற்று. இதன் கருத்தாவது:—ஸர்வநியாமகனும் தண்டதரனும் (அல்லது ஸூர்யவம்சத்திற் பிறந்தவனும், அல்லது ஆதித்யமண்டலவாஸியாயும்) எல்லார்க்கும் இனியனுயுமிருக்கிற எம்பெருமான் உனது உள்ளத்தினுள்ளேயுளன்; அவனோடு விவாதம் நெடு நாளாக அநுவர்த்தித்துக்கொண்டு வருகிறது; அதாவது, இந்த ஆத்ம வஸ்துவை அவன் தன்னுடையதாக அபிமானித்தால் அதற்கு இசையாதே 'இது என்னுடையது தான்' என்று செருக்கியிருப்பதுவே விவாதம். இது தொலைந் தொழியுமாகில், கங்கை முதலிய புண்ய தீர்த்தங்களில் குடைந்தாடப் போகவும் வேண்டா; குருக்ஷேத்ரம் முதலிய புண்ய க்ஷேத்ரங்களை ஸேவிக்கப் போகவும் வேண்டா. அஹங்கார மமகாரங்களை உள்ளே வைத்துக்கொண்டு பிராயச்சித்தம் பண்ணுகையாவது ஒரு பாத்திரத்தினுள்ளே அசுத்த வஸ்துவை யிட்டு வைத்து மேலே பளபளவென்று சுத்தி செய்வது போலாதலால், உள்ளே எம்பெருமானோடு விவாதத்தை வைத்துக்கொண்டே க்ஷேத்ர தீர்த்தயாத்திரை செய்வது எதற்கு? அந்த விவாதம் தொலைந்து விடின் இருந்தவிடத்திலேயே பரம சுத்தியுண்டாதலால் ஒரு க்ஷேத்திரத்தையும் ஒரு தீர்த்தத்தையும் தேடிப்போக வேண்டா என்றபடி. ஆகவே விவாதம் நீங்குமளவே வேண்டுவது. கூரத்தாழ்வானும் வரதராஜஸ்தவத்தில் ''த்வத்தாஸ்யமஸ்ய ஹி மம ஸ்வரஸப்ரஸக்தம் தச்சோரயந்நயமஹம் கில சஸ்கல ப்ராக், த்வம் மாமகீந இதி மாம் அபிமந்யஸேஸ்ம ஹஸ்தீச! ஸம்ப்ரமய நஸ் தமிமம் விவாதம்''—என்ற ச்லோகத்தினுல் இதனைத் தெரிவித்தருளினர். ஸம்பந்தவுணர்ச்சி உறைப்பாக உண்டாவதுதான் விவாதம் தொலைந்தபடியாகக் கருதத்தக்கது. ஸம்பந்தஜ்ஞான முண்டான வளவிலேயே நாம் வாழ்ச்சி பெற்றோமாவோம். இதுபற்றி ஈடு முப்பத்தாறுயிரப்படியில் (1-2-7) ஒரு இதிஹாஸம் காட்டப்பட்டுள்ளது. அதனைத் தெளிய உரைப்போமிங்கு:

ஒரு நகரத்தில் ஒரு வணிகர் தலைவனிருந்தனன். அவன் வெளி நாடுகளில் நீண்ட காலம் வஸித்து வர்த்தகஞ் செய்து விசேஷமாகப் பொருள் படைக்க விரும்பி த்வீபாந்தர

யாத்திரை செய்ய முயன்ருன். அத்தருணம் அவனது மனைவி கருவுற்றிருந்தாள். அப்போதே அவன் புறப்பட்டு த்வீபாந்தரம் சென்று சேர்ந்தனன். பிறகு இரண்டொரு மாதங் கடந்த பின் அவனது மனைவி ஊரில் ஒரு புதல்வனை யீன்றுள். அம்மகன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகச் சுக்கிலபக்ஷச் சந்திரன் போன்று வளர்ந்து வருகின்ருன். த்வீபாந்தரத்தில் வர்த்தகஞ்செய்து வாழ்ந்து கொண்டிருக்கும் அவ்வணிகன் மகப்பேறு உண்டான செய்தியை யறிந்து பெருமகிழ்ச்சி கொண்டு விரைவிலேயே ஊர்வந்து சேர்தற்குப் பெருமுயற்சி செய்தும், மேன்மேலும் வர்த்தகத்தில் மீதூர்ந்துசென்ற மிலைப்பினுல் கடுக மீண்டுவரமுடியாமல் நெடுங்காலம் அங்கேயே தங்கி விட்டான். மகன் தானும் உரிய வயது வாய்ந்தவளவில் தனது குலத் தொழிலாகிய வர்த்தகத்தையே கைப்பற்றி வந்தான். வயது முதிர்ந்த வளவிலும் இவனது தகப்பன் த்வீபாந்தரத்திலேயே வாழ்கிருன். பின்பொரு நாள் அவ்வணிகனது மகன் தொழில் முறையில் வெளி நாட்டிற்குச் சென்றிருந்து பல சரக்குக்களுடன் கடல் வழியாய் ஊர்த்துறை முகம் வந்து சேர்ந்தான். அவன் வந்த கப்பலிலேயே அவனது தந்தையும் த்வீபாந்தரத்திலிருந்து பல மூட்டைகளுடன் ஊர் வந்தனன். அந்தக் கப்பல் துறைமுகஞ் சேர்ந்தவுடனே குமாரன் தனது மூட்டைகளை இறக்குவதாக உத்தேசித்த ஓர் இடத்திலேயே தகப்பனும் தான் கொணர்ந்த மூட்டைகளை இறக்க நினைத்தனன். இவ்விருவரும் தங்களுக்குள்ள பித்ரு புத்ரபாவ ஸம்பந்தத்தை அறியாதவர்கள்; 'இவன் நம் மகன்' என்று தந்தை அறியான். 'இவர் நம் தகப்பஞர்' என்று மகனுமறியான். உண்மையில் இவர்கட்கு இவ்வுறவுமுறை தெரிவதற்கு ப்ரஸக்தியில்லையே. இக்குமாரன் பிறப்பதற்கு முன்னமே யன்ருே அவ்வணிகன் வெளிநாடு சென்றிட்டான், ஆகவே 'இவன் வெளி நாட்டு வர்த்தகன் என்று மகன் பாவிக்கலானுன். தந்தையும் மகனை அங்ஙனமே பாவித்தான். இறக்குமதி யிடத்தைப்பற்றிய விவாதம் இவர்கட்கு முற்றிவிட்டது. 'இவ் விடத்தை நானே முதலில் உத்தேசித்தேன்' என்று இருவரும் நெடும்போதாக வாதாடு கின்றனர். அப்போது இவ்விருவருடையவும் உறவுமுறையை உணர்ந்திருப்பாளுெரு கிழவன் கண்டு 'அந்தோ! உறவு அறியாமல் இது என்ன விவாதம்?' என வருந்தி 'இவன் உன் தந்தை, நீ அவனது மகன்; ஆயிருக்க ஏதுக்கு இங்ஙனே வீண்விவாதம்?' என்றறிவித்தனன். அதன்பிறகு அங்கு என்ன நடந்திருக்கவேணும்! ஸம்பந்த உணர்ச்சி யுண்டானவுடனே கீழிழந்த நாளைக்குச் சோகித்து, இருவர்சரக்கும் ஒருசரக்காய், தந்தை ரக்ஷகனுய், மகன் ரக்ஷ்யனுய் விவாதம் தொலைந்து பரமரஸம் தலைப்பற்றி வாய்க்கொண்டவாறு பேச்சுக்கு நிலமாமோ?

அதுபோலவே நாமும் நிருபாதிக பிதாவாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய "உன்றன்னோடுறவேல் நமக்கு இங்கொழிக்க வொழியாது" என்னும்படியான உறவின் உறுதியை உற்று நோக்கி ஈச்வரன் "த்வம் மே" [நீ எனக்கு அடியன்] என்றுல், "அஹம் மே" (நான் எனக்கே உரியேன்) என்னும் விவாதத்தை விட்டொழித்தால் "பொன்னுலகாளீரோ புவனி முழுதாளீரோ" என்னும்படியாக உபயவிபூதியும் நாம் தாராளமாக அநுபவிக்கும் செல்வமாகுமன்ருே.

மாலைப்பொழுதில் விஹாரார்த்தமாக வெளியே சென்ற ராஜகுமாரன் அழகியதொரு தோட்டத்தைக்கண்டு உள்ளே புகுந்து திளைக்க நினைத்தும் கட்டுங்காவலுமாயிருந்தது கண்டு அஞ்சி நிற்குமளவில் 'இஃது உன் தகப்பஞருடைய தோட்டங்காண்' என்று ஒரு பெரியார் தெரிவிக்கவே, பிறகு தேங்காதே புக்கிருந்து திளைக்கலாயினன் என்றவொரு கதையையுங் காட்டியருளினர் நம்பிள்ளை. ஸம்பந்தவுணர்ச்சியினுகும் நன்மை சொல்லுந்தரமன்று.

# நவவிதஸம்பந்த விவரணம்

எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள ஸம்பந்தம் ஒன்றன்று, இரண்டன்று ; ஒன்பது வகையான ஸம்பந்தங்கள் திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்திலிருந்து கிடைக்கின்றன. அத்திருமந்திரம் நமக்கு மங்கலஸூத்ரம் போன்றது என்று ஆசார்யர்கள் அருளிச் செய்கிறார்கள். உலகில் ஒரு கன்னிகையின் கழுத்தில் தாலி ஏறினவாறே தம்பதிகளுக்கு பர்த்ரு பார்யாஸம்பந்தம் என்ற ஒரு உறவு ஏற்பட்டதாகும். திருமந்திரமாகிற தாலி நமது கழுத்தில் ஏறினவாறே ஒரு உறவு அல்ல; ஒன்பது உறவுகள் ஏற்பட்டனவாகும்.

எங்ஙனே யென்னில் ; அதில் முதல் பதம் ப்ரணவம். அது அகாரமென்றும் உகாரமென்றும் மகாரமென்றும் [மூன்றக்ஷரமான] மூன்று பதங்கொண்டது. முதற்பதமான அகாரத்தில் மூன்று உறவுகள் தோன்றும். 1. பிதாபுத்ரபாவம். 2. ரக்ஷ்ய ரக்ஷகபாவம். 3. சேஷசேஷிபாவம். அந்த ஒரு அக்ஷரத்தில் இந்த மூன்று உறவுகள் எங்ஙனே தோன்றுகின்றன வென்னில் ; அகாரத்திற்கு ப்ரக்ருதி சக்தியென்றும் தாதுசக்தியென்றும் இரண்டு வகையான சக்திகளுண்டு. "அகாரோவை ஸர்வா வாக்" என்றும் "அகர முதலவெழுத்தெல்லாம்" என்றும் சொல்லுகிறபடியே அகாரமானது எல்லா எழுத்துக்களுக்கும் முதன்மையாயிருந்துகொண்டு, தனக்கு அர்த்தமான எம்பெருமான் உலகுக்கெல்லாம் முதல்வன் என்று காட்டுதலாகிறவிது ப்ரக்ருதி சக்தியெனப்படும். "ஆதிபகவன் முதற்றேயுலகு" என்ற குறளும் இதனையே காட்டிற்றுகும். ஆகவே, அகாரத்தில் ப்ரக்ருதிசக்தியினால் ஏற்பட்டவுறவு கார்யகாரண பாவம் (அல்லது) ஜந்ய ஜநகபாவம், (அல்லது) பிதா புத்ரபாவம் என்பதாம்.

அந்த அகாரமானது (அவ-ரக்ஷணே) என்கிற தாதுவிலிருந்து தேறினதாகையாலே எம்பெருமான் ஸர்வரக்ஷகன் என்றதாகும். இதனால் (2) ரக்ஷ்ய ரக்ஷகபாவமாகிற வுறவு தேறிற்றுகிறது. இதுதான் தாது சக்தி ஸித்தமெனப்படும்.

இந்த அகாரத்தின்மேல் வியாகரண சாஸ்த்ரப்படி (வைதிக ப்ரக்ரியையில்) சதுர்த்தீ விபக்தியிருந்து லோபித்ததாகக் கொள்ளப்படுகிறது. இல்லாவிடில் அந்வயிக்கவே மாட்டாது. அந்த விபக்தியானது 'அவனுக்கு சேஷப்பட்டது' என்கிற பொருளைக் காட்டுதலால் (3) சேஷ சேஷி பாவம் என்கிற வுறவு தேறிற்று. ஆக அகாரத்தில் மூன்றுறவுகள்.

இனி அடுத்துள்ள உகாரமானது அவதாரணப் பொருளதாய் எம்பெருமானுக்கே சேஷப்பட்டது என்று காட்டுதலால் "கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானையல்லா லறியாக்குலமகள் போல்" (பெருமாள் திருமொழி) என்கிறபடியே (4) பதிபத்நீபாவமாகிற உறவு தேறுகின்றது.

அதற்கு அடுத்துள்ள மகாரமானது "மந-ஜ்ஞாநே" "மந-அவபோதநே" என்கிற தாதுக்களிலிருந்து நிஷ்பந்நமாகி ஜ்ஞாதாவான ஆத்மாவைச் சொல்லுதலால் (5) ஜ்ஞாத்ரு ஜ்ஞேய பாவமென்கிற உறவு தேறிற்று. எம்பெருமான் அறியப்படுமவன், ஆத்மா அறிகின்றவன் என்றவாறு. "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிற பொய்கையார் பாசுரம் இங்கு அநுஸந்தேயம்.

அதற்குப்பிறகு உள்ள நம: பதத்தினால் தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் தனக்கு எவ்விதமான உரிமையும் இல்லையென்று காட்டுகிற முகத்தினால் ஆத்ம வர்க்கமெல்லாம

எம்பெருமானுடைய ஸொத்து என்று காட்டுதலால் (6) ஸ்வஸ்வாமி பாவம் என்கிற வுறவு தேறிற்றுகிறது.

இனி நாராயணபதத்தை யெடுத்துக்கொண்டரல் இதற்குத் தத்புருஷ ஸமாஸ மென்றும், பஹுவ்ரீஹி ஸமாஸமென்றும் இருவகையான வ்யுத்பத்தி மார்க்கங்கள் கொள்ளப்பட்டு, நாரபதார்த்தமான ஸகல வஸ்துக்களுக்கும் எம்பெருமான் ஆதாரமென்றும், அந்த ஸகல வஸ்துக்களையும் தான் ஆதாரமாகவுடையவனென்றும் தெரிந்துகொள்ளு கிறோம். ஆதலால் **நாராணும் அயநம்** என்கிற தத்புருஷனுல் (7) ஆதாராதேயபாவ மென்கிற உறவு தேறுகின்றது. **நாரா: அயநம் யஸ்ய ஸ:** என்கிற பஹுவ்ரீஹியால் (8) சரீரசரீரிபாவமென்கிற வுறவு தேறுகின்றது. நாரங்கள் பகவானிடத்திலே யிருக்கின் றன என்பது தத்புருஷ ஸித்தம். நாரங்களிலே பகவானுளன் என்பது பஹுவ்ரீஹி ஸித்தம். அவற்றிலே இவனிருப்பதாவது அவற்றை உடலாகக்கொண்டு தான் அவற்றுக்கு உயிராக இருப்பதேயாதலால் இதனுல் சரீராத்மபாவம் ஸித்தித்ததென்னக் குறையில்லை.

இனி அந்த நாராயண பதத்திலுள்ள சதுர்த்தியானது, காகாக்ஷிந்யாயத்தாலே முன்னும் பின்னும் தன்னிடத்திலும் அந்வயிக்கின்ற நமஸ்ஸினுல் பரிஷ்காரம் பெற்று, நாராயணனுக்குச் செய்யப்படுகின்ற கைங்கரியத்தின் போகமும் அவனுக்கேயன்றி இந்த ஜீவனுக்கில்லையென்று நிஷ்கர்ஷித்துக் காட்டுதலால் (9) போக்த்ருபோக்யபாவம் என்கிற உறவைத் தெரிவிக்கின்றது. எம்பெருமான் போக்தா, ஜீவாத்மா போக்யன் என்றவாறு. ஜீவாத்மாவை போக்தாவாகவும் எம்பெருமானை போக்யனுகவும் கொள்வதும் ஒருபுடையுண் டெனினும் திருமந்திரத்தில் வடிக்கட்டின பொருள் முந்துறப் பணித்ததேயாகும். ஆகத் திருமந்திரத்தினுல் நவவித ஸம்பந்தங்கள் தெரியவந்தன. இவற்றைச் சிந்தையில் பதிய வைத்துக்கொள்வதற்காக "பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி: ஸ்வாம்யா தாரோ மமாத்மா ச போக்தாசாத்யமநூதித:" என்கிற ச்லோகத்தைப் பெரியார் பணித்தனர்.

---

# நம்பெருமாள் திருமஞ்சனத்தில் பட்டருடைய சடுபாடு

எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள நவவித ஸம்பந்தங்களையும் நாம் உணரப்பெரு விடினும் "அவன் சேஷி, நாம் சேஷபூதர்" என்று இத்தனையேனும் அறிய ப்ராப்தம். இவ் வளவையே எம்பெருமான் எதிர்பார்த்திரா நின்றுன். கூரத்தாழ்வான் திருக்குமாரராகிய ஸ்ரீ பராசரபட்டர் கோயிலில் வாழும் நம்பெருமாளுடைய திருமஞ்சனங்களை ஸேவிக்குங் காலங்களில் அந்த ஸந்நிவேசத்தில் ஈடுபட்டும் வடிவழகில் ஈடுபட்டும் சமத்காராதிசயம் பொலியப் பலச்லோகங்களை அருளிச்செய்திருக்கிறுர். அவை நாளைக்கும் அவருடைய திருவம்சஸ்தர்களால் திருமஞ்சன ஸமயங்களில் விண்ணப்பம் செய்யப்பட்டு வருகின்றன. அவற்றுள் "**த்வம் மேஹம் மே**" என்கிற ஒருச்லோகம் மிகவும் அற்புதமாக அமைந்தது. இதனை நம் ஆசாரியர்கள் வ்யாக்கியான க்ரந்தகங்ளிலே கையாண்டு வருகின்றனர். இதன் அரிய பெரிய பொருள் இங்கு விவரிக்கலாகிறது. ஸ்ரீ ரங்கநாதன் தோளிணைமேலும் நன் மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையை யுடையனுய்த் திருமஞ்சனம் கொண்டருள ஸந்நத்தராயிருக்கும்படியைப் பார்த்தால் பிரமாணம் செய்ய ஸித்தராயிருக்கிறுரோ! என்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படியுள்ளது என்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறுர். உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் துளசிமாலையை

யணிந்து கொண்டு ஒரு முழுக்குப்போடுவது வழக்கமாதலால் எம்பெருமானும் அங்ஙனே செய்கிருனே என்று உல்லேகிக்கிருர். பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை எம்பெருமானுக்கு என்ன வந்தது என்னில், உலகத்தில் பிரமாணம் செய்பவர்கள் எதற்காகச் செய்வது வழக்கம் என்று பார்த்தால், ஒருவன் தன்னுடைய ஸொத்தைப் பிறன் கொள்ளை கொண்டால் அதைத் தனக்கு ஸ்வாதீனப்படுத்தித் தரவேணுமென்று நியாயாலயத்தில் விண்ணப்பம் செய்துகொண்டு உண்மையில் அந்த ஸொத்து யாருடையது என்று தெரிந்து கொள்வதற்காக ஸாக்ஷி விசாரணை முதலியன செய்யப்படுங்காலத்திலே தகுந்த ஆதாரங் களைக்கொண்டு உண்மையை ஸ்தாபித்துக்கொள்ள முடியாமல் அந்தோ! நம்முடைய ஸொத்தை அநியாயமாய் இழந்துவிட நேருகின்றதே! என்கிற அனுதாபமுடையார் கடைசியாக ஒரு வார்த்தை சொல்லுவது—"இது என்னுடைய சொத்துதான் என்று பிரமாணம் செய்ய நான் துளசிமாலையணிந்து முழுக்கிட்டுவிடுகின்றேன்; நியாயாதிபதிகள் அது கொண்டாவது உண்மையுணரவேண்டும்" என்பர்கள். நியாயாதிகாரிகளும் அதனை ஆதரித்துத் தீர்ப்புக்கொடுப்பதுண்டு. இது இன்னமும் வழக்கத்திலுள்ளது இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் பிரமாணம் செய்யவேண்டிய ஆவச்யகதை நேர்ந்து விட்டதாம். அது ஏதெனில், சேதநவர்க்கம் என்கிற ஸொத்து எம்பெருமானுடையது; ஆனுல் அந்த ஸொத்தை "கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்றும் "பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று கொண்டேன்" என்றும் சொல்லுகிறபடியே ஸம் ஸாரிகள் கொள்ளைகொண்டார்கள். இந்த ஸொத்து என்னுடையது என்கிருன் எம்பெருமான். ஸம்ஸாரிகளோ 'இது உன்னுடையதல்ல, எங்களுடையதே' என்கிருர்கள். விவாதம் முற்றி விட்டது. ஸம்ஸாரிகள் அடாவடியில் பலிஷ்டர்களாகையாலே அவர்களுடைய வாதமே மேம்பட்டு எம்பெருமானுடைய வாதம் தோல்வியடையும்படியான நிலைமையிலே வந்து விட்டது. அந்தோ! அநியாயமாய் நம்முடைய ஸொத்தை இழந்துவிட நேருகின்றதே! என்கிற பரிதாபம் எம்பெருமானுக்கு உண்டாய்விட்டது. 'இந்த ஸொத்து என்னுடையது தான்' என்று பிரமாணம் செய்தாகிலும் இதனை நாம் இழவாமல் அடைந்தே தீரவேண்டும்' என்கிற அபிநிவேசம் எம்பெருமானுக்கு உண்டாய் விட்டது. அது துளசிமாலையணிந்து முழுக்கிட்டுச் செய்யவேண்டிய காரியமாதலால் இந்தத் திருமஞ்சனமென்கிற வியாஜத் தாலே அது செய்யப்படுகிறது போலும் என்று பட்டருடைய உல்லேக சமத்காரம். ஈச்வர னுக்கும் சேதநனுக்கும் நடந்த விவாதம் ஒரு ஸம்வாத ரூபமாக இந்தச்லோகத்தில் அழகாய்க் காட்டப்படுகிறது. ச்லோகம் வருமாறு:—

**த்வம் மேஹம் மே குதஸ் தத் ததபி குத இதம் வேதமூலப்ரமாணாத்**
**ஏதச்சாநாதிஸித்தாதநுபவவிபவாத் ஸோபி ஸாக்ரோச ஏவ!**
**க்வாக்ரோச: கஸ்ய?, கீதாதிஷு மம விதித:, கோத்ர ஸாக்ஷீ?, ஸுதீ:ஸ்யாத்**
**ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்ய மத்யஸ்தவத் த்வம்.**

இதன் பொருள் சுருக்கமாகக் காட்டப்படுகிறது. த்வம் மே—இது எம்பெருமான் ஸம்ஸாரிசேதநனை நோக்கிச் சொல்லும் வார்த்தை. 'சேதநா! நீ என்னுடைய சரக்கு' என்ருனெம்பெருமான். அதாவது நீ எனக்கு அடிமைப்பட்டவனென்றபடி. சேதநன் ஸ்வா தந்திரியம் பாராட்டி வணங்காமுடி மன்னனுய்க் கிடந்தபடியாலே எம்பெருமான் இவ்வார்த்தை சொல்லவேண்டியதாயிற்று.

**(ஸம்ஸாரி)—அஹம் மே**—நான் உனக்கு அடிமைப்பட்டவனல்லேன், எனக்கு நானே அரசன் என்றான். (இங்கே கவனிக்க) எம்பெருமான் '**த்வம் மே**' என்றாற்போலே ஸம்ஸாரியும் பதிலுக்கு '**த்வம் மே**' என்னலாமே; அதாவது, 'நானு உனக்கு அடிமைப் பட்டவன், நீதான் எனக்கு அடிமைப்பட்டவன்' என்று ஸம்ஸாரி சொல்லியிருக்கலாமே; ஏன் அங்ஙனம் சொல்லவில்லை என்னில், இப்படிப்பட்ட பதில் ஸம்ஸாரி சொல்லியிருந்தா னாகில் எம்பெருமான் பெரும்பேறு பெற்றானவனே; தான் சேஷியாயிருப்பதிலுங் காட்டில் சேஷபூதனாயிருக்கு மிருப்பிலே மிகவும் குதூஹலமுடையானன்றோ அவன். ஏதேனுமொரு படியாலே சேதநனோடு தனக்கு ஸம்பந்தம் ஏற்பட்டால் போதும் என்று பாரிப்பவனன்றோ அவன்; சேஷியாகவே தானிருக்கவேணுமென்கிற எண்ணம் இல்லையே அவனுக்கு. ஸம் ஸாரிகள் தன்னோடு உறவை அறுத்துக்கொண்டு போகாமல் தன்னை அடியானாகக் கொண்டு பரிமாறினாலும் பரமதிருப்தி பெறுபவனன்றோ அவன். அது தோற்றவன்றோ '**த்வம் மே**' என்று ஸாவசேஷமாய்க் கிடக்கிறது. **த்வம் மே தாஸ:** என்றோ **த்வம் மே ப்ரபு:** என்றோ விவக்ஷித்துச் சொன்னபடி. ஏதேனுமொருபடிக்கு ஸம்ஸாரி இசைந்திடுவனோ என்று பார்த்தான் எம்பெருமான். ஸம்ஸாரி மஹாசதுரனாகையாலே 'இவனோடு நமக்கு எவ்வித மான உறவும் தேவையில்லை; அவன் நமக்கு அடியவனாக இருக்க இசைந்தாலும் அதற்கும் நாம் இசையவே கூடாது; அடியவன்போல் இருந்து காலக்கிரமத்தில் நம்மையே அடிமைப் படுத்திக் கொள்ளவல்ல கிறியான் இவன்; ஆதலால் இவனுடைய எல்லையிலும் நாம் செல்லாமல் இருந்து விடுவதே நமக்குத் தகுதி' என்று ஸம்ஸாரி நினைத்தானாகையாலே 'அஹம் மே' என்று எம்பெருமானுக்குப் பிடிகொடாமலே விடையளித்துவிட்டான். இவனும் '**த்வம் மே**' என்று பதில் சொல்லியிருந்தானாகில் அவ்வளவோடு விவாதம் சாந்தமாயிருக்குமே; எம்பெருமான் வெற்றிபெற்றானாய் விடுவனே. ஏதேனுமோர் உறவு கிடைத்ததாய்விடுமே. அந்த பாக்கியமில்லை யெம்பெருமானுக்கு.

**(எம்பெருமான்)—குதஸ் தத் (தத் குத: ?)** 'அஹம் மே' என்று சொன்ன ஸம் ஸாரியை நோக்கி எம்பெருமான் கேட்கிறான். எதனால் அப்படிச் சொல்லுகிறாய்?

**(ஸம்ஸாரி)—தத் அபி குத: ?**—நீ, **த்வம்** மே என்று சொன்னாயே, அது நீ எதைக் கொண்டு சொன்னாய்?

**(எம்பெருமான்)—இதம் வேதமூலப்ரமாணாத்**—சேதநனே!' வேதமாகிற மூலப் பிரமாணத்தைக்கொண்டு நான் 'த்வம் மே' என்று சொன்னேன். *பதிம் விச்வஸ்யாத் மேச்வரம்* *க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:* இத்யாதி ப்ரமாணங்கள் இங்குக் கொள்ளத்தக்கன.

(ஸம்ஸாரி)—**ஏதச்ச அநாதிஸித்தாத் அநுபவவிபவாத்**—நீ சொல்லுகிற ப்ரமாணம் ஓலைப்படாப்ரமாணமாகையாலே வெளிக்கு வரமாட்டாதது; "அஹம் மே" என்று சொன்ன எனக்கு ஸாதகமான ப்ரமாணம் அப்படிப்பட்டதன்று. அநாதிகாலமாக நான் ஸ்வாதந்திரி யத்தை அனுபவித்துக்கொண்டு வருவதால், அநுபவமே ப்ரபல ப்ரமாணமாகையால் இதனால் உன்னுடைய வேதம் அடிபட்டொழிந்ததுபோ என்றான். உலகத்திலும் ஒரு க்ருஹம் ஒருவனுடையதென்று சாஸநபத்திரங்கள் இருந்தாலும் நெடுநாளாக அந்த க்ருஹத்தை வேறொருவன் அநுபவித்து வந்தால் அவனே அதற்குச் சொந்தக்காரனாய்விடுவன் என்றும்,

உண்மையான உடையவன் இழந்து போய்விடுவன் என்றும் காண்கிறோம். அதுபோல் எம்பெருமானே உடையவன் என்று சாஸநமிருப்பினும் அநாதியான அநுபவம் ஸம்ஸாரியினுடையதாகையாலே அந்த சாஸநம் துர்ப்பலமாக இதனால் நிரூபிக்கப்பட்டது. ஸம்ஸாரியும் கிரமமான வழியிலேயே வழக்காடுகிறான் போலும்.

(எம்பெருமான்)—**ஸோபி ஸாக்ரோச ஏவ**—சேதநா! உனக்கு ஸ்வாதந்திரிய அநுபவமுண்டென்பது உண்மையே; அதை நான் அபலபிக்கவில்லை. ஆனால் அந்த அநுபவம் நிராக்ஷேபமாக இருந்தாலன்றோ செல்லும். அப்படியில்லையே. உனது அநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதாயிற்றே. அதனை நீ சொல்லிக்கொள்வதனால் லாபமில்லையே! என்றானெம்பெருமான். உலகத்திலும் ஒருவனுடைய கிருஹத்தை இன்னொருவன் நெடுநாளைய அநுபவத்தில் வைத்திருந்தாலும் அந்த அநுபவத்தை அடிக்கடி ஸொந்தக்காரன் ஆக்ஷேபித்துக் கொண்டிருப்பதாகப் புலப்பட்டுவிட்டால் அவ்வநுபவம் செல்லமாட்டாதென்பது ப்ரஸித்தம். அதையிட்டு எம்பெருமான் இங்ஙனே வாதித்தான்.

(ஸம்ஸாரி)—**ஆக்ரோச: க்வ? கஸ்ய ஆக்ரோச:?**—என்னுடைய ஸ்வாதந்திரியாநுபவம் ஆக்ஷேபத்தோடு கூடியதென்று சொன்னாய்; அப்படிச் சொல்லிவிட்டால் போதுமா? ஆக்ஷேபம் செய்திருப்பது யார்? ஆக்ஷேபம் எவ்விடத்தில் செய்யப்பட்டிருக்கிறது? அதையெல்லாம் விசதமாகச் சொன்னாலல்லவோ உனது வாதம் ஏறும்.

(எம்பெருமான்)—**கீதாதிஷு மம விதித:**—(இது எம்பெருமானுடைய மறுமொழி.) 'க்வ' என்று கேட்டதற்கு '**கீதாதிஷு**' என்பது பதில். **கஸ்ய** என்று கேட்டதற்கு '**மம**' என்பது பதில். சேதநா! பகவத்கீதை முதலானவற்றிலே (உன் ஸமூஹத்தில் தலைவனான அர்ஜுனனென்கிறவொருவனை வைத்துக்கொண்டு) சேதநஸ்வாதந்திரியத்தை நான் ஆக்ஷேபித்திருக்கிறேனென்பதை நாடு நகரமும் நன்கறிந்ததே. என்றைக்கோ ஒருநாள் ஏதோவொரு மூலையிலே நீ ஆக்ஷேபித்திருந்தால் அது செல்லுமோ? என்று ஸம்ஸாரி சொல்லுவதற்கு இடமில்லாதபடி 'விதித:' எனப்பட்டது. கீதை நடையாடாத இடமில்லை; கீதைக்கு ப்ரசாரமில்லாத காலமுமில்லை; கீதையைத் தெரிந்துகொள்ளாத வ்யக்தியுமில்லை என்ற அபிப்ராயங்கள் இச்சொல்லில் பொதிந்துள்ளன.

(ஸம்ஸாரி)—**அத்ர க: ஸாக்ஷீ**—வ்யவஹாரம் என்று வந்துவிட்டால் ஸாக்ஷி விசாரணை இருந்தே தீரவேண்டும். எத்தனை சாஸநபத்திரங்கள் இருந்தாலும் ஸாக்ஷிகளைக் கொண்டு நிரூபிக்கவேண்டியது முறைமை. உனக்கு ப்ரமாணமான வேதங்களும் கீதை முதலியனவும் கிடக்கட்டும். பெட்டியின்மீது ஏறிச்சொல்லுவதற்கு ஒரு ஸாக்ஷி வேணுமே. யார் ஸாக்ஷி? என்கிறான் ஸம்ஸாரி. எம்பெருமான் தவிர மற்ற எல்லா சேதநர்களும் ஸம்ஸாரிகளேயாதலால், அவர்களும் **அஹம் மே** என்றிருப்பவர்களே யாதலால் இவனுக்கு ஸாக்ஷிகள் எங்ஙனே கிடைக்கப்போகிறார்களென்பது சேதனனுடைய எண்ணம். எம்பெருமானுடைய பாக்யத்தாலே ஸம்ஸாரிகளினிடையே முமுக்ஷுக்களும் சிலர் இருப்பதால் அவர்கள் தனக்கு ஸாக்ஷிகளாக இருக்கத்தகுதியுடையார் என்று எண்ணின எம்பெருமான் "**ஸுதீஸ் ஸ்யாத்**" என்றான். ஞானிகளெல்லாரும் என் பக்ஷத்தில் ஸாக்ஷிகளாக நிற்கக் கூடும் என்றபடி. (ஸுதீ: என்பதை ஜாத்யேகவசநமாகக் கொள்க.) **அஸ்தி** என்று உறுதியாய்ச் சொல்லாமல் **ஸ்யாத்** என்று சொன்னது ஏனெனில், இவ்விருள் தருமாஞால

மானது ப்ரஹ்லாதாழ்வானையுமுட்பட எதிரம்புகோக்கப் பண்ணினதாகையாலே ஞானிகளும் ஸமயத்திலே நம்மைக் கை விடும்படி நேர்ந்துவிடுமோ ; என்னவோ ! என்கிற அதிசங்கை தோன்றி அதை ஸ்யாத் என்பதனுல் காட்டினனென்க. "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை" ஆதலால் யாரையும் நம்புவதற்கில்லையே என்றெண்ணினுன் போலும் எம்பெருமான்.

(ஸம்ஸாரி)ஹந்த ! த்வத்பக்ஷபாதீ ஸ:—ஸாக்ஷிகள் மத்யஸ்தர்களாக இருக்க வேணும். உறவினர்களையே கொண்டு சொல்லுவிக்கப்படுகிற ஸாக்ஷியம் உபயோகப்படாது. ஞானிகளை ஸாக்ஷியாகச்சொன்னது பொருந்துமோ ? "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று கீதையில் நீயே சொல்லியிருக்கிருயே ; உனது உயிர்நிலையாகவன்ரோ ஞானிகள் இருப்பது. வாதியே ஸாக்ஷி என்று சொன்னதாகத் தேறிற்றேயல்லது பிறனொருவன் ஸாக்ஷியாகக் கூறப்பட்டானில்லையே (என்ருன் ஸம்ஸாரி )

இதற்குமேல் எம்பெருமான் என்ன செய்வன்? ஸம்ஸாரிகள் யாவரும் பிரதிவாதியாக ஆய்விட்டபடியால் அவர்களில் ஒருவரும் ஸாக்ஷிகளாக நில்லார். முமுக்ஷுக்களோ தன் வகுப்பில் சேர்ந்து விட்டபடியாலே அவர்களுடைய ஸாக்ஷியம் அப்ரயோஜநமென்று கண்ணழிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட ஸம்ஸாரிகளையும் விடமாட்டிற்றிலன் வ்யவஹாரத்திலே தான் தோல்வியடைய வேண்டியவனுக முடிந்துவிட்டது. 'நம்முடைய சரக்குகளை நாம் அநியாயமாய் இழந்துவிடுவதா !' என்று பரிதபிக்கின்ருன். இந்த நிலைமையில் தைவாதீனமாய் ஒரு உபாயம் ஸ்புரித்ததாம் ; அதாவது ஸம்ஸாரியினுடைய வாயாடித்தனத்தினுல் நமக்கு வ்யவஹாரத்தில் பழுது ஏற்பட்டாலும் ஸொத்து நம்முடையதேயென்பது திண்ணமாதலால், கடைசியாக ப்ரமாணம் பண்ணிக்கொடுத்து ஸொத்தைப் பெற்றுக்கொள்வதற்கான முறைமையும் அரசாங்கத்தில் இருப்பதால் அந்த வகையில் நாம் வெற்றிபெறக்கடவோம் என்று தோன்றிற்றும் எம்பெருமானுக்கு: [இதி ந்ருகலஹே ம்ருக்யமத்யஸ்தவத் த்வம்] இதி—இவ்விதமாக, ந்ருகலஹே—சேதநனேடு விவாதமுண்டாகித் தனக்குத் தோல்வி விளைந்த வளவில், த்வம் ம்ருக்யமத்யஸ்தவத் (ப்ரகாசஸே)— தேவரீர் ப்ரமாணம் செய்ய ஸந்நத்தர்போலே விளங்காநின்றீர். "ப்ரமாணம் கர்த்து முத்யுக்தோ ம்ருக்யமத்யஸ்த உச்யதே" என்பது நிகண்டு.

துளபமாலை யணிந்துகொண்டு தீர்த்தமாடுவதை நோக்குமிடத்தில் 'சேதநர்களெல்லாரும் என்னுடைய ஸொத்துக்களே" என்று பிரமாணம் பண்ணுவான்போலே யிருந்ததென்கிற விதனுல், அஹம்மே என்று இறுமாந்து கிடக்கிற ஸம்ஸாரிகளுங்கூடத் தோற்று ஈடுபடும்படியாயுள்ளது திருமஞ்சனஸேவையென்கை.

இந்த உத்ப்ரேக்ஷையினுல் நமக்குக் கிடைக்கும் பொருள் யாதெனில் ; எம்பெருமானேடு நாம் விவாதப்படாமல் இருக்குமளவே போதுமென்பதும், எவ்வகையினுலேனும் நம்மை அடிமைப்படுத்திக் கொள்ள அவன் வழிதேடுகின்றவன் என்பதும், நாமெல்லாம் அவனுடைய உடைமையாதலால் நம்மை ஆட்படுத்திக்கொள்வதிலேயே நோக்குடையனுன அவனது திருவருளை நினைத்து நாம் மார்பிலே கைவைத்துறங்கலா மென்பதுமாம். .... *

இங்கே ஸேவை ஸாதிக்கின்ற ஸ்ரீமதுபயவே S. ராகவையங்கார் ஸ்வாமி சிறந்த உத்யோக பதவியில் வாழ்ந்து விச்ராந்தி பெற்று 25 வருஷங்களுக்கு மேலாயிற்று. உபய வேதாந்தங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும் ஆழ்ந்த ஞானமுடையவர். விசேஷித்து அடியேனுடைய நூல்களில் ஆதரம் மிக்கவர். இரண்டு வருஷங்களுக்கு முன்பு சதாபிஷேக மஹோத்ஸவ மனுபவித்தவர். "வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே,"



ஸ்ரீமதுபய வே. ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமி,
T. Nagar.

# உபய வேதாந்த ப்ரவர்த்தகர்களுக்கு விஜ்ஞாபனம்.

ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அஸாதாரணமாகக் கிடைத்திருக்கிற "உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்ய" பிருதத்தை ஸார்த்தகமாக்கிக்கொள்ளும் பாக்கியம் படைத்தவர்களை மஹாதபஸ்விகளென்று சொல்லவேணும். காலை வேளைகளில் ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனமும், மாலை வேளைகளில் பகவத் விஷய ப்ரவசனமும் செய்துபோரும் மஹான்கள் * தென்திசைக்குத் திலதமன்ன மறையோர் * என்னும் திருமங்கையாழ்வாரருளிச் செயலுக்கு இலக்காகி ஸ்ரீ வைஷ்ணவவுலகுக்குத் திலகமாகவே கொள்ளப்படுவர்கள். "நான் ஸ்ரீ பாஷ்யம் ஸேவித்திருக்கிறேன்" என்றோ "இவர்ஸ்ரீ பாஷ்யம் ஸேவித்திருக்கிறார்" என்றோ சொல்லக்கூடிய மஹான்கள் சிலரோ பலரோ தேறலாமாயினும் ஸ்ரீ பாஷ்யத்தை ப்ரவசனம் செய்ய முன் வரும் மஹான்கள் மிகச்சிலரே தேறக்கூடும். அன்னவர்கள் சாஸ்த்ரங்களில் வ்யுத்பத்தி பெறுமல் ப்ரவசனத்திற்குத்துணிந்து முன்வர முடியாததலால் அன்னவர்களைப் பற்றி நாம் சொல்ல விரும்புவதொன்றுமில்லை. ஆனால், ஸம்ஸ்க்ருதம் பயிலாத சிஷ்யர்களுக்குச் சில காரண விசேஷங்களினால் ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனம் செய்ய வெழுந்து எதையோ சொல்லி, காலக்ஷேபம் என்கிறசொல்லின் பொருளை யதார்த்தமாக்குவதுமுண்டு சிலர்; அன்னவர்களைப் பற்றியும் இங்கு நாம் ஒன்றும் சொல்ல விரும்புகின்றிலோம்.

த்ராவிட வேதாந்த ப்ரவசன நிஷ்ணாதர்களைப்பற்றியே சில விஜ்ஞாபிக்க விருப்பம். ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனத்திற்கு எப்படி ஸம்ஸ்க்ருத பாஷாஜ்ஞானம் இன்றியமையாததோ, அப்படியே பகவத்விஷய ப்ரவசனத்திற்குத் தமிழறிவு இன்றியமையாததாம். நாம் தமிழ் நாட்டில் பிறந்திருப்பதும் தமிழ் பேசத்தெரிந்திருப்பதுமே தமிழறிவுக்குப் போதுமானதென்றோ தமிழ் நூல்களை நிர்வஹிப்பதற்குப் பர்யாப்தமானதென்றோ நினைக்கலாகுமோ? அசை சீர் எதுகைமோனை முதலான சிலவற்றையாவது தெரிந்துகொள்ளவேண்டாமா? (ந-ன) (ர-ற) வல்லின இடையினங்களையாவது தெரிந்துகொள்ளவேண்டாமா? காலக்ஷேப பரர்களான சில ஸ்வாமிகள் ஆப்தர்களுக்கு ஸ்ரீமுகம் ஸாதிக்கும்போது "இங்கே காலக்ஷேபம் குறைவர நடபத்துக்கொண்டிருக்கிறது" என்றெழுதுவர்கள். 'நடபத்துக்கொண்டிருக்கிறது' என்பது கிடக்கட்டும். குறைவில்லாமல் என்கிற தாற்பரியத்தில் (குறைவர) என்றெழுதுகிறார்கள். இவர்களுடைய விவக்ஷைக்கு நேர்விபரீதமான பொருளைத்தானே அது தரும். அருளிச்செயல் ஸேவிக்கும்போதும் "இராக்கதிர்வாழ்" என்றும் "உனக்கென்ன வேறுடமை" என்றும் "அணிபுதுவைப் பெங்கமலத்தண்டரையில்" என்றும் சித்திரமும் விசித்திரமுமாக ஸேவிப்பர்கள். யாராவது கேட்டால் 'இளமையில் பாடம்' என்பர்கள். 'காலக்ஷேபத்திற்கும் இதற்கும் என்ன ஸம்பந்தம்?' என்றும் சிலர் சொல்லுவர்கள்.

திவ்யப்பிரபந்தங்களில் வெண்பாவும் கட்டளைக்கலித்துறையும் தலைமை பெற்று விளங்குவன. இவற்றின் முக்கிய விலக்கணமாகிய வெண்டளையை ஒரேயொரு நாளில் தெரிந்துகொள்ளமுடியும். தெரிந்துகொண்டால் அதனால் எவ்வளவு ஆனந்த மென்பது பின்னையன்றோ அறியப்படும். "காய்முன் நேரும் மாமுன் நிரையும், விளமுன்நேரும் வருவது வெண்டளை" என்னுமிவ்வளவே வெண்டளையின் இலக்கணம். இதில்—காய், மா, விள, நேர், நிரை என்றால் என்ன என்பதை ஸாமான்ய புத்திமான்களுங்கூட இரண்டே நாழிகையில் தெரிந்துகொள்ளமுடியும். இனி, கட்டளைக் கலித்துறையின் இலக்கணம்— "அடியடிதோறும் ஐஞ்சீராகி, முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக், கடையொருசீரும்

விளங்காயாகி, நேர்பதினறே நிரைபதினேழென்று, ஓதினர்கலித்துறை யோரடிக்கெழுத்தே." என்னு மிவ்வளவே கட்டளைக்கலித்துறையின் இலக்கணம். ஒரு தமிழறிஞரிடம் இவற்றை ஒரே நாளில் உணரமுடியுமென்பதை மீண்டும் விஜ்ஞாபிக்கிறேன்.

இந்த ப்ரஸங்கத்தில் நினைவுக்கு வந்த தொன்றை உபேக்ஷிக்கமுடியாமல் விண்ணப்பஞ்செய்கிறேன். திருவாய்மொழியில் * வீடுமின் முற்றத்தின் ஈற்றுப்பாசுரம் * சேர்த்தடத் தென்குருகூர் * என்பதன்றே. இப்பாட்டின் ஈடுமுப்பத்தாருயிரப்படியில் "சேர்த்தட மென்கிற வித்தைச் சேர்தடமாக்கி" என்றருளிச்செய்யப்பட்டுள்ளது. இதற்கு என்ன பொருளென்பதை மேலே விவரிப்போம். பல பல வித்வான்கள் கூடி பகவத் விஷயத்தை ஸகலவியாக்கியானங்களோடுங்கூட முதன் முதலாக அச்சிட்ட தெலுங்குலிபி ஸ்ரீகோசத்தில் "சேர்த்தட மென்கிற வித்தைச் சேர்த்தடமாக்கி" என்று அச்சிட்டு, கீழே டிப்பணியெழுதியுள்ள விதமாவது—"சேர் என்றத்தை தடங்களுக்கு விசேஷணமாக்கி யென்றபடி. மேல் ஊருக்கு விசேஷணம் என்றிருக்கையாலே" என்று. பல பெரியார்கள் கூடி இங்ஙனே யெழுதியிருக்கிறபோது நாம் என்ன சொல்லுவது? இங்குத் தத்துவம் கேளீர். இவ்விடத்திற்கு ஈட்டில் மூன்று யோஜனைகள் பணிக்கப்பபட்டன. (1) தடாகங்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருக்கப்பெற்ற தென்குருகூர். (2) தடாகங்கள் சேர்ந்த தென்குருகூர். (3) சேர் என்பதை வினைமுற்றாகக்கொண்டு 'இப்பத்தே சேர்'—ஆக இம் மூன்று யோஜனைகளிலும் சேர்தட மென்று இயல்பாக இருக்கவேணுமேயல்லது சேர்த்தடமென்று தகரவொற்று மிக்கிருக்கக்கூடாது. ஆயினும் மேலடிகளுக்குச் சேர (எதுகைக்குச் சேர) சேர்த்தடமென்று வலிமிக்குள்ளது. அர்த்தாநுஸந்தான காலத்தில் சேர்தட மென்று இயல்பாகக்கொள்ள வேணுமென்று நம் பிள்ளை சிக்ஷித்தருளினபடி. தமிழறிஞர் இங்கே மருளமாட்டார்கள். ....

---

## "எங்கப்பா முதல் திரையில் அமுது செய்கிறார்."

ஸ்ரீ வைஷ்ணவ ஸங்கேதங்களில் ததீயாராதன கோஷ்டியில் முதல் திரை இரண்டாவது திரை என்று ஒரு ஸங்கேதமுண்டு. இதை வைணவக் குறும்பு என்று சிலர் சொல்லுவர்கள். அதைப்பற்றி இங்கு விசாரமில்லை. அபிஜாதர்களாய் காலக்ஷேபபரர்களான பெரியார்களை முதல் திரைக்குள் எழுந்தருளப்பண்ணுவதும் ஸாமான்யர்களை வேறு படுத்தி உட்காரவைப்பதும் செய்வர்கள். இத்தகைய குறும்பு இக்காலத்திலும் ஆங்காங்கு நடந்துவருவதாகக் கேள்வியுண்டு. ஒரு ஸ்வாமி தன்னை அபிஜாதராகவும் விலக்ஷணராகவும் நினைத்து முதல் திரையில் வீற்றிருக்க முயல்வராம். ஆனால் அவர்க்கு ஓரிடத்திலும் முதல் திரையில் அந்வயம் கிடைக்கவே கிடைக்காதாம். அந்த அவமானத்தைப் போக்கிக்கொள்ள விரும்பிய அவர் ஓர் உபாயம் பண்ணினாராம்; (அதாவது)—காலை பத்துமணிக்குமேல் பன்னிரண்டு மணி வரையில் தம்முடைய குமாரனை வாசல் திண்ணையில் உட்காரவைத்து, யாராவது வந்து அப்பா எங்கே? என்று கேட்டால் "உள்ளே முதல் திரையில் அமுது செய்கிறார்" என்று விடை கூறும்படி சொல்லி வைத்து, தாம் உள்ளே சயனித்திருப்பராம். இதனால் அவர்க்கு ஆங்காங்கு முதல் திரையில் அந்வயம் கிடைத்துவிட்டதாகத் தேற்றரவாம். வேறு வழியில்லையன்றே?

இதற்கு ப்ரக்ருதத்தில் என்ன விஷயமென்கிறீர்களோ? தனி திவ்யப்பிரபந்தமாகிய திருப்பல்லாண்டை பெரியாழ்வார் திருமொழியின் முதல் திருமொழியாக ஒரு துர்வாதத்தைக்கிளப்பி வெற்றிபெறமாட்டாதார் "பெரியாழ்வார் திருமொழியில் முதல் திருமொழியான திருப்பல்லாண்டு முற்றிற்று" என்று பிரசுஞ்செய்து கொண்டு அதனுல் த்ருப்தியடையா நின்ருர்கள். அன்னவர்கள் "ரஹஸ்ய த்ரயஸாரே—ப்ரதமோதிகார:—குருபரம்பராஸார:" என்றும் பிரசுரஞ் செய்து திருப்தியடையலாம். ... ... ... ...



ஸ்ரீமதுபய வே. K. S. சம்பகேசய்யங்கார் ஸ்வாமி, Advocate, திருவல்லிக்கேணி.

ஸ்ரீ மதுபய வே. சம்பகேசய்யங்கார் ஸ்வாமி திருவல்லிக்கேணியில் வாழ்பவர் இங்கே ஸேவை ஸாதிக்கிருர். நம்முடைய ஸம்பிரதாய க்ரந்தங்களில் ஆழ்ந்த அவகாஹனமுள்ளவர். அனேக தர்ம பரிபாலனங்களுக்கு நிர்வாஹகராய் விளங்குமவர்.

நீடூழி வாழ்க.

# ஈட்டில் ஒரு விநோத கதை

திருவாய்மொழியில் (1—5—5) * மானேய் நோக்கி மடவாளை * என்னும் பாசுரத்தி னிரண்டாமடியில் * கூனே சிதையவுண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா ! * என்ற விடத்து (கூனே சிதைய) என்றது க்ருஷ்ணவதார சரிதையைச் சொல்லிற்றாக முந்துற வியாக்கியான மிட்டருளி, உடனே ராமாவதார கதையொன்றைச் சொல்லிற்றாக வியாக் கியானித்து, அப்போது கோவிந்தா ! என்கிற விளி சேருவதற்குப் பொருத்தம் ரஸோக்தியாக ஸாதிக்கு மிடத்தில் "தீம்பு சேருவது க்ருஷ்ணனுக்கே யாகையாலே போம்பழியெல்லாம் அமணன் தலையோடே யென்னு மாபோலே அவன் (கண்ணன்) தலையிலே யேறிட்டுச் சொல்லுதல்" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. **போம்பழியெல்லாம் அமணன் தலை யோடே** யென்ற கதையின் விளக்கம் வருமாறு—ஒரு பிராமணன் தன் வீட்டுப் புழைக்கடை யிலே சுவர் வைத்தான் ; அன்றிரவு கள்ளன் அச்சுவரில் கன்னமிட்டு உள்ளே புக நினைக்கை யில் அது ஈரச்சுவராகையாலே கள்ளனை இறுக்கி உயிர்மாளச் செய்துவிட்டது. அஃதறிந்த அவன் மனைவி ஓடி வந்து பழிதரவேணு மென்ன : இருவரும் ராஜத்வாரத்திற்குச் செல்ல, அந்த மூர்க்கப்ரபு அந்தணனை நோக்கி ஏன் ஈரச்சுவர் வைத்தாயென்ன ; எனக்குத்தெரியாது, சுவர் வைத்த கொத்தனைக் கேட்கவேணு மென்று அவன் சொல்ல, கொத்தனை யழைத்துக் கேட்க, 'என்மேல் பிழையில்லை ; தண்ணீர் விட்டவன் மிகுதியாக விட்டிட்டான், நான் என் செய்வேன்' என்ன ; அவனை யழைத்துக் கேட்க, 'குயவன் பெரிய பானையைத்தந்தான் ; அதனால் நீர் அதிகமாயிற்று; நான் என் செய்வேன் ?' என்ன ; அரசன் குயவனை யழைத்து 'ஏன் பானையைப் பெரிதாகப் பண்ணினாய் ?' என்ன ; அதற்கு அவன் 'நான் பானையைச் சிறிதாகவே பண்ண நினைத்தேன் ; அது பண்ணிக்கொண்டிருக்கும்போது ஒரு வேசி போக்கு வரத்தாயிருந்தாள் ; அவளைப் பார்க்கிற பராக்கிலே பானை பருத்துவிட்டது, நானென் செய்வேன் ?' என்ன ; பிறகு வேசியையழைத்து 'ஏன் நீ அக்குயவன் தெருவிலே சென்றாய் ?' என்று கேட்க ; 'வண்ணானிடம் சேலையைத் தோய்க்கக் கொடுத்திருந்தேன், அவன் விரை வில் கொணர்ந்து தாராமையினாலே போவதும் வருவதுமாயிருந்தேன்' என்ன ; பிறகு வண்ணானை யழைத்து ஏன் தாமதஞ்செய்தாய் ? என்ன ; அவன் 'நானென் செய்வேன் ? துறையில் கல்லிலே ஓர் அமணச்சாமி உட்கார்ந்திருந்தான் ; எவ்வளவு உரப்பியும் அவன் எழுந்து செல்லவில்லை; அவனாகவே எழுந்து சென்ற பின்பு சேலையைத் தோய்த்துத்தர வேண்டியதாயிற்று ; என்மேல் என்ன பிசகு ?' என்ன, பிறகு அந்த திகம்பரச்சாமியைத் தேடிப்பிடித்துக்கொணரச்செய்து விசாரிக்க, அவ்வமணன் மௌனச்சாமியாகையாலே ஒன்றும் விடை கூறாதிருக்க, 'உண்மையில் பழி தன்னிடத்தேயுள்ளதனால் இவன் வாய் திறந்திலன், இவனே இத்தனைக்கும் மூலமான குற்றவாளி; இவனைப் பழிவாங்குங்கள்' என்று அரசன் கட்டளை யிட்டானாம். போம் பழியெல்லாம் அமணன் தலையோடேயானது இதுவே. பெரியாழ்வார் திருமொழியில் (2—8—5) * பல்லாயிரவ ரிவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார், எல்லாம் உன்மேலன்றிப்போகாது எம்பிரான் ! நீயிங்கே வாராய் * என்ற யசோதை பாசுரம் இவ்விடத்திற்குச் சார்பாக அநுஸந்திக்கவுரியது.

* கூனே சிதையவுண்டைவில் நிறத்தில் தெறித்த கதை ஸ்ரீராமாவதாரத்திலும் உண்டென்னும்போது இஃது அறியத்தக்கது—இராமன் சிறுவனாயிருந்த காலத்தில் ஒரு நாள் கையில் சிறு வில்லும் மண்ணுண்டையுங்கொண்டு விளையாடிவருகையில் ஒரு கால்

விற்கொண்டு எய்த உண்டையானது கைகேயியின் வேலைக்காரியான மந்தரை யென்னுங் கூனியின் முதுகின் புறத்தே தெறிக்க, அவள் தனது கூனுடைமையை இராமன் இங்ஙனம் பரிகசித்தனனென்று தவறாகக் கருதி மனம் வருந்தி அவன் மீது சினங்கொண்டு ராஜபுத்திரனுகையாலே அப்பொழுது ஒன்றும் செய்யமாட்டாமற் சென்று, தனக்கு வாய்க்குந்தருணம் நோக்கிக் கறுக்கொண்டிருந்து, பின்பு தசரதன் இராமபிரானுக்கு முடி சூட்ட நிச்சயித்ததை உணர்ந்தவளவில் கோபதாபம் மிக்கவளாகி, அதற்கு எப்படியாவது தான் தடைசெய்ய நிச்சயித்துக் கைகேயிக்குக் கலஹஞ் செய்து அவள் மனத்தை மாற்றி அவளைக்கொண்டு ஸ்ரீராம பட்டாபிஷேகத்தைத் தவிர்த்து அப்பெருமானை வனம் புகுவித்தனள்—என்று சொல்லுவதொரு இதிஹாஸமுண்டு; இதனைக் கம்பரும் தமது இராமாயணத்தில் கிட்கிந்தாகாண்டத்து அரசியற் படலத்தில் "சிறிய ரென்றிகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்றிந், நெறியிகந்து யானோர் தீமையிழைத்தலாலுணர்ச்சி நீண்டு, குறியதாம் மேனியாய கூனியாற் குவவுத் தோளாய்! வெறியன வெய்தி நொய்தின் வெந்துயர்க்கடலின் வீழ்ந்தேன்" என்ற செய்யுளிற் குறிப்பித்துள்ளார். அயோத்தியாகாண்டத்திலும் இதைப் பேசியுள்ளார். ... *

---



ஸ்ரீ உ. வே. A. ஸ்ரீநிவாஸய்யங்கார், சென்னை.

ஸ்ரீமதுபயவே. A. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி யென்னுமிவர் சென்னையில் முத்தியால் பேட்டையில் கண்ணன் ஸன்னிதி ப்ராந்தத்தில் வாழ்பவர். நம்முடைய ஸத் காலக்ஷேப ஸபைக்கு நீண்டகாலத்து அபிமானி. உள்ளும் புறமுமொத்த பரிபக்வ ஹ்ருதயரான விச்வாஸி. இரண்டு வருஷங்களுக்கு முன்பு சித்திரை மாதத்தில் திருமலையில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் கொண்டார். பல்லாண்டு பல்லாண்டு வாழ்க வென்று மல்லாண்ட திண்டோள் மணிவண்ணன் மலரடியில் பிரார்த்திக்கின்றோம்.

சென்னைமா நகரில் ப்ரக்க்யாதி பெற்று விளங்கும் T. V. S. கம்பெனியில் சிறந்த பதவியில் வாழ்ந்துவரும் ஸ்ரீ மதுபயவே. திருமலை அனந்தாண் பிள்ளை. குணக்கரம்பாக்கம் திருவேங்கடாசாரியர் ஸ்வாமியின் திருக்குமாரர்க்கும், ஸ்ரீ உ. வே. சேலம், T. M. தம்பு ஸாமி ஐயங்காருடைய செல்வப் புதல்விக்கும் திருமணம் நடைபெற்ற ஸமயத்தில் கோஷ்டி.



முதலில் நிற்பவர்—ஸ்ரீமான் (சேலம்) தம்புஸாமி ஐயங்கார்.

கோடியில் நிற்பவர்—ஸ்ரீமான் T. A. திருவேங்கடாசாரியார், சென்னை.

ஸகிந்தராபாத், ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணன் ஸன்னிதியில் கீலக வருஷம் கூடிய சிறு கோஷ்டி.



(1) ஷை ஸ்ரீ லக்ஷமீநாராயணன் ஸன்னிதியின் அதிகாரியான
ஸ்ரீமதுபயவே. S. தெய்வநாயகமையங்கார், (2) ஹைதராபாத் நகரில்
ஸ்ரீ வைஷ்ணவகுல திலகராய் விளங்கும் ஸ்ரீமதுபய வே. மு. ஸௌந்தரராஜய்யங்கார் ஸ்வாமி,
(3) அவ்விடத்து எண்டோமெண்டு டிப்டி-கமிஷனர் ஸ்ரீமான் K. கோபாலய்யங்கார் ஆகிய
இப்பெரியார்களை இந்த கோஷ்டியில் குறிக்கொள்க.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# தேவப்பெருமாள் திருவருள்.

தேவப்பெருமாள் திருவருளே இக்கட்டுரையை எழுதுவிக்கத் தொடங்குகிறபடியால் இதற்குத் தேவப்பெருமாள் திருவருளென்றே பெயரிடலாயிற்று. தேவஸ்தான நிர்வாஹ அதிகாரிகள் அடிக்கடி மாறிக் கொண்டிருப்பதனால் அவர்களுக்கு இந்த தேவஸ்தானத்தின் உண்மையான வரலாறுகள் தெரிந்து கொள்வதற்கு வழியில்லையாகிறது. முக்கியமாக அவர்கள் தெரிந்து கொள்வதற்காகவும், பொது ஜனங்களின் உணர்ச்சிக்காகவும் இத்திருவருள் வெளியிடப்படுகின்றது.

சில வருஷங்களுக்குள்ளாக இந்த தேவஸ்தானத்தில் நான்கு வியவஹாரங்கள் நீதிமன்றங்கள் மூலமாக முடிவடைந்திருக்கின்றன. அவையாவன—

1. திருமங்கையாழ்வார் ஸன்னிதியில் வடகலை நாமம்பற்றி வியாஜ்ஜியம்
2. யானைக்கு இட்ட வடகலை நாமத்தைப்பற்றிய வியாஜ்ஜியம்
3. மந்த்ர புஷ்பத்தில் தமிழ்ப் பாசுரம் சொல்வது விஷயமான தாவா
4. தேசிகர் மங்களாசாஸனத்தில் பாசுரம் சொல்லும் விஷயமான தாவா

ஆக இந்த நான்கு வியாஜ்ஜியங்களும் ஒன்றின்பின் ஒன்றாக முடிவடைந்த காலங்களில் Hindu, Indian Express முதலிய ஆங்கில தினசரி பத்திரிகைகளும், தினமணி, மித்திரன் முதலிய தமிழ் தினசரி பத்திரிகைகளும் தீர்ப்புகளின் ஸாரங்களை பக்ஷபாதமின்றியே உள்ளது உள்ளபடியே பிரசுரம் செய்திருப்பதனால் இவை உலகமெல்லாம் அறிந்தனவே யாகும். ஆனாலும், பத்திரிகைகளில் நாடோறும் பலபல விஷயங்களையும் பார்த்து வருகிற ஜனங்களுக்கு மறதியென்பது ஸஹஜமாதலால் அவற்றை நினைவூட்டியும் விசேஷங்கள் தெரிவிக்கப்படுகின்றன.

1. திருமங்கையாழ்வார் ஸன்னிதி திருமண் வியவஹாரம். ஸ்ரீ ரங்கத்திற் போலவே இந்த தேவஸ்தானத்திலும் ஆழ்வார்களெல்லார்க்குமே தனித்தனி ஸன்னிதிகள் அநாதிகாலமாக ஏற்பட்டிருக்கின்றன. துரை தோட்டம் என்று ப்ரஸித்தமான வெள்ளிக்கிழமை தோட்டத்தில் பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் ஆகிய மூவர்க்கும் ஸன்னிதிகள் உள்ளன. நம்மாழ்வார் ஸன்னிதி தெரிந்ததே. மணவாளமாமுனிகள் ஸன்னிதிக்கு இரண்டருகிலும் திருமங்கையாழ்வார் ஸன்னிதியும் முதலாழ்வார்கள் ஸன்னிதி

யும் திருமழிசைப்பிரான் ஸன்னிதியுமுள்ளன. குலசேகராழ்வாரொருவர்க்கு மட்டும் தனி ஸன்னிதி தெரியவில்லை. திருமழிசைப்பிரான் ஸன்னிதியிலேயே அவரும் எழுந்தருளியிருந்ததாகப் பெரியோர் கூறக் கேட்டதுண்டு.

ஒவ்வோராழ்வாரும் தம்தம் ஸன்னிதியிலேயே யெழுந்தருளியிருந்து திருநக்ஷத்ரோத்ஸவபரிபாலனங்கள் நடந்துகொண்டிருந்த காலம் நமக்குத் தெரியாது. தென்கலையார் நிமித்தமாக ஆழ்வார்கள்மீது ஏறின பகை ஒவ்வொருவர் ஸன்னிதியிலும் மண்சுவரெழுப்பி முள்ளடைத்து, மூலவர்கள் ஓரிடத்திலும் உத்ஸவர்கள் ஓரிடத்திலுமாகச் சேர்க்கப்பட்டு அவர்களுக்கு வருஷ திருநக்ஷத்ரபரிபாலனங்கூட நடவாதபடிக்குச் செய்திருந்தார்கள் முன்னிருந்த தருமஹர்த்தாக்கள். நம்மாழ்வார் ஸன்னிதி, எம்பெருமானார் ஸன்னிதி, மணவாளமாமுனிகள் ஸன்னிதி திருக்கச்சிநம்பிகள் ஸன்னிதி இவை நான்குமட்டும் தகுந்த மிராசுதாரர்களின் வசத்தில் இருந்துவந்தபடியால் இவற்றுக்கு மண்சுவரெழுப்புவதும் முள்ளடைப்பதுமான ஸம்ஸ்கார மொன்றும் பண்ணமுடியாமல் போயிற்று. ஸ்ரீ வைஷ்ணவக் கோவில்களுக்கு மிகமுக்கியலக்ஷணமான பகற்பத்து இராப்பத்து என்கிற அத்யயனோத்ஸவமில்லாமலே இந்தப் பெரிய கோவிலில் எத்தனை வருஷங்கள் கடந்தனவென்பதை நாம் சொல்லவேணுமோ ? அதை உலகமுழுது முணருமன்றோ.

ஸ்ரீ வைஷ்ணவாலயங்களுக்கு முக்கியமான ஆழ்வாராசார்ய மஹோத்ஸவங்களை ஒழுங்குபட நடத்திவைக்கவேணுமென்று நீதி மன்றங்களில் முறையிட்டுக்கொண்டாலும், பழம் பெருச்சாளிகளான தர்மஹர்த்தாக்களை விலக்கினாலொழிய ஒன்று மாகாதென்று முடிவுக்குவந்த முன்னோர்கள் சுமார் 60 வருஷங்களுக்கு முன்பு ஸ்கீம் வியாஜ்ஜியம் தொடுத்தார்கள். அப்போது சிலபல வருஷங்கள் தர்மஹர்த்தாக்களான தாதாசாரியர்கள் விலக்கப்பட்டு ரிஸீவர்மூலமாக தேவஸ்தான நிர்வாஹம் நடந்துவந்தது.

அந்த வியாஜ்ஜியம் ஒருவாறு முடிவுபெற்றும் விசேஷபலன் தாராததனால், மறுபடியும் ஸ்கீம் மாடிபிகேஷன் வியாஜ்ஜியம் தென்கலைத் தலைவர்களால் தொடரப்பட்டது. அது 17-1-1941 தேதியில் ஹைகோர்ட் ஜட்ஜ்களான கனம் வார்ட்ஸ்வொர்த் துரையவர்களாலும் பதஞ்ஜலி சாஸ்திரியவர்களாலும் பரிஷ்காரமாக முடிவு செய்யப்பட்டது. ஸ்மார்த்தரோ, மாத்வரோ ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு பிராமணர் ஸர்வாதிகாரம் பொருந்திய மானேஜிங் டிரஸ்டியாக சம்பளத்தில் நியமிக்கப்படவேண்டுமென்றும், தேவஸ்தான ஸம்பந்தமான லௌகிக வைதிக ஸகல அதிகாரங்களும் அவரொருவர்க்கே அதீனமாயிருக்கவேண்டியதென்றும், தாதாசார் குடும்பஸ்தர்களில் கீழண்டைவகுப்பிலும் மேலண்டைவகுப்பிலுமாக இரண்டு பேர்கள் ஒருவிதமான அதிகாரமுமின்றிக்கே நாமமாத்திரமான ஹானரரி டிரஸ்டிகளாக இருக்கலாமென்றும், மானேஜிங்டிரஸ்டியின் நடவடிக்கைகளின் மீது தணிக்கை பார்க்கவேண்டிய அதிகாரம் முழுவதும் ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டைச் சேர்ந்ததென்றும் [இதற்குமேல் அப்பீல் இல்லாதபடி] முடிவு செய்யப்பட்டது. இந்த வியாஜ்ஜியத்தில் P. B. அண்ணங்கராசாரியரான நான் முதலாக

ஏழு தென்கலையார்கள் வாதிகளாதலால் எமக்கு கோர்ட்டு காஸ்ட் சுமார் ரூ. 450 வரையில் தேவஸ்தானத்திலிருந்து செலுத்தவேண்டியதாகவும் முடிவாயிற்று.

இந்த தீர்ப்பை கோர்ட்டார் வெளியிட்டபோது, அக்காலத்தில் தர்மஹர்த்தாக்களாயிருந்துவந்த தாதாசாரியர்கள் ஷை ஜட்ஜ்களிடம் கெஞ்சிக் கேட்டுக்கொண்ட தென்னவென்றால் — "இப்போது தை மாதம்; நாளது வைகாசி மாதத்தில் நடைபெற விருக்கிற பிரம்மோத்ஸவம் வரையில் நாங்களேயிருந்து அனுபவித்துவிட்டு உடனே விலகிப்போய்விடுகிறோம்; கோர்ட்டார் தயவுசெய்து அந்தப்படிக்கு உத்தரவு அளிக்கவேணும்" என்பதாக; ஆனால் அதைக்கோர்ட்டார் சிறிதும் அனுமதிக்கவில்லை. நாளது மார்ச்சு மாதம் 17 தேதிக்குள் இந்த தீர்ப்பு ஆசாரத்திற்கு வரவேண்டியது அவசியம் — என்று முடிவு செய்திட்டார்கள். அப்படியே அன்று முதலாகவே ஆசாரத்திற்கு வந்துவிட்டது.

இந்த தேவஸ்தானத்தைப் பலவாண்டுகள் ஆண்டுவந்த பழைய தாதாசாரி டிரஸ்டிகள் இந்த ஸன்னிதியில் மணவாளமாமுனிகளுக்கும் மற்றுமுள்ள ஆழ்வாராசாரியர்களுக்கும் இழைத்த தீங்குகள் உண்மையாகவே இராமாயணமும் பாரதமும் போன்றவை. அப்படிப்பட்ட தீங்குகள் அற்றொழியவேணுமென்றே ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத பிராமணர்கள் அதிகாரம் செலுத்தும் டிரஸ்டியாக நியமிக்கப்பட்டுங்கூட, ஆழ்வாராசாரியர்களின் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனங்களும், பகற்பத்து இராப்பத்தென்கிற அத்யயனோத்ஸவமும் மணவாளமாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவமும் இந்த தேவஸ்தானத்தில் பல வருஷமாகவே நிறுத்தப்பட்டு அதுவே ஒரு மாமூலாக வந்திருந்தபடியால் மானேஜிங்டிரஸ்டி துணிந்து புராதன ஆசாரத்தை அமுலுக்குக் கொண்டுவர முடியாமற்போக, அவைகளுக்காக எண்டோமெண்டு போர்ட்டில் தனி வியாஜ்ஜியங்கள் நடத்தி அநாதி மாமூல்கள் அனேகமாகப் புதுப்பிக்கப்பட்டன. இற்றைக்கும் திருச்சியில் வாழ்ந்துகொண்டிருக்கின்ற உயர்திரு. நாராயணசாமிப் பிள்ளையவர்கள் எண்டோமெண்டு சமிஷனராயிருந்தகாலத்தில் அவருடைய இதயத்தில் ஆழ்வாராசாரியர்கள் ஆவேசித்துச் செய்வித்த தீர்ப்பு அற்புதமானது. ஷை சாத்துமுறைகளில் வெள்ளிக்கிழமை கூடினால் பெருமாளோடுகூட தாயாரும் புறப்பாடு கண்டருளி அந்தந்த ஆழ்வாராசாரியர்கள் ஸன்னிதிக்கு எழுந்தருளி ஸேவை சாத்துமுறைகள் நடத்தவேண்டிய தென்றும், பகற்பத்து உத்ஸவம் பத்து நாளும் பகலில் திருமலைமேல் நடப்பதனால் மாஸ திருநக்ஷத்ரம் கொண்டாடவேண்டிய தினங்களில் அதற்குரிய ஆசாரியரை அவர்ஸன்னிதிக்கு [பகற்பத்து கோஷ்டி முடிந்தவுடனே] எழுந்தருளப்பண்ணி திருநக்ஷத்ர பரிபாலனம் ஆனவுடனே மீண்டும் திருமலைக்கு எழுந்தருளப்பண்ணவேண்டியதென்றும் .... .... இத்தகைய விலக்ஷண நிபந்தனைகளுடன் சாச்வதமான தீர்ப்பு செய்திருப்பதும் அதன்படியே அன்று தொடங்கி நடைபெற்று வருவதும் உலகமறிந்தது.

அந்த வியாஜ்ஜியங்கள் நடக்கும்போது கூட 'இந்த தேவஸ்தானத்தில் ஆழ்வாராசாரியர்களுக்கு எவ்விதமான உத்ஸவமும் கிடையாது' என்றே

ஹைகோர்ட்டு வரையில் அப்பீல் செய்து தோற்ருர்கள். யார்? பல்லைப்பிடுங்கின பாம்பு போன்றவர்கள். இந்த பழங்கதைகள் நிற்க.

மேலே விவரித்தபடி ஆழ்வாராசாரியர்களுக்கு நல்லகாலம் பிறந்தபடியால், மண்சுவரெழுப்பி முள்ளடைத்திருந்த ஆழ்வார்கள் ஸன்னிதிகளை மராமத்துசெய்து ஆழ்வார்களை அவரவர்கள் ஸன்னிதியில் எழுந்தருளப் பண்ணி உத்ஸவபரிபாலனம் செய்து போரவேண்டியதென்கிற நோக்கத்தின் கீழ் முதன் முதலாகத் திருமங்கையாழ்வார் ஸன்னிதி மராமத்து செய்யப்பட்டது. ஒருவாறு மராமத்து முடிவுபெறும் தருவாயில் அக்கோவில் விமானத்தில் வடகலை நாமத்தைப் போட்டு வைத்தார்கள். அது துராக்ருதமான செயலென்று ரிகார்டுகளைக் கொண்டு நிருபித்து. அதை எடுப்பித்தாகவேண்டுமென்று எண்டோமெண்டு கமிஷனரிடம் தென்கலையார் செய்த தாவா பரிசீலனை செய்யப்பட்டு, அப்போது கமிஷனராயிருந்த உயர்திரு K. S. சாரங்கபாணி முதலியாரவர்கள் "அந்த வடகலை நாமத்தையெடுத்துவிட்டே ஸம்ப்ரோக்ஷணை செய்யவேண்டியது" என்று தீர்ப்பு அளித்தார்கள். எந்த வ்யவஹாரங்களுக்கும் அப்பீல் கோர்ட்டுகள் உண்டாதலால் இதைப் பற்றியும் வடகலையார்கள் அப்பீல் செய்துகொள்ள, அது பெண்டிங்கிலிருக்கிறது.

## 2. யானையின் நாமத்தைப்பற்றி

இந்த தேவஸ்தானத்தில் யானை உயிருள்ளது, உயிரில்லாதது என்று இருவகைப்படும். உயிரில்லாதயானைகளில் ஒன்று வைகாசியுத்ஸவத்தில் ஆருந்திருநாளிரவில் வாஹனமாக உபயோகப்படுமது. அது தென்கலைத் திருமண்காப்புடன் விளங்குமது. கீழே பாதத்தில் கலர் வேற்றுமை செய்தது ஒரு காலத்திலானது. அதுபற்றி விவாதமேதும் ஏற்படவில்லை. மற்ருென்று யாளிவாஹனத்தின் துதிக்கையில் தொங்குமது. இதுவும் கோர்ட்டுகளின் தீர்ப்புப்படி தென்கலைத் திருமண்காப்புடனே விளங்கி வருகிறது. உயிருள்ள யானை பெருமாளுடைய புறப்பாடுகளில் கோஷ்டிக்கு முன்னே அலங்காரமாகச் செல்லுமது. அநாதியாகத் தென்கலைத் திருமண் சாத்தப்பெற்றிருந்ததை மாற்றினகாலம் முதலாக வியாஜ்ஜியம் ஏற்பட்டு வடகலை தாதாசாரியர்கள் ஒவ்வொருகாலத்தில் ஒவ்வொருவிதமான சாக்கு போக்குகள் சொல்லிவந்தார்கள். 'இது தேவஸ்தானத்திற்கு ஸம்பந்தப்பட்ட யானையன்று" என்று சொல்லி ஸன்னிதிவீதியின் தென்னண்டை பின்புறத் தெருவிலும், அமுதுபடித் தெருவிலும் சில பலகாலம் கட்டிவைத்திருந்தார்கள். அதனலேயே அந்தத் தெருவுக்கு ஆனைகட்டி வீதியென்று பெயர் வழங்கலாயிற்று. கடைசியாக அந்த வியாஜ்ஜியம் ஸமீபகாலத்தில் (8-5-1968ல்) செங்கற்பட்டு முன்ஸீப் கோர்ட்டில்முடிவுபெற்றது. மாமூல்படி தென்கலைத் திருமண்காப்பே யானைக்குச் சாத்தவேண்டியதென்று திடமான தீர்ப்பு ஆயிருக்கிறது. இதைப்பற்றியும் எதிரிகள் அப்பீல் செய்து Stay வாங்குவதற்காக வாயிதா கேட்டுக்கொண்டிருக்கிருர்கள்.

இங்கு பொதுஜனங்களுக்கு நாம் தெரிவிப்பது ஒன்றே. கோர்ட்டார் பலபலரிகார்டுகளைப் பரிசீலனை செய்து, எதிரிகள் இந்த தேவஸ்தானத்தில் அநாதியாகவுள்ள தென்கலைத் திருமண்காப்புகளை வடகலை நாமமாக்க வெகுகால

மாகவே முயற்சிசெய்து வருகிறார்களென்பதைக் கல் வெட்டாகத் தெரிவித்திருக்கிறார்கள். ஏற்கெனவே நாம் வெளியிட்டிருக்கிற வரதன் ஸன்னிதி வரலாறு என்னும் 16 அத்யாயமுள்ள நூலில் இது வெகு விரிவாக விளக்கப்பட்டிருப்பதால் இங்கு விரிவு வேண்டாவென்று விடுக்கப்படுகிறது. ஸாரமாகச் சிலவார்த்தைகள் கேளீர். திருவுள்ளூர் புள்ளம் பூதங்குடி ஆதனூர் முதலான சில திவ்யதேசங்கள் ஸ்ரீ அஹோபில மடம் ஜீயர் ஸ்வாமிகளின் ஆதீனத்திலிருப்பவையாதலால் அவர் வடகலையான போதே அவையும் நாளடைவில் வடகலை நாமப்ரவேசம் கொண்டன. திருக்குடந்தை, திருவிண்ணகர், தஞ்சைமா நகர், கண்டியூர் திருவெள்ளியங்குடி தேரழுந்தூர் இவை தென்கலையார் மெலிந்து வடகலையார் மலிந்த விடமானதனால் எளிதாக வடகலையாக்கப் பட்டன. காஞ்சீபுரம் ஸன்னிதியில் தாதாசாரியர் அதர்க்கணச் செயல்கள் ஆரம்பித்த காலம் முதலாகவே தென்கலையார் ஆக்ஷேபித்துக் கொண்டும் கோர்ட்டுகளில் தாவாக்கள் செய்து கொண்டும் வருவதனால் இங்கு வடகலையாருடைய துராகிருதங்கள் நீதிபதிகளால் அடிக்கடி வெட்ட வெளிச்சமாக விளக்கப்பட்டு வருகின்றன.

"காஞ்சீபுரம் வரதராஜஸ்வாமியின் தேவஸ்தானம் வடகலை" என்று இவர்கள் சுண்ணும்பினால் மூலை முடுக்குகளில் எழுதிவைத்தாலும் உண்மையுணர்ந்தவர்களின் உள்ளம் தெளிவு பெற்றேயிருக்கும். தென்கலையார்கள் நீதிமன்றங்களிற் சென்று முறையிடும் வியவாஹாரங்களில் ஒன்று கூட தப்பு வியாஜ்ஜியமென்று தள்ளப்படவில்லை. தென்கலையார் நூற்றுக்கணக்கான ரிகார்ட்டுகளைக் கொண்டே தாவா செய்கிறார்கள், வெற்றியும் பெறுகிறார்கள். சோழநாட்டில் வடகலையாக ஆக்ரமிக்கப் பட்டுப்போன திருக்குடந்தை முதலிய திவ்யதேசங்களிற் சென்று தென்கலையார் தாவா தொடுக்க முடியுமோ? தாவா செய்தாலும் அட்மிஷனே யாகாதன்றோ? இந்த தேவஸ்தானம் அப்படியன்றிக்கே தென்கலைத் திருமண்களும் தென்கலையார் மிராசுகளும் ஸ்ரீராமநவமி ஸ்ரீஜயந்தி முதலானவற்றில் தென்கலையாசாரங்களும் தொடர்ந்து பரிபாலிக்கப்பட்டு வருவதனால் பிறருடைய பித்தலாடகங்களும் விஷமச் செயல்களும் க்ருத்ரிமசேஷ்டைகளும் அப்போதைக்கப்போது அம்பலப்பட்டு வருகின்றன. ப்ரக்ருதம் திருமங்கையாழ்வார் ஸன்னிதிநாமம், யானையின் நாமம்—இரண்டையும்பற்றின வியவஹாரங்களில் ஜட்ஜ்கள் அலசியலசி எழுபது பக்கமும் எண்பது பக்கமும் எழுதியுள்ள புராதன தத்துவங்களை மத்யஸ்தர்கள் ஆராய்ந்து பார்த்தால் இந்தக் கோவிலில் வடகலை நாமம் எப்படி புகுத்தப்பட்டதென்று மூக்கில் விரலைவைத்து ஆச்சரியப்படுவர்கள். ஜட்ஜ்களே யன்றோ ஆச்சரியப்படுகிறார்கள். தீர்ப்புகளை வாசித்துப் பார்க்கவேணும். எல்லாம் அச்சேறி யிருப்பதால் எளிதாக வாசிக்கலாம்.

"எங்களுடைய கோவில் அனாதி வடகலை, நாமம் போடுவது எங்களிஷ்டம் எத்தனையும் போடுவோம்; எங்களை யார் கேட்பது?" என்று இவர்கள உறுமுவதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ வென்பதை இத்தகைய தீர்ப்புகளாலன்றோ நடு நிலையாளர் தெரிந்துகொள்ள வேண்டும். எதிலும் ஆக்ஷேபம் கிளம்பாதவரையில் வெற்றி இவர்களுடையதே யென்பதில் சந்தேகமில்லை.

வையங்கண்ட வைகாசித்திருநாளில் இருவேளைகளிலும் கங்கைகொண்ட மண்டபத்திற்கு எழுந்தருளுகிறாரே, அந்தமண்டபத்தில் எப்படிப்பட்ட தென் கலைத்திருமண்காப்பு ஜொலிக்கிறதென்பதைக் காணுதாருண்டோ? மண்டபத் திற்கு வெளியில் சுண்ணும்பிலும் காகிதத்திலும் செய்யும் வேலைத்திறங்கள் காசுக் குதவுமா? அது ஒன்றுதானு? கோவில் நிறையத் தென்கலைத் திருமண்கள் குவிந் திருக்கின்றனவே. நம்மாழ்வார் ஸன்னிதியிலும் மணவாளமாமுனிகள் ஸன்னிதி யிலும் தென்கலைத் திருமண்கள் இருக்கிறபடியாலே பெருமாள் அங்கு எழுந் தருளக் கூடாதென்று போராடின மஹாநுபாவர்கள் இவர்கள். இப்போது அந்த ஸன்னிதிகளுக்கு எழுந்தருளுங் காலங்களில் வடகலை நாமமிட்ட சின்னங்களை யிடுக்கிக்கொண்டுபோய் மனம் தேறுதலடைகிறார்கள் பாவம்.

சிறுகதை கேண்மின். சிலகொள்ளைக்காரர்கள் அரண்மனை முதலான பல விடங்களிலும் புகுந்து ஏராளமாகக் கொள்ளையடித்தார்கள். விலையுயர்ந்த பட்டுப் பீதாம்பரங்களும் சால்வைகளும் தகடுகளும் பொன் வெள்ளிப் பாத்திரங்களும் அபரிமிதமாக அபஹரித்தார்கள். கேஸ் தொடர்ந்தது. போலீஸ் சோதனைகள் பிரபலமாக நடந்தன. சில களவுகள் கண்டுபிடிக்கப்பட்டு ஸர்க்காரால் கவரப் பட்டன. தண்டனைகளும் நடந்தன. மற்றும் களவுபோன பொருள்களைக் கண்டு பிடிக்க வழி தெரியாமையாலே கேஸ் க்ளோஸ் செய்யப்பட்டுவிட்டது. பலவாண்டு களும் கழிந்துவிட்டன. கள்ளர்களின் உள்ளத்தில் அச்சம் நீங்கி உற்சாகம் உதிக்கத் தலைப்பட்டது. உள்ளே மங்கிக்கிடக்கிற பீதாம்பரம் முதலானவற்றைத் தெருவிலே கொடிகட்டிப் பிரகாசமாக உலர்த்த ஆரம்பிக்கிறார்கள். சிலவற்றைத் துணிந்து அணிந்துகொண்டு வீதியார வரவும் முற்படுகிறார்கள். அது ஜரித்துப் போவதுமுண்டு; பிடிபட்டுப் பரிபவப்படுவதுமுண்டு. இதுபோன்ற பலவிஷயங் கள் ஆங்காங்கு இற்றைக்கும் நடைபெறும் நிகழ்ச்சிகளல்லவா? இந்த தேவ ஸ்தானத்தின் மேலண்டை கோபுரவாசலில் தென்னண்டை ப்ராகாரத்தில் கட்டி டத்தை யிடித்துக் கருங்கல் வடகலை நாமம் புதைக்கப்பட்டிருப்பதொன்று கொண்டு எல்லாம் வியாக்கியானிக்கப் பட்டதாகும். இதைக்கட்கூடாகக் காணலாமே.

## 3 மந்த்ரபுஷ்ப வ்யாவஹாரம்.

திருவாராதனத்தினிடையில் மந்த்ரபுஷ்பமென்பது ஒரு சடங்கு. இது அர்ச் சகரைச் சேர்ந்த தொழில். இந்த தேவஸ்தானத்திலும் நெடுங்காலமாக அர்ச் சகர்ளின் சடங்காகவே இது நடந்து வந்தது. இடைக் காலத்தில் தாதாசாரியர் கள் இதைத் தங்களுடைய ஆபீஸாகக் கொண்டு ஒருவரிருவர் ஏதோ மொண மொண வென்று வேதஞ் சொல்லி ஜபிப்பதென்று சில வருஷங்களுக்கு முன் ஆரம்பித்தார்கள். அர்ச்சகர்களுக்கு குமாஸ்தாவாக இருந்து இதை நடத்தி வருவதாக இருந்தது. நாளடைவில் ஸ்தோத்ரபாடங்களையும் திவ்ய ப்ரபந்தப் பாசுரங்களையும் இதில் சேர்த்து கோஷிப்பதென்று அட்டூழியமான காரிய மொன்றை ஆரம்பித்தார்கள் தாதாசாரியர்கள். ஸ்தோத்ர பாடவ்யவஹாரமென்று ஒன்று தனியே நடந்து வருஷத்தில் 6 நாட்கள் தான் ஸ்தோத்ரம் சொல்லக் கடவதென்று ஹைகோர்ட்டு வரையில் சென்று முடிவடைந்திருக்கிறது இது

போலவே திவ்யப்ரபந்தப் பாசுரங்கள் விஷயத்திலும் நீண்டகாலம் வ்யவஹாரங்கள் நடந்து, ஹைகோர்ட்டு வரையில் சென்று முடிவு பெற்றிருக்கிறது. திருவாராதன காலத்தில் திருமணி ஸேவித்து தீர்த்தப்ரஸாத விநியோகம் முடிகிற வரையில் திவ்யப்ரபந்தாநுஸந்தானம் தென்கலையாருடைய அஸாதாரணமிராசென்றும், இதனிடையில் இதற்கு இடையூறாக யாரும் எவ்விதமான ரெஸிடேஷனும் நடத்தக் கூடாதென்றும் கல்வெட்டாக முடிந்திருக்கிறது. இப்படியிருந்தும் புதிது புதிதாக அதர்க்கணச் செயல்களை ஆரம்பிக்கிற வழக்கத்தின் கீழ், எதையாவது சொல்லிக் கூச்சலிட வேண்டியதென்கிற எண்ணமொன்றையே கொண்டு தமிழ்ப் பாசுரங்களையும் ஸ்தோத்ர பாடங்களையும் புதிதாகச் சொல்ல ஆரம்பிக்க, இது நூதனமும் அதர்க்கணமுமான செயலென்பதைத் தென்கலையார் நீதிமன்றத்தில் முதலிக்க, எண்டோமெண்டு கோர்ட்டாரால் அந்தச் செயல் கண்டிக்கப்பட்டு முடிந்தது. எட்டு வருஷமாயிற்று. இதன் மேலும் அப்பீல் செய்து தோல்வியடைந்தார்கள். வேத சாந்தியில் "ஸமுத்ரோ பந்து:" என்னுமவர்களாகையாலே எதிலும் ஸமுத்ரஸ்நானம்பண்ணியே த்ருப்தியடையவேண்டியிருக்குமிவர்களுக்கு.

### 4. மங்களாசாஸன வியவஹாரம்.

புரட்டாசித் திருவோணத்தன்று நிகமாந்த மஹாகுரு அவதாரஸ்தலமான விளக்கொளி ஸன்னிதியிலிருந்து காலை புறப்பாடு கண்டருளி தென்கலையாருடைய இயல் கோஷ்டியுடன் தேவப் பெருமாள் ஸன்னிதியினுள்ளே யெழுந்தருளித் திருமுற்ற வெளியிலே இயல் சாற்றியான பிறகு, வாஹன மண்டபத்திலிறங்கி, தேவப் பெருமாளுடைய மங்களாசாஸனத்திற்காகத் திருப்பல்லக்கிலிருந்து கைப் பலகையில் புறப்பட்டருளும் போது ஸ்தோத்ரபாடமாரம்பித்துத் தென்கலையார் முன்னே செல்ல, பின்னே வடகலையார் சென்று இந்த கோஷ்டியுடனே தேவப் பெருமாளுடைய மங்களாசாஸனம் நடைபெறுவது வழக்கம். இந்த ஸந்தர்ப்பத்தில் ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரம் தவிர, தமிழ்ப் பாசுரங்களை ஸேவிக்கக் கூடாதென்று தென்கலையார் மீது நீதிமன்றக் கட்டளையைப் பிறப்பித்தார்கள். பல வாண்டுகளாக இங்ஙனே நிர்விவாதமாக நடந்து கொண்டிருக்கையில், ஏதாவது விவாதாஸ்பதமான காரியங்களைக் கிளப்பிக் கொண்டேயிருக்க வேண்டிய தலைவிதியினால் மங்களாசாஸனத்தில் தாங்கள் தமிழ்ப் பாசுரம் சொல்ல வேண்டுமென்கிற ஒரு கிளர்ச்சியைக் கிளப்பியதனால் இதுபற்றிய வியாஜ்ஜியம் பல வாண்டுகள் நடந்து 24—3—69 தேதியன்று) ஹைகோர்ட்டில் இரண்டு ஜட்ஜ்களின் சேர்த்தியில் இந்த நூதன முயற்சி வலிதாக மறுக்கப்பட்டு முடிந்தது. இதில் எதிரிகள் ஏறக்குறைய ஆயிரம் ரூபாவரையில் கோர்ட்காஸ்ட் செலுத்தக் கட்டளையிடப்பட்டார்கள். [ஆயிரத்திற்கு 40, 50 குறைவாயிருந்தாலிருக்கலாம்.

மத்யஸ்த மஹநீயர்களே! ஆசாரியர் எம்பெருமானைத் தொழும்போது தமிழ்ப்பாசுரம் அநுஸந்தித்தால்தான் அழகாயிருக்குமென்று ஹ்ருதயபூர்ண ப்ரேமபுரஸ்ஸரமாகத் தோன்றினால் ஆர்ஜவத்துடன் செய்யவேண்டியமுறை என்ன? தேவஸ்தானங்களில் ஒவ்வொரு கைங்கர்யத்திற்கும் மிராசுதாரர்கள். நியதமாக ஏற்பட்டிருக்கிறார்கள். பாசுரங்கள் ஸேவிக்குமதிகாரம் தென்கலை

யாருடையதாய் எற்றைக்குமேழேழ்பிறவிக்குமாக ஏற்பட்டிருக்க, அவர்களை ஸேவிக்கும்படி பிரார்த்தித்தால் எளிதாக நடைபெறுதா? அதுவன்றோமுறை. சர்க்கரை கற்கண்டு வாழைப்பழம் அடைக்காய் அமுதுசெய்யப் பண்ணவேணு மானாலும் அர்ச்சகரையன்றோ அழைக்கவேண்டியிருக்கிறது. வம்புபேசவல்ல அரட்டைப்பசங்கள் சொல்லுவதுண்டு-“தலைமயிரையிட்டு யானையை யிழுப்போம்; வந்தால் யானை; போனால் மயிர்தானே; போகட்டும்” என்று. இதே நினைவுதான் இவர்களுக்கு ஒவ்வொரு வியாஜ்ஜியத்திலுமுள்ளது. ‘புதிது புதிதாக எந்த விவா தத்தைக் கிளப்பலாம், எங்கெங்கே நாமத்தைப் போடலாம்’ என்கிற ஆலோசனை தான் இவர்களுக்கு அல்லும்பகலும். ஜட்ஜுகளும் இதையறிந்து பல தடவை களில் டோஸ் கொடுத்திருக்கிறார்கள். அது தீர்ப்புகளில் ஏறிக்கிடப்பதைப் பார்க்கலாமே. கடைசியாக வெளிவந்த மங்களாசாஸனத்தீர்ப்பில் பார்க்கலாம்.

இவர்களுடைய நாபியில் ஊறியிருக்கிற எண்ணம் இவர்களுடைய திரு வெழுத்துக்களால் உலகறிய நிற்கிறது. இன்றைக்கும் நாளைக்கும் வியாஜ்ஜியங் களில் தலையிட்டுவருகின்றவர்களும் ஸன்னிதி வீதியிலுள்ளவர்களுமான ஸ்ரீ R. வரததாதாசாரும் P. ஸுதர்சனதாதாசாரும் செங்கற்பட்டில் நடந்த (O. S. No. 7 of 1945) வியவஹாரத்தில்—“ஆழ்வார்களின் தமிழ்ப்பிரபந்தங்கள் ஸ்த்ரீ களுக்கும் சூத்திரர்களுக்குமாகவே ஏற்பட்டவையென்று கூசாமல் அபிடவிட் கொடுத்திருக்கிறார்கள். (O. S. No. 30 of 1956ல் செங்கற்பட்டு ஸப்ஜட்ஜ், தமது ஜட்ஜ்மெண்டு பாரா 20ல் தம் மனதுக்கெட்டியவரையில் வடகலையார்கள் தமிழ்ப் பிரபந்தங்களைச் சேவிக்க உள்ளூர ருசிகொண்டவர்களல்லர்-என்று எழுதி இவர் கள் தமிழ்ப்பாசுரங்களைச் சொல்லத் தகாதவர்கள் என்று முடிவுகட்டியிருக்கிறார். இதெல்லாம் இந்திரஜாலமன்று. பொய்யும் புளுகுமெழுதிப் பிறரை வஞ்சிப்ப தன்று. சாஸ்த்ரார்த்தங்களை விவரித்து நாமெழுதும் நூற்றுக்கணக்கான நூல் களில் எப்படி வரிதோறும் பிரமாணங்களைக் காட்டுகிறோமோ அப்படியே இவையு மெல்லாம் பேர்க்கவும் பேராதபடி ப்ரமாண ஸித்தங்கள்.

ஆதியிலிருந்தே ஆலயவழிபாடுகளில் ஒதுங்கியிருந்த இவர்கள் தேசிக னோடு புது உறவு கொண்டாட ஆரப்பித்தது முதலாகவே இத்தகைய விவகாரங் களைக்கிளப்பி வீணாக பங்கமடைந்து வருகிறார்கள். இதை ஹைகோர்ட் ஜட்ஜ்கள் அடிக்கடி உலகுக்குக் குன்றிவிட்ட விளக்காகக்காட்டி வருகிறார்கள். 289 of 1962 ஸ்ரீ பெரும்பூதூர் தேசிகர் நாமக்கேஸ் அப்பீலில் ஹைகோர்ட் ஜட்ஜ் கனம் A. அழகிரிசாமி யவர்கள் எழுதியிருப்பது உலகம் பரவியுள்ளது; (அதிலுள்ள முக்கிய வாசகங்கள்—)

“தற்பொழுது ஸ்ரீ பெரும்பூதூரில் வடகலையார்கள் ஒரு தனிக்கோயில் கட்டி அதில் தேசிகரை ஸ்தாபித்திருக்கிறார்கள். தங்கள் இஷ்டப்படி - பெரிய கோயிலில் நடவாதது தான் இதற்குக் காரணம். முக்யமாக ஸ்ரீ பெரும்பூதூரில் தேசிகனை முதன் முதலில் தென்கலையார்களே உடையவர் சன்னிதிக்குள் பிர திஷ்டை செய்திருப்பதனால் இது தென்கலையார்களுக்கு தேசிகனிடத்தில் விரோதமில்லை என்பதோடு தங்கள் ஆசார்யர்களில் ஒருவராகவும் அவரை

மதிக்கிறார்கள் என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. இது சுமார் 400, 500 வருடங்களுக்கு முன்பேயாம். தேசிகன் தென்கலையாருக்கு ஆசாரியர் என்பதை ஒப்புக்கொள்வதோடு பலகோயில்களிலும் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அக்காலத்தில் வடகலையார்கள் எந்த தேசிகனிடத்திலும் உறவு கொண்டதாகவோ தங்கள் ஏகதேச ஆசாரியர் என்ற முறையில் புஸ்தகங்களோ, ரிகார்ட்டுகளோ, கோயில்களோ இருந்ததாக ருஜுப்படுத்தவில்லை.'' என்பது ஜட்ஜ்மெண்டின் ஸாரம்.

மேலே குறித்த ஹைகோர்டு ஜட்ஜிமெண்டில் ஒவ்வோரக்ஷரமும் பொன் தகட்டில் பதியவைக்கத்தக்கது. நிகமாந்தமஹா குருவைப் பல கோவில்களிலும் பிரதிஷ்டை செய்தவர்கள் தென்கலையார்களே—என்பதும்; முற்காலத்தில் வடகலையார்கள் எந்த தேசிகரிடத்திலும் உறவு கொண்டதாகவோ தங்கள் ஏகதேச ஆசாரியர் என்ற முறையில் புஸ்தகங்களோ ரிகார்டுகளோ கோயில்களோ இருந்ததாக ருஜுப்படுத்தவில்லை—என்பதும் பிரளயத்திலும் அழியமாட்டாத விஷயங்களல்லவா? மஹா மேதாவியான ஜட்ஜ் "ரிகார்டுகளை ருஜுப்படுத்தவில்லை, கோவில்களை ருஜுப்படுத்தவில்லை" என்றெழுதுவதோடு நில்லாமல் "புஸ்தகங்களை ருஜுப்படுத்தவில்லை" என்று மெழுதியிருப்பது பிராமாணிகர்களால் விசேஷித்து கவனிக்கத் தக்கதல்லவா?

புத்தகங்களை ருஜுப்படுத்துவதாவதென்ன? எந்த புத்தகத்தைக் கொண்டு என்ன ருஜுப்படுத்த வேண்டும்? என்று அவரவர்களது உள்ளத்துள்ளே உலாவ வேண்டும். கனம் ஜட்ஜினுடைய கருத்து நாம் கஷ்டப்பட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய நிலைமையிலா இருக்கின்றது? தேசிகருடைய புத்தகங்களில் [அதாவது. அவரியற்றிய நூல்களில்] அவரால் நிலைநாட்டப்பட்ட அர்த்தங்களை இவர்கள் ஆதரிப்பவர்களல்லர் என்பது தானே ஜட்ஜின் அபிப்பிராயம்.

தேசிகரைப்பற்றிக் கோர்ட்டு மூலமான விவகாரங்கள் தோன்றாத ஆலயங்களில் [அதாவது, திருவயிந்திரபுரம் திருக்குடந்தை, சின்ன காஞ்சீபுரம் ஸ்ரீரங்கராஜ வீதி மடம், விளக்கொளி கோவில் பரகால மடம் போன்றவற்றில்] இவர்கள் எப்படி நடந்துகொண்டாலும் கேள்வியில்லை; கோயில் திருமலை பெருமாள் கோயில் என்கிற முக்கியமான மூன்று மஹா ஸ்தலங்களில் எத்தனை தடவை விவகாரங்கள் தோன்றின வென்பதும், அத்தனை தடவைகளிலும் நீதிபதிகள்—ஸுப்ரீம் கோர்ட்டுவரையிலுமுள்ள நீதிபதிகள் "தேசிகரருகில் நாடாதீர்கள்" என்று வலிதான கட்டளைகளை ஸிவில் வழியிலும் கிரிமினல் வழியிலும் இறந்த காலநிகழ் காலங்களில் மட்டுமன்றிக்கே எதிர் காலத்திலும் பிறப்பித்துவருவதை நடு நிலையாளரன்றோ கவனித்துணர வேண்டும்.

தேசிகரோ அளவு கடந்த நூல்களை யருளிச் செய்தவர். அந்த நூல்களிலுள்ள அர்த்தங்களை இவர்கள் மனஸ்கரித்தேயன்றோ புறக்கணித்து வருகிறார்கள். "ஸ்ரீ தேசிகனருளிய தத்வார்த்தரத்னவளீ" என்றொரு வடமொழி நூல்

ஐந்நூறு சுலோகங்கள் கொண்டது தேசிகருடைய யதார்த்தாவதார வருஷமான சுக்ல வருஷத்தின் கணக்கிலே எழுநூருண்டு விழா கொண்டாடத் தக்கதான இந்த ஸௌம்ய வருஷ கந்யாச்ரவண நன்னளின் சாச்வதஸ்மாரக சின்னமாக வெளிவந்திருப்பதை வடமொழி தென்மொழி யுரைகளுடன் வாசிக்க வல்லவர்களுக்கு உண்மை விளங்கும். உலகுக்கு இதுவொரு மஹத்தான பாக்யம்.

## உபய கலையார்களூர் உற்றுநோக்குக.

இவ்விஷயங்களை இப்போது நாம் இவ்வளவு விரிவாக எழுத வேண்டிய காரணம் சற்று விவரிக்கலாகிறது. மதுராந்தகத்தில் வாழும் ஸ்ரீமதுடயவே. N. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி நமக்கு நாற்பது வருடங்களுக்கு மேலாகவே பரமஸ்நிக்தர். இவர் உத்யோகத்திலிருந்து விச்ராந்தி பெற்றது முதல் [ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர் காலத்திலிருந்து] ஸ்ரீமதஹோபில மடத்தின் ஏஜண்டாக இருந்து வருகிறார். உண்மையில் இவர் சிறந்த விவேகி; நம்மிடத்தில் உள்ளும் புறமுமொத்த விச்வாஸி. இவர்க்கும் நமக்கும் பல நூற்றுக் கணக்கான கடிதங்களின் போக்குவரத்து உண்டு. சென்ற வைகாசியுத்ஸவத்திற்குப் பிறகு இவர்க்கு நாம் யோகக்ஷேம விசாரரூபமாக ஒரு கடிதம் எழுதினோம். அதற்கு இவர் எழுதின பதில் புதிய முறையில் அமைந்திருந்தது. அதன் ஸாரம் என்னவென்றால், ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையையும் மற்றும் என்னுடைய பல நூல்களையும் தாம் ஒருவரி விடாமல் பூர்த்தியாக வாசித்து வருவதைத் தெரிவித்து விட்டு, சில விடங்களில் தம்மைப் போன்ற தேசிக பக்தர்களின் மனம் நோகும்படியான விஷயங்கள் எழுதப்பட்டுவருவதாக ப்ரஸ்தாவித்திருந்தது. அதற்கு நாம் பதிலெழுதவும், மறுபடியும் அவர் எழுதவுமாகக் கடிதப் போக்குவரத்துக்கள் அதிகரித்தன. அந்த ஸ்வாமிக்கு நாம் தெரிவித்த விஷயங்களின் ஸாரமாவது—

முன்னோர்களைவிட நாம் எந்த விதத்திலும் அதிசயிதஜ்ஞான முடையோமல்லோம். ஆனாலும் மதாபிமானத்தாலும் ஸம்ப்ரதாயாபிமானத்தாலும், தம் தம் ஆசாரியர்கள் ஸாதித்துள்ள விஷயங்களில் திடமாகவுண்டான நம்பிக்கையினாலும் இதர மதங்களிலுள்ள பெரியார்களின் வாக்குக்களில் குற்றங்குறைகள் உள்ளதாக அவரவர்கள் காட்டிவருவதை எங்குங் காண்கிறோம். ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகள் அவதார புருஷர்கள், மஹாஜ்ஞானநிதிகள். இக் காலத்து வித்வான்களுக்கு அவருடைய ஞானத்தில் ஏகதேசமும் வாய்க்காது. இது யாராலும் மறுக்க முடியாதது. அப்படியிருந்தும் அவருடைய நூல்களிலும் குற்றங்குறைகளைப் பிற மதத்தவர்கள் நிரூபித்துத் தானே வருகிறார்கள். *அபிநிவேசவசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:* என்று ஆளவந்தார் ஸாதித்தது ஆதிசங்கராசாரியர் விஷயமென்று தேசிகன் காட்டுகிறார். அதன் உண்மை எப்படியாவதிருக்கட்டும். மதாந்தரஸ்தர்களான ஆசாரியர்களுக்கு நாம் குறை கூறுவதுபோல் நம் ஆசாரியர்களுக்கும் மதாந்தரஸ்தர்கள் குறைகூறினால் அதற்கு நாம் வருந்தலாமோ? சக்தியுண்டானால் விடையிறுக்க வேண்டும்; இல்லையானால் வாளாவிருக்க வேண்டும். க்ரந்தம் யார் செய்ததானாலென்ன? அநுபபத்தி

தோன்றி அதை வெளியிட நேர்ந்தால் வித்வான்கள் விடையிறுக்கும் வழி தேடவேண்டுமே யொழிய "இவர் ஆசார்யரை தூஷிக்கிறுர், நிந்திக்கிறுர், கொடிதாக அபசாரப்படுகிறுர்" என்று பறை சாற்றுவது விவேகிகளுக்கு உரியதன்று.

முக்கியமாக ஒரு விஷயம் விளம்புகிறேன். ஸ்ரீமான் உ. வே. D. T. தாதாசாரிய ரென்பவர் தேசிக ஸம்ப்ரதாய ஸ்தர்களுள் ஒரு பரிகணித வித்வான். தேசிகபக்தியில் குறையற்றவர். இவர் ரூபகபரிசுத்தி யென்று ஒரு சிறுநூல் எழுதி 1946 ஆம் வருஷத்தில் திருமலை திருபதி தேவஸ்தான ப்ரெஸ்ஸில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். அதில் (பக்கம் 12ல்) தேசிகனருளிய தத்வடீகா க்ரந்தத்திலிருந்து மூன்று காரிகைகளை யெடுத்துக்காட்டி "இதி ஸ்ரீவேங்கடநாதீயதத்வடீகாக்ரந்தாத் அவகம்யதே" என்றெழுதி, "ஏவம் ஸமாதாநாநாம் அயமாசயோ லக்ஷ்யதே" என்றுரம்பித்து "... ... ப்ரயாஸ இதி அஸ்த்யேவ பஹு அஸாமஞ்ஜஸ்யம்" என்று கல் வெட்டாக முடித்திருக்கிறுர். தாம் கண்ட அஸாமஞ்ஜஸ்யத்திற்கு மூன்று ஹேதுக்களை விவரித்திருக்கிறுர். இது உலகம் பரவியிருக்கிறது. தேசிக திவ்யஸூக்தியை அஸமஞ்ஜஸமென்று தூஷிக்க இவரா அதிகாரி? என்று வித்வான்கள் சொல்லிநிற்கிறுர்களே யொழிய 'இவர் அஸமஞ்ஜஸமென்றது அஸமஞ்ஜஸம்' என்று கண்டிக்க இதுவரை [இருபத்து மூன்று வருஷ காலமாக] ஒரு தேசிகபக்த வித்வானும் முன்வரவில்லை.

இதனுல் இரண்டு விஷயங்களை முக்கியமாக நாம் தெரிந்துகொள்ளுகிறேம். (1) தேசிகனும் அஸமஞ்ஜஸமாக எழுதிவைத்ததுண்டு என்பது முதல் விஷயம். (2) அஸமஞ்ஜஸமானதை அஸமஞ்ஜஸ மென்று எடுத்துக்காட்டுவதனுல் தேசிகபக்திக்குக் குறையில்லை — என்பது இரண்டாவது விஷயம். மூன்ருவது விஷயங்கூட ஒன்று தேறும். (அதாவது) ஒருவர் அஸமஞ்ஜஸமாக எழுதுவதுண்டென்று ஏற்பட்டால் அப்படி ஒருவிஷயந்தானிருக்கவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை யல்லவா? வேதத்தில் "தஸ்மாத் நைகா த்வெள பதீ விந்ததே" என்றதற்கு மாருக ஒருத்தி பர்த்தாக்களிருவரைக் கொண்டதாக வெளிவந்தால் இருவர் தானென்று நிஷ்கர்ஷமில்லை யன்ரே?

இத்யாதி விஷயங்களை நாம் மேலே ப்ரஸ்தாவித்த மதுராந்தகஸஹ்ருத்துக்கு விளக்கமாக எழுதினேம். தேசிக திவ்யஸூக்தியை D. T. தாதாசாரியார் அஸமஞ்ஜஸ மென்று எழுதிவிட்டால் அஸமஞ்ஜஸமாய் விடுமோ? ஸ்ரீராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து நிர்ப்பந்தபூர்வகமாக ஸ்ரீரங்கம்கோவிலைத் தென்கலை யாக்கிவிட்டார்கள் என்று கூட அவர் எழுதியிருக்கிறுர்; அதனுல் அது உண்மையாய்விடுமோ" என்று அவரவர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறுர்களே யொழிய, எழுத்தால் கண்டித்தவர்களுண்டோ? அவரை தேசிக பக்தகோஷ்டியிலிருந்து விலக்கினுருண்டோ? என்றும் கேட்டிருக்கிறேன். திருக்குடந்தையில் கொட்டையூர் சேஷசாயி யென்று ஒரு பிரபல வித்வானிருந்தார்; அவர் "தேசிகன் கவிதார்க்கிக ஸிம்ஹபிருதுக்கேற்ப கவித்வதார்க்கிகத்வத்தோடு நிற்கலாம்; வியா

கரணத்திலும் சிலவிடங்களில் ப்ரஸங்கம் செய்வது சரியல்ல" என்று பறைசாற்றிக் கொண்டிருந்தாரென்பதையும் மதுராந்தக ஸுஹ்ருத்துக்கு எழுதியிருந்தேன். அவ்வளவோடு கடிதப்போக்கு வரத்து நின்றுவிட்டது.

என்னுடைய அந்தரங்கமான அபிப்பிராயத்தை வெளியிட்டுத் தலைக்கட்டு கிறேன். ஸர்வஜ்ஞ தேசிகதிவ்யஸூக்திகளை தூஷிக்கநாம் அதிகாரிகளுமல்லோம், சக்தருமல்லோம். ஸம்ப்ரதாயார்த்த நிஷ்கர்ஷங்களில் பிள்ளைலோகாசார்யரும் மணவாளமாமுனிகளும் பகவத்பாஷ்யகாராதிகளின் வழியைத் தழுவுமவர்களென்பதை அடியேன் கிக்கனக் கொண்டவன். தேசிகனும் பெரும்பாலும் அவ்வழியையே தழுவியவர். சிறுபான்மை காணும் மாறுபாடுகளை நாம் நிரூபித்தால்' வித்வான்களாயுள்ளவர்கள் ப்ராமாணிகஸரணியில் விடை யிறுத்து நம்மையும் உலகத்தையும் தெளிவிக்க முயல்வதே நேர்மையானவழி. தேசிக திவ்யஸூக்திகளில் பெரியவாச்சான் பிள்ளையினுடையவும் பிள்ளை லோகாசார்யருடையவும் ஸ்ரீஸூக்திகளைத் தழுவின பகுதிகளே பெரும்பான்மையாகவுள்ளன. சிற்சில விடங்களில் அவற்றுக்குமாறுன உக்திகள் இருப்பதுபோலவே பூர்வோத்தர விருத்தங்களான பகுதிகளும் உள்ளன. இவ்விரண்டு விதங்களையும் நாம் பல கால் பலநூல்களில் சோம்பாது விவரித்திருக்கின்றோம். இன்னமும் அவசியமான ஸமயங்களில் விவரிப்போம். "ஆஹாரங்கள் ஸமர்ப்பித்தால் பரிஹாரமாய் விடுமென்றும், அதுதவிர வேறு வழியில்லையென்றும்" சில சதுரர்கள் முடிவு செய்திருப்பதாகவும் நமது காதில் விழுவதுண்டு. நம்முடைய உண்மையுரைகளைக் காணும் அசக்தர்களுக்கு இது மிகச் சிறந்த ஆலோசனையே யென்று உகப்போம். நமது நாட்டு ஜட்ஜ்கள் மட்டுமன்றிக்கே த்வீபாந்தர ஜட்ஜ்களுங் கூட நிர்ணயித்தவிஷயமே (இதில் கீழே பக்கம் 137ல் விளக்கப்பட்டதென்பதை அறியாத அறிஞர் இல்லை. விளக்கொளி ஸன்னிதி வேதாந்ததேசிகனுக்குத் திருவோணந்தோறும் மட்டுமல்லாமல் வருஷம் முந்நூற்றறுபத்தைந்து நாளும் காலை பகல் மாலை இரவு ஆகிய நான்கு வேளைகளிலும் திருவீதிப்புறப்பாடு மஹோத்ஸவம் நடத்தினலும் ஏற்கும். ஸ்வாமியினுடைய பெருமைகளை உள்ளபடி யுணர்ந்தவர்கள் நடத்தினல் அழகியதாம். .... ... *

.... .... ... ... ....

தேவப்பெருமாள் திருவருளென்று நாம் தொடங்கிய கட்டுரையில் இது ப்ராஸங்கிகம். தேவஸ்தானத்தில் நேர்ந்த வ்யவஹார விஷயங்களைத் தெரிவிக்க வேண்டிய ஆவச்யகதை ஏற்பட்டு எட்டு பக்கமளவும் அதை உள்ளவாறு தெரிவித்தேன். இத்தகைய விஷயங்களில் என்னைக்காட்டிலும் அதிக அநுபவமும் ஆராய்ச்சியுமுள்ள ஸ்ரீ உவே. நல்லப்பா ஜீயப்பங்கார்ஸ்வாமி சில மாதங்களுக்கு முன் எழுதியுள்ள கட்டுரை அடுத்த இதழில் பிரசுரிக்கப்படும். அதற்கு முன்னுரை போன்றதிது வென்று கொள்க. ... ... ... (*)

தேவப்பெருமாள் திருவருள் முற்றிற்று.

---

# ஸ்ரீ ரங்கநாத பாதுகையில் ஒரு சிறு விமர்சம்.

15-6-69 தேதி கொண்ட ஆனிமாதத்துப் பாதுகா பத்திரிகையில் நடாதூ ரம்மாள் அருளிச்செய்த பரத்வாதி பஞ்சகமும் பரமார்த்த ஸ்துதியும் சுருக்கமான உரையுடன் வெளி வந்திருக்கின்றது. இவ்விரண்டிலும் சில பாடங்களைப்பற்றி அடியேன் நெடுநாளாகவே விசிகித்ஸை கொண்டிருக்கிறேன். ஸமாதானம் கிடைக்கவேணுமென்கிற ஆசையினுல் விஜ்ஞாபிக்கிறேன்.

பரத்வாதி பஞ்சகத்தில் விபவாவதார ச்லோகத்தில் "அதிபாப கம்ஸநிதநம்" என்று பாடம் வந்திருக்கின்றது. நிதநம் என்பது மரணவாசகமே யொழிய மாரண வாசகமன்று. இங்கு மாரணமே விவக்ஷிதமாகையால் "அதிபாப கம்ஸ ஹநநம்" என்று பாடமிருந்ததாகப் பெரியார் கூறுகின்றனர்.

அதிலேயே அந்தர்யாமி ச்லோகத்தில் "சதுர்விதேஷு ஜநிஷு" என்று பாடம் வந்திருக்கிறது. ஜநிசப்தம் *ஜநிருத்பத்தி ருத்பவ:* என்ற அமரகோசத் தின்படி [ஸாஹசர்யாத்] ஸ்த்ரீலிங்கமே யொழிய புல்லிங்கமன்று. எந்த கோசத் திலும் புல்லிங்கமாகக் காண்பதில்லை. ஆகவே "சதுர்விதாஸு ஜநிஷு" என் பதே ப்ராசீன பாடமென்கிருர்கள்.

அதிலேயே அர்ச்சாவதார ச்லோகத்தில் "கரிகிர்யாதௌ சதே அஷ்டோத் தரே ஸ்தானே" என்று பாடம் வந்திருக்கிறது. சத சப்தத்திற்கு விசேஷ்யத்வா காரமும் விசேஷணத்வாகாரமு முள்ளது. எந்த ஆகாரத்திலும் அது நித்யைக வசனந்தான். ஆனுல் இது விசேஷணமாயிருக்கும்போது விசேஷ்யபதம் நியமேந பஹுவசநாந்தமாகவே யிருக்கவேணும். 'சதம் புத்ரா:' என்னவேணுமே யொழிய (சதம் புத்ர:) என்னக்கூடாது. ஆகவே இங்கு ஸ்தாநேஷு என்றிருக்க வேணுமே யொழிய (ஸ்தாநே) என்று ஏகவசனமாக இருப்பது பொருந்தாதே. இங்கு வேறு வகையான பாடமும் காணவில்லை. இது ஸாமாந்யமான பிழை யன்று. இங்குப்பெரியார் விமர்சிக்கவேணும். ஸுதர்சந சதகத்தில் (4) *ஆராதா ராத் ஸஹஸ்ராத்* என்றவிடத்து அடியேனுடைய வியாக்கியானத்தில் விபுலமான விமர்சமும் காணவேணும்.

பரமார்த்த ச்லோகத்தில் (ஸத்ஸங்காத்) என்பதில் "தமநித்வாராத் பஹிர் நிர்க்கத:" என்று பாதுகை அச்சிட்டிருக்கும் பாடம் தவறு. உரையெழுதும்போது "நடுநாடிவழியாக வெளியேறி" என்றெழுதப்பட்டுள்ளது. இதுயுக்தமான உரை தான். ஆனுல் இப்பொருளுக்கு "மத்யதமநித்வாராத்" என்கிறபாடம் இணங் காது. பெரியோர்களின் பாடமும் அதுவன்று. "தமநித்வாரா" என்பதுதான் மஹான்கள் அநுஸந்தித்து வரும் பாடம். *த்ருவம் அபாயே அபாதாநம்* என்கிற பாணிநிஸூத்ரத்தின்படி இங்கு பஞ்சமி வருவதற்கு ப்ரஸக்தியில்லை. தமநி த்வாரம் த்ருவஸ்தானமாக இருந்தால் த்வாராத் என்னலாம். (ப்ர—அ.)

ஸ்ரீ:

# ஸ்ரீ வேணுகோபால கிருஷ்ண கைங்கர்ய ஸபா

முத்தியாலுப்பேட்டை, மதருஸ் – 1.

# முதல் ஆண்டு பூர்த்தி விழா (10-8-1969)

ஸ்ரீமந்நாராயணன் அர்ச்சாரூபியாய்த் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திவ்ய ஸ்தலங்களில் ஒன்ருகத் திகழும் சென்னை, முத்தியாலுப்பேட்டை பவழக்கார வீதியிலுள்ள ஸ்ரீ வேணுகோபால கிருஷ்ணஸ்வாமி (ஸ்ரீ கிருஷ்ணன் கோயில்) தேவஸ்தான திருமாமணி மண்டபத்தில் மேற்படி ஸபாவின் ஓர் ஆண்டு பூர்த்தி நிறைவினை முன்னிட்டு நாளது சௌமியஹு ஆடிமீ 26 ஆம் தேதி (10—8—1969) ஞாயிற்றுக்கிழமை இதனடியில் கண்டவாறு "வித்வத்ஸதஸ்" மாலை 2-30 முதல் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும் வந்திருந்து அநுபவிக்கும்படி பிரார்த்திக்கிறோம்.

## வித்வத் ஸதஸ் நிகழ்ச்சி

1. ஸ்ரீ. உ. வே. ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான ஸ்ரீமத் பேரருளாள யதிராஜ ஜீயர் ஸ்வாமி, அத்யக்ஷகர் "எம்பெருமானாரும் திவ்ய தேசங்களும்"
2. ஸ்ரீ. உ. வே. வித்வான் காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்யர் ஸ்வாமி. "கண்ணன் கோலச் செயல்கள்"
3. ஸ்ரீ. உ. வே. வித்வான் உத்தமூர் வீரராகவாச்சார்யர் ஸ்வாமி, "ஸௌஹார்த்தம்"
4. ஸ்ரீ. உ. வே. வித்வான் காரப்பங்காடு வெங்கடாச்சார்யர் ஸ்வாமி, "கீதாஸாரம்"
5. ஸ்ரீ. உ. வே. வித்வான் ஆழ்வார்திருநகரி திருமலை நல்லான் ராமகிருஷ்ண அய்யங்கார் ஸ்வாமி, "காருண்யம்"
6. ஸ்ரீ.உ.வே. வித்வான் வேளுக்குடி K. வரதாச்சார்யர்ஸ்வாமி "இருட்டறையில்விளக்கு"
7. ஸ்ரீ. உ. வே. திருக்கள்ளம் நரசிம்ம ராகவாச்சார்யர் ஸ்வாமி, "ஔதார்யம்"
8. ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் பாஷ்யகாராசார்யர் ஸ்வாமி, "வாத்ஸல்யம்"
9. ஸ்ரீ. உ. வே. காரப்பங்காடு ரங்கராஜய்யங்கார் ஸ்வாமி, "ஸௌசீல்யம்"
10. ப்ரம்மஸ்ரீ கல்லிடைக்குறிச்சி ராமகிருஷ்ண சாஸ்திரிகள், "க்ஷமா"
11. திரு. ஞானசுந்தரம், M.A., (தமிழ் விரிவுரையாளர்—சென்னை கந்தப்ப செட்டியார் கல்லூரி) "மங்களாசாஸனம்"

இப்படிக்கு,

K. S. ஸ்ரீநிவாஸாச்சார்யர்,
(Teachers' Publishing House.)
தலைவர்.

P. B. அனந்தாச்சார்யர்,
அட்வகேட் — டிரஸ்டி
உப தலைவர்.

V. சிந்தாமணி அய்யங்கார்,
S. சடகோபாச்சார்யர்,
காரியதரிசிகள்.

பெரிய காஞ்சீபுரம் ராஜவீதியில் கச்சபேச்வராலய ஸமீபத்தில் விளங்கும் சுக்ல யஜுர்வேத பாடசாலையில் ஆண்டு தோறும் கார்த்திகை மாதத்தில் யாஜ்ஞவல்க்ய ஜயந்தீ மஹோத்ஸவம் சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள். ப்ரஹ்மஸ்ரீ. ப்ரவசனகலா ப்ரவீண. பதரீநாராயண சாஸ்திரிகளின் வேண்டுகோளுக்கிணங்கி அனேகமாய் வருஷந்தோறும் அவ்விடத்து ஸதஸ்ஸில் நாம் அந்வயிப்பதுண்டு. ப்லவங்க வருஷம் கார்த்திகை மாத ஸதஸ்ஸின் ஏகதேசக்காட்சி இது. இந்த வைதிகஸதஸ்ஸு நீடூழி வாழ்க. ... *



பெரிய காஞ்சீபுரம் சுக்லயஜுர் வேத பாடசாலையில் வரவேற்பு.
ஸ்ரீமான் உ. வே. C. ஸ்ரீநிவாஸாசாரியார் Advocate காட்சி தருகிறார்.



Sriyuth Ramadayal Somani, Bombay,

(Bombay) பாம்பேமகா நகரத்தில் ஸோமாணீவர்க்கம் ப்ரஸித்தி பெற்றது. ஜகத்விக்க்யாத, ஜகத்குரு ஸ்ரீ பிரதிவாதி பயங்கரம், காதி. அனந்தாசார்ய மஹாஸ்வாமியின் திருவடி ஸம்பந்தம் பெற்று அவ்விடம் பனஸவாடி, ஸ்ரீ வேங்கடேச்வர தேவஸ்தான நிர்வாஹ நிஷ்ணுதர்களாய் விளங்குபவர்கள். இந்த ஸோமாணிவர்க்கத்தில் தற்காலம் தலைவராய் விளங்குபவர் ராமதயாள் ஸோமாணி இவர்.

இவர் நம்முடைய திவ்ய ப்ரபந்த ஸம்ஸ்க்ருத ஹிந்தீ வியாக்கியானத்தில் பெரும் பகுதியை அச்சிடுவித்தவர்.

The Somanis are the members of a philanthropic family of Sri Vaishnavas residing at Bombay. They are the disciples of the famous Kanchi Prathivadi-bhayankaram Jagadguru Ananthacharya Swamyjee. They manage the Fanaswadi Sri Vankateswara Temple in a grand manner.

They are associated with many other similar Institutions. Sri Ramadayal Somani is the present Head of the family. He has contributed very liberally towards printing Sahasrageeti with Sanskrit and Hindi commentaries. ... ... *

## ஆப்தர்களுக்கு அறிவிப்பு

இதன் கீழே வெளிவரும் கட்டுரையானது இருபத்துமூன்று வருடங்களுக்கு முன்பு நம்மால் எழுதி வெளியிடப்பட்டது. யாருக்காக எதற்காகவென்பதை கட்டுரையில் சில வரிகள் வாசித்துத் தெரிந்துகொள்ளலாம். இக்கட்டுரையைப் பலர் வாசிக்க விரும்புவதாலும் ஒரு காபிகூட கிடையாதாகையாலும் இங்கே மறு பதிப்பாகிறது.

# பெரியாழ்வார் திருமகள்

த்ரிவேணி யென்கிற ஆங்கில பத்திரிகையின் 1946ஸூ ஸெப்டம்பர்மீ வெளியீட்டில் 'ஆண்டாள் யார்?' என்று மகுடம் புனைந்தவோர் வியாஸம் வெளிவந்துளது. அதை யெழுதினவர் C. R. என்று இவ்வளவே காண்கிறது. ஆண்டாள் யார்? என்கிற வினவுக்கு எவ்விதமான விடை யிறுக்கப்பட்டு முடிந்திருக்கிறதென்னில்; ஆண்டாள் பெரியாழ்வாருடைய நிஜபுத்திரியுமல்லள்; வளர்த்த புதல்வியுமல்லள்; ஆண்டாளென்று ஒரு வ்யக்தி இருந்ததே கிடையாது; ஆழ்வார்கள் தங்களுடைய ஆண் தன்மையைவிட்டுப் பெண் தன்மையை யடைந்து பேசுகிற முறைமையும் ஒன்று உண்டாதலால் இந்த முறைமையைக் கைப்பற்றின பெரியாழ்வார் தம்முடைய மனோபாவனையையே ஒரு பெண்ணாக வைத்துப் பேசியிருக்கிறார். இது காவிய மனோபாவத்தின் கற்பனையாகும்.—என்கிற இதுவே மேற்குறித்த ஆங்கில வியாஸத்தின் தேறின தாற்பரியம். இது C R. என்பவருடைய தமது கற்பனையல்ல வென்றும், தம்முடைய மதிப்புக்குப் பாத்திரமான ஒரு நண்பரின் அபிப்பிராயமென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இது யாருடைய அபிப்பிராயமானாலென்ன? சில வருஷங்களுக்கு முன்பு ஒரு தமிழ்ப் பத்திரிகையிலேயே இவ்வபிப்ராயம் வெளிவந்திருந்ததாகவும் நாம் சில நண்பர் முகமாகக் கேள்விப்படுகிறோம். இவ்வபிப்ராயம் சிறிதேனும் பொருத்தமுடையதாக இருக்கவில்லையே. இதன் தத்துவத்தைப் பலர் அறிய விரும்புவதால் இங்கு இதைப்பற்றி நாம் விவரிக்கின்றோம்.

நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் தங்களுடைய பக்திப் பெருங்காதல் புற வெள்ளமிடப் பெற்று அதனால் ஆண்மையை யிழந்து பெண்மையை யெய்தித் தாய் பாசுரமாகவும் மகள் பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் பேசியிருப்பது உண்மையே. அப்படிப் பேசுமிடங்களில் பதிகத்தை முடிக்கும்போது "குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்றும், "பரகாலன் கலியன் சொன்ன" என்றும் தம்முடைய சொந்த வாக்காகவே முடிப்பதுதான் காண்கிறது. அதனால் அப்பதிகத்தில் மகளாகக் கூறப்பட்டவர் ஆழ்வாரே யென்பது தேறும்.

இதே வகையில் பெரியாழ்வாரும் தம்முடைய சொந்தப் பிரபந்தமான [பெரியாழ்வார் திருமொழியென வழங்கும்] திவ்வியப் பிரபந்தத்தில் இரண்டு பதிகங்கள் பாடியுள்ளார். அவை மூன்ருவது நூறில் 7, 8 பதிகங்களாகும். அவை யிரண்டும் தாய்ப்பாசுரமாகவே பேசியவை. அவற்றில் பெரியாழ்வாரே மகளாக வைக்கப்பட்டு அம்மகளினது ஈடுபாட்டைத் தாய் சொல்லி முறையிடுவதாக அமைத்திருக்கிறது. அவற்றுள் முதற்பதிகம் "ஐயபுழுதி யுடம்பளைந்து இவள் பேச்சு மலந்தலையாய்" என்று தொடங்குவது. இரண்டாவது பதிகம் "நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர்மேல் பனிசோர, அல்லியுந் தாதுமுதிர்ந்திட்டு அழகழிந்தாலொத்ததாலோ, இல்லம் வெறியோடிற்ருலோ என்மகளை யெங்குங் காணேன், மல்லரை அட்டவன் பின்போய் மதுரைப்புறம் புக்காள் கொலோ" என்கிற பாசுரம் தொடங்கியுள்ளது. 'எனது மகள் என் வீட்டைவிட்டு எம்பெருமான் பின்னே போய் விட்டாள் போல் தெரியவருகிறது' என்று இதில் கூறப்படுகிறது. இப்பதிகத்திலேயே நான்காவது பாசுரம்—"ஒரு மகள்தன்னை யுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டுபோனுன்" (3-8-1) என்பதாம்.

இப் பாசுரங்களை நோக்குமிடத்து, பெரியாழ்வார் தம்முடைய ஒரு பெண்பிள்ளையின் செய்தியை யெடுத்துக் கூறுவதாக மேலெழுந்த பார்வையில் தோன்றும். இப்படியே உண்மையாகச் சிலர் க்ரஹிப்பதுமுண்டு, '* ஒருமகள் தன்னையுடையேன் என்று பெரியாழ் வார் தாமே தமக்கு ஒரு பெண் இருந்ததாகவும் அவளைச் செங்கண்மால் கொண்டுபோன தாகவும் கூறுகிருர்' என்று ஹரிகதா காலக்ஷேபக்காரர்கள் சிலர் கூறுவதுமுண்டு. இது மிக வும் தவருன கொள்கை. ஏனெனில்; இங்கு மகள் என்று சொல்லுவது ஸ்த்ரீ பாவனையை யடைந்த பெரியாழ்வாரையே யல்லது ஆண்டாளையன்று. ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவம் இந்தப் பதிகங்களில் இல்லை. மேலே விவரித்த கொள்கையை த்ரிவேணியில் காணும் வியாஸம் கண்டிக்க எழுந்ததாகில் நாமும் அதில் சேர்ந்துகொள்ளுகிருேம்.

இங்குச் சிலர் கேட்கக்கூடும்; ஆண்டாளென்ருெரு வ்யக்தி இருந்ததேயில்லை யென்று C. R. என்பவர் சொன்னுலும், பெரியாழ்வார் மகளாக ஆண்டாள் இருந்ததாகவே ஸித்தாந்த மாதலால் "ஒருமகள் தன்னையுடையேன்' என்கிற பாசுரமானது அத்திருமகளை நோக்கியே அவதரித்ததென்று கொண்டாலென்ன? பெரியாழ்வார் தம்முடைய பக்தியை வெளியிடுதல் போலவே தம்முடைய மகளின் பக்தியை வெளியிடவும் ப்ராப்தமாகையாலும், உண்மையில் தமக்கு பரமபக்தியே வடிவெடுத்த புதல்வி யொருத்தி இருக்கிறபடியாலும் அவளைப்பற்றியே "ஒருமகள் தன்னையுடையேன்" என்கிற பாசுரம் அவதரித்ததாகக் கொண்டால் பிசகு என்ன? என்று கேட்கக்கூடும்.

இதற்குச் சொல்லுகிருேம் கேண்மின். இப்பதிகத்தின் முடிவு பாசுரம் எங்ஙனே யுள்ளதென்று பார்க்க வேணும். "தாயவள் சொல்லிய சொல்லைத் தண்புதுவைப் பட்டன் சொன்ன" என்றன்றே வுள்ளது. தாய்ப் பாசுரமாக வைத்துப் பெரியாழ்வார் தமது நிலை மையைத் தாம் பாடின பதிகம் என்றே இதற்குப் பொருளாதலால் இப்பதிகத்திலும் இதன் முற்பதிகத்திலும் பெரியாழ்வாரே மகளாக வைத்துப் பேசப்பட்டிருக்கின்ருரே யல்லது ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவமே இங்குக் கிடையாதென்பது நிஸ்ஸந்தேஹம். த்ரிவேணி பத்திரிகையின் வியாஸம் இவ்விஷயத்தையெடுத்து விளக்கி யிருக்குமாயின் மிக நன்ரும். உலகமெல்லாம் இதை மெச்சும். ஆண்டாளுடைய பாசுரங்களாகத் திருப்பாவை யென்றும்

நாச்சியார் திருமொழியென்றும் இரண்டு திவ்வியப் பிரபந்தங்கள் பிரசித்தமாயிருக்க, அவற்றினுட்புகுந்து விஷய மருமங்களைச் சிறிதும் நோக்காமல் ஆண்டாளென்றொரு வ்யக்தியே யிருந்ததில்லையென்றால் இதற்கு அர்த்தமுண்டோ?

திருப்பாவையின் முடிவு பாசுரத்தில் "பட்டர்பிரான் **கோதை** சொன்ன" என்றுள்ளது. அடுத்த நாச்சியார் திருமொழியின் பதினான்கு பதிகங்களிலும் முடிவில் "விட்டுசித்தன் கோதை சொன்ன" "குழற்கோதை கூறிய" "சுரும்பார் குழற்கோதை தொகுத்துரைத்த" "வில்லைத் துலைத்த புருவத்தாள் வேட்கையுற்று மிக விரும்புஞ்சொல்" என்றிங்ஙனே கூறி முடித்திருப்பதால் தனியே கோதை யென்றொரு பெண்மணி யிருந்தே தீரவேண்டும். இல்லையென்பதற்கு ஒரு சான்றுமில்லையே.

இங்குப் பிறர் என்ன சொல்லக் கூடு மென்னில், திருப்பாவை யென்றும் நாச்சியார் திருமொழி யென்றும் இரண்டு பிரபந்தங்கள் இருப்பது வாஸ்தவமே; இவையும் பெரியாழ்வார் தாமே பாடியவை என்கிறோம்—என்று சொல்லக்கூடும். இது பொருந்தா தென்பதை நிரூபிக்கிறோம். பெரியாழ்வார் பாடியவை இரண்டு பிரபந்தங்களென்றும் ஆண்டாள் பாடியவை இரண்டு பிரபந்தங்களென்றும் உள்ள வ்யவஹாரத்தைத் தள்ளி, பெரியாழ்வாரருளியவை நான்கு பிரபந்தங்கள் என்று கொள்ளவேணுமென்பதே பிறருடைய கொள்கை யென்று தேறி நிற்கும். பெரியாழ்வார் திருப்பல்லாண்டிலும் அதற்கடுத்த திரு மொழியிலும் பதிகந்தோறும் "விட்டுசித்தன் சொன்ன மாலை" "பட்டர்பிரான் சொன்ன பாடல்" என்றே கூறிவைத்து, திருப்பாவையிலும் நாச்சியார் திருமொழியிலும் அங்ஙனங் கூறாது "பட்டர்பிரான் கோதை சொன்ன" "விட்டுசித்தன் கோதைசொன்ன" என்றிப்படி கூறினது வஞ்சனையின்பாற்படுமன்றோ. இக்குற்றத்திற்கு ஆளாகார் பெரியார். பெரியாழ் வாரே பாவனையின் கனத்தாற் பெண்மை யெய்தி இவை பாடினாரென்னில், பிறவிடங்களிற் போலப் பட்டர்பிரான் பாடலாகவும் விட்டுசித்தன் சொல்லாகவுமே நிகமனப் பாசுரம் அமையுமே யல்லது "சுரும்பார் குழற்கோதை தொகுத் துரைத்த" என்றும் "வில்லைத் துலைத்த புருவத்தாள் விரும்பிய சொல்" என்றும் இவ்வகைகளிலேயே அமைந்திருப்பது பொருந்தாது. பெரியாழ்வாரே இப்படி மாறுபாடாக அமைத்தாரென்னில் அவரை வஞ்சனைக் குற்றத்திற்கு ஆளாக்க வேண்டியேவரும்.

நாச்சியார் திருமொழியினுட் புகுந்து நோக்குவோமாயின், பெரியாழ்வாரிற் காட்டில் வேறுபட்ட ஆண்டாள் என்னும் வ்யக்தி உள்ளபடி உண்டென்பது ஸ்பஷ்டமாகப் புலப்படும். மூன்றிடங்களெடுத்துக் காட்டுகிறோம். அத்திருமொழியில் (10-4.) "கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால், நானும் பிறந்தமை பொய்யன்றே" என்றொரு பாசுரமுள்ளது; இதற்குப் பூருவாசார்யர்கள் என்ன பொருள் கூறியிருக்கிறார்க ளென்று தெரிந்துகொள்ள விரும்பி அவர்களது வியாக்கியானங்களை நாம் தேடவேண்டாம். வெறுந்தமிழர் முறையில் நாமே பார்ப்போம். இப்பாசுரத்திற்கு என்ன பொருள் சொல்லத் தகுமென்று ஒவ்வொரு தமிழரும் பார்க்கலாம். "நானும் பிறந்தமை பொய்யன்றே" என்ற வளவுக்குப் பொருள் உணரவேணும். விபீடணனை நோக்கிப் பெருமாள் கடற்கரையிலே அபயமளித்தது அவனொருவனுக்கே யன்று; அவனை வியாஜமாகக்கொண்டு அவதரித்த சரமச்லோகமானது பக்தர்களெல்லாரும் தேறியிருப்பதற்குப்பாங்காகும். ஒருகால் அந்த வார்த்தை பொய்யாக ஆய்விட்டாலுங்கூட [அதாவது, அவ்வழியால் பேறு தவறினாலுங்

கூட] **நானும் பிறந்தமை பொய்யன்றே**=நான் ஒரு மஹா பாகவதருடைய பெண்ணாய்ப் பிறந்திருக்கிறேனே ; இப்பிறப்பு பொய்யாகமாட்டாதே: [அதாவது, இவ்வழியாலே பேறு தவறிப் போகமாட்டாதன்றோ] என்பதே இவ்விடத்திற்கு ஏற்ற பொருளாகும். இப்பாசுரத்தைக் கொண்ட பதிகத்தின் இறுதிப் பாசுரமும் இப்பொருளையே வற்புறுத்தும். அப்பாசுரமும் முக்கியமான தாகையால் அதனையும் விவரிக்கிறோம் :—

**"நல்லவென் தோழி! நாகணை மிசை நம்பார்,**
**செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென் ?**
**வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை,**
**வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே."**

இதன் தாற்பரியமாவது, என்னிழவுக்கு என்னைக் காட்டிலும் முன்னம் நோவுபடுகின்ற தோழியே! பராத்பரனான எம்பெருமான் ஒருவர்க்கு மெட்டவொண்ணாத பெருமையை யுடையராயிருப்பர் ; நானோ 'நீசனேன் நிறையொன்றுமிலேன்' என்னும்படி சிறுமைக்கு எல்லை நிலமாயிருப்பவள். அவர்க்கும் எனக்கும் பர்வத பரமாணுக்களோட்டைவாசி போந்திருக்குமான பின்பு அவரைப் பெறுதற்கு நம்மாற் செய்யலாவதுண்டோ ? ஆனாலும் எனக்குப் பேற்றுக்கு வழியுண்டுகாண். ஸர்வ வ்யாபகனான அப்பெருமானைத் தம் திருவுள்ளத்திலே அடக்கிக்கொண்டு அதனால் விஷ்ணுசித்தரென்று விருதுவஹிக்கும் நமது பெரியாழ்வார் தமக்குத் தேவராயிருக்கிற அப்பெருமானை ஓரிசையைச் சொல்லி யழைக்கவுமாம் ; கிழியறுத்து வரப்பண்ணவுமாம்; திருமஞ்சனத்தைச் சேர்த்து வைத்து 'நாரணா! நீராடவாராய்' என்றழைக்கவுமாம் ; திருக்குழல் பணியைச் சமைத்து வைத்துக் குழல்வார வாராய் என்றழைக்கவுமாம்; பூச்சூட வாராய் என்றழைக்கவுமாம்; திருவந்திக் காப்பிடவழைக்கவுமாம்; தமக்குப் புருஷகாரமானாரை முன்னிட்டு வரப்பண்ணவுமாம் ; ஏதேனுமாக, அவர்க்கு ஸாத்யமான வொருவகையாலே வருவித்தாராகில் அவ்வழியாக அப்பெருமானை ஸேவிக்கப் பெறுவோம் ; நம்முடைய சிறுமை காரணமாக நாம் இழக்கவேண்டியதில்லை ; நமக்கு ஆசிரியரான பெரியாழ்வாருடைய வலிமையினால் நாம் பெற்றே தீருவோம்—என்பதாம்.

அன்றியும் (11-10) "செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை **விட்டுசித்தர் கேட்டிருப்பர்"** என்கிற பாசுரமும் முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. எம்பெருமான் அர்ஜுந வ்யாஜத்தாலே திருத்தேர்த் தட்டிலே நின்றருளிச் செய்த யதார்த்தமான * **மாமேகம் சரணம் வ்ரஜ** * என்கிற சரம ச்லோகவார்த்தையை எங்கள் பெரியாழ்வார் கேட்டு தந்நிஷ்டரா யிருப்பர் - என்பது இதன் பொருள்.

ஆக இப்பாசுரங்களைப் பெரியாழ்வார் தாமே எழுதிவைத்தாரென்னில், இது சிறிதும் பொருந்தமாட்டாதன்றோ. இப்பாசுரங்களை நோக்கின பின்பு கோதை அல்லது ஆண்டாளென்கிற வ்யக்தி தனிப்பட இல்லை யென்கிறவார்த்தை தோன்ற நியாயமில்லை.

ஆங்கில வியாஸத்தின் முடிவில் "இத்தகைய அபிப்பிராயம் தற்காலம் நாஸ்திக வாதம்போல் தோன்றலாம் ; [நாஸ்திக வாதமன்று.] பெரியாழ்வார் ஆண்டாள் என்று இரண்டு வ்யக்திகளாகக் கொள்வதைவிட ஒரே வ்யக்தியிடத்தில் இந்த இரண்டு விசேஷங்களையும் கொள்வது குறைவா ?" என்று எழுதப்பட்டிருக்கின்றது. இது சிறிதும் அர்த்தமில்லாத வார்த்தையே. இரண்டு வ்யக்திகளென்று ஐயமின்றி வ்யக்தமாகத் தெரிந்

திருக்க, ஒரே வ்யக்தியாகக் கொள்வது பிசகன்றோ. எதைக்கொண்டு ஒரே வ்யக்தியாகக் கூறுவது? கூறுவதற்கு அற்பமான ஆதாரமாவது இருந்தால் கூறலாம். யுக்தியும் பிரமாணமும் சிறிது மில்லையே.

ஆழ்வார்களுள் பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசையார் திருப்பாணனூர் ஆகிய இவ்வைவரது பாடல்களில் இன்னார்பாடிய தென்கிற குறிப்பேயில்லாமலிருக்கிறது. நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களுள் திருவாசிரியத்திலும் பெரிய திருவந்தாதியிலும் ஆழ்வார் பெயர் குறிப்பிடப்பெருமலிருக்கிறது. திருமங்கையாழ்வார் பாடிய ஆறு பிரபந்தங்களுள் திருவெழு கூற்றிருக்கையிலும் இரண்டு திருமடல்களிலும் ஆழ்வார் பெயர் குறிப்பிடப்பெருமலிருக்கிறது. இவற்றைக்கொண்டு நவீனர்கள் 'அந்தப் பிரபந்தம் அவர் பணித்ததன்று; இந்தப் பிரபந்தம் இவர் பணித்ததன்று.' என்று எதையாவது சொல்லியு மெழுதியும் போந்தால் 'பிராமாணிகர்களான பெரியார் ஏற்றுக்கொள்ளார்' என்கிற ஒரு வார்த்தையோடு முடிக்க வேண்டியிருக்கும். ப்ரக்ருத விவாத விஷயமோ, அப்படிப்பட்டதன்று. ஆண்டாளென்பாள் தனி வ்யக்தியே யென்பதற்கு நாம் கீழே காட்டியவை தவிர இன்னமும் பல காட்டுகிறோம்.

ஆண்டாளுடைய அவதார ஸ்தலமான ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு நாச்சியார் திருமாளிகை யென்றே பெயர்வழங்கி வருகின்றது. சூடிக்கொடுத்த நாச்சியாரென்று அவளுக்குத் திருநாம மாவதற்கு ஒரு ஐதிஹ்யம் ப்ரஸித்தமானது. அதனை வேதாந்த தேசிகரும் தாமருளிய கோதாஸ்துதியில் பலகாலெடுத்துக் கூறியுள்ளார். பிள்ளைப்பெருமாளையங்காரும் தமது பிரபந்தங்களிற் பேசியுள்ளார். திவ்யஸூரி சரிதம் குருபரம்பரா ப்ரபாவம் முதலான பல க்ரந்தங்களிலுமுள்ளது. அவ்வைதிஹ்யத்தின்படி நாளைக்கும் அத்தலத்தில் நாடோறும் காலையில் ஆண்டாள் சூடிக்களைந்த மாலையை மேளதாள மரியாதைகளுடன் வடபெருங் கோயிலுடையா னென்னும் பெருமாளுடைய ஸன்னிதிக்குக் கொண்டுபோய் ஸமர்ப்பிப்பது முதற் காரியமாக நடைபெற்று வருகின்றது.

ஆண்டாள் தனது திருமொழியில் "மாலிருஞ்சோலை நம்பிக்கு நான் நூறுதடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவிவைத்தேன், நூறுதடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்" என்று கூறியிருந்ததை அப்படியே உண்மையான அனுட்டானமாக நடத்திவைத்து உடனே ஆண்டாளையும் ஸேவிக்கவெழுந்தருளின ஸ்ரீ ராமாநுஜரை ஆண்டாள் அர்ச்சாவதார ஸமாதியையுங் கடந்து எதிர்கொண்டுவந்து எம் அண்ணரே!, என்று தழுவிக்கொள்ள அன்று முதலாகப் "பெரும்பூதூர் மாமுவக்குப் பின்னானாள் வாழியே" என்று உலக மெல்லாம் வாழ்த்த நேர்ந்திருக்கின்றது. "கோதற்ற ஞானத் திருப்பாவைபாடிய பாவை தங்கை" என்றார் ஆன்றோரும்.

இப்படி இன்னமும் பல ஹேதுக்களுண்டு. ஆனால் இவையெல்லாம் ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஒரு ஸங்கேதமான ஐதிஹ்ய வாதங்கள் என்று பிறர் இலேசாகச் சொல்லிவிடவுங் கூடும். அப்படிச் சொல்லுமவர்களைத் திருத்த வேணுமென்கிற எண்ணம் நமக்குச் சிறிது மில்லை. இவ்விஷயங்களில் நம்பிக்கை யுள்ளவர்களுக்குத் தோன்றும் கலக்கங்களைப் பரிஹரிக்கவே நாம் இஃது எழுதினது. ஸ்ரீ ராமாயணத்தைப் பார்ப்பவர்கள் சிலர் 'ராமனும் அவதரித்ததில்லை, ஸீதையும் அவதரித்ததில்லை; ஸுக்ரீவாதிகளுமில்லை, ராவணாதிகளு

மில்லை; நல்ல சில நீதிகளை யுணர்த்துவதற்காகவே ராமாயணம் கற்பனை செய்யப்பட்டது' என்று கூறுமவர்களும் எழுதிவைத்திருப்பவர்களும் உளரன்றோ? அன்னவர்களைப் பற்றி நாம் என்ன செய்ய நினைப்போம்? ஒன்றுமில்லை. ''கருவிலே திருவிலாதீர்! காலத்தைக் கழிக்கின்றீரே'' என்கிற திருமாலைப் பாசுரத்தையே அநுஸந்தானம் செய்துநிற்போம்.

ப்ரக்ருத விஷயத்தில் ஐதிஹ்யங்களி லொன்றையும் இவர்கள் நம்ப வேண்டா. நாச்சியார் திருமொழியிலுள்ள பாசுரங்கள் ஆண்டாளென்கிற வ்யக்தியை அவசியம் ஸ்தாபித்துத்தரும். ''நானும் பிறந்தமை பொய்யன்றே'' என்று அவள் கூறியிருந்தும் அவள் பிறந்தது பொய்யேயென்று கூறுவதுதான் ஆச்சரியம். * இதனில் மிக்கோரயர்வுண்டே?

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

## ஸ்ரீ மதுபய வே. திருமலை விஞ்சிமூர் (குன்றபாக்கம்) கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் சதாபிஷேக மஹோத்ஸவம்.

(மலையடி) குன்றபாக்கம் என்று ப்ரஸித்தமான அக்ரஹாரம் ப்ரக்க்யாதர்களான வித்வான்கள் திருவவதரித்ததும் வாழ்ந்ததுமான இடம். அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவம்சஸ்தர்களும் திருமலையனந்தாழ்வான் திருவம்சஸ்தர்களுமே இவ்வக்ரஹாரத்தில் குடிவாழ்பவர்கள். இங்கே தேவியாருடன் ஸேவைஸாதிக்கின்ற கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி, ப்ரஸித்த வித்வானாக எழுந்தருளியிருந்த (விஞ்சிமூர்) ஸ்ரீரங்காசாரியஸ்வாமியின் மூத்த திருக்குமாரர். ஜ்ஞானனுஷ்டான ஸம்பன்னர் என்பதுதவிர உத்தமசீலர். நேற்று ஆனிமீ சதபிஷங் நக்ஷத்ரத்தில் (4-7-69) வெள்ளிக்கிழமையன்று இந்த ஸ்வாமிக்கு ஸ்வக்ராமத்தில் சதாபிஷேக மஹோத்ஸவம் உபயவேத பாராயணங்களுடன் சாஸ்த்ரோக்தமான முறையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. ஸ்வாமியின் ஸ்வீகார குமார தம்பதிகளும் பின்னால் காட்சி தருகின்றார்கள். * நல்லபத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே.* ...*


உ. வே திருமலை விஞ்சிமூர் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி.

ஸ்ரீமதுபய வே. V. N. Venkatavaradacharyaswamiயின் சதாபிஷேக வைதிக கோஷ்டி





ஸ்ரீமதுபய வே. (சென்னை, அட்வகேட்) V. N வெங்கடவரதாசார்ய ஸ்வாமியின்

# சதாபிஷேக மஹோத்ஸவம்.

எழும்பூர் வேத விலாஸ் பவனத்தை யலங்கரித்தெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபய வே. V. N. வேங்கடவரதாசார்ய ஸ்வாமிக்கு 3–7–'69 அவிட்ட நக்ஷத்திரத்தில் அவருடைய திருமாளிகையில் சதாபிஷேக மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடைபெற்றது. உபய வேத பாராயணங்கள் நடந்தேறி வேதோக்த ப்ரக்ரியையில் ஆயுஷ்யஹோமமும் நடைபெற்று நூற்றுக்கணக்கான மஹநீயர்களும் லௌகிகப்ரபுக்களும் உற்றுருறவினரும் வந்திருந்து ஸத்கார கோஷ்டி நடந்த அதிசயம் ஸ்வாமியினுடைய பெருமைக்குப் பொருத்தமாக இருந்தது. அந்த ஸந்தர்ப்பவிசேஷத்தில் அடியேன் விடைகொண்டிருந்து ஸத்தைபெற்றேனென்பதை மிக மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அடியேன் ஸ்வாமிக்கு ஒரு நவரத்னமாலை ஸமர்ப்பிக்கக் கருதி அந்த மஹா கோஷ்டியில் ஒன்பது சுலோகங்களை விஜ்ஞாபித்துப் பொருள் விவரணமும் செய்தேன்.

அந்த ச்லோகங்கள் கருத்துச் சுருக்கத்துடன் கீழ்வருமாறு :—

वत्सान्ववायकलशोदधिपूर्णचन्द्रः श्रीचक्रवर्तिकुलसागरकौस्तुभाभः ।
श्रीवेङ्कटो वरदराट् पटुवावदूकः देवाधिराजकृपया सुचिरं समिन्धाम् ॥ १ ॥

ஸ்ரீவத்ஸகுலதிலகராய் சக்ரவர்த்தி வம்சககடலுக்குக் கௌஸ்துபமணி போன்றவரான நம் வேங்கடவரதாசார்ய ஸ்வாமி தேவப்பெருமாள் திருவருளால் மஹாவாக்மியாய் நீடூழிகாலம் விளங்கவேணும். ... ... ... ... .... (1)

दिव्यदेशकुशलप्रपूरणेष्वद्वितीयचतुरत्वशालिनम् ।
वेङ्कटार्यवरदं गुरूत्तमं रङ्गनाथ इह नित्यमीक्षताम् ॥ २ ॥

திவ்யதேசங்களுக்கு நேரும் இடர்களைக் களைந்து சேமம் சாற்றுவதில் நிகரற்ற நிபுணரான நம் ஸ்வாமியை ஸ்ரீரங்கநாதன் நித்யமும் கடாக்ஷித்தருளவேணும். ... ... (2)

पद्मावतीसहचरः फणिशैलनाथः श्रीवेङ्कटेशभगवान् श्रितपारिजातः ।
श्रीवेङ्कटेशवरदार्यगुरोरमुष्य श्रेयांसि साधु कृपया विदधात्वजस्रम् ॥ ३ ॥

அலர்மேல்மங்கையுறைமார்பனாய் சேஷசைலேச்வரனாய் பக்தர்களுக்கு ஸகலபுருஷார்த்த ப்ரதனான திருவேங்கடமுடையான் நம் ஸ்வாமிக்கு ஸகலச்ரேயஸ்ஸுக்களையும் எஞ்ஞான்றும் அருள்புரிவேணும். ... ... ... ... ... (3)

प्रथितश्वशुरार्जितं यशः स्वयमासाद्य ततोऽपि चाधिकम् ।
सकलैरपि सद्गुणैर्लसन् गुरुराडेष चिरं विजृम्भताम् ॥ ४ ॥

நம் ஸ்வாமியின் மாமனார் ஸ்ரீ உ. வே. T. ரங்காசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தராயெழுந்தருளியிருந்த மஹா யசஸ்வி; அவரினும் விஞ்சிய புகழோடுகூடி ஸகல ஸத்குணங்களோடும் கூடி விளங்குகின்ற நம் ஸ்வாமி நீண்டகாலம் வீறுபெற்று விளங்கவேணும். ... (4)

अशीत्यब्दपूर्तिर्यथा बोभवीति प्रसिद्धप्रभावस्य सूरेरमुष्य ।
तथैव प्रभूयाच्छताब्दप्रपूर्तिः दिगन्तेषु जेजेतु कीर्तिश्च भद्रा ॥ ५ ॥

நம் ஸ்வாமிக்கு இப்போது எண்பது திருநக்ஷத்ரபூர்த்தி மஹோத்ஸவம் நடந்தேறுவது போலவே நாளடைவில் நூற்றாண்டுவிழாவும் நடைபெறவேணும்; ஸ்வாமியின் நற்புகழ் திசைதொறும் வெற்றியுடன் விளங்கவேணும். ... ... ... (5)

शठारिर्मुनीन्द्रो यतीन्द्रः कृपालुस्तथा सौम्यजामातृयोगीन्द्रमुख्याः ।
सदाचार्यवर्या गुणाब्धेरमुष्य प्रशस्तिं प्रकृष्टां समृद्धिं दिशन्तु ॥ ६ ॥

குணக்கடலான நம் ஸ்வாமிக்கு ஆழ்வார் எம்பெருமானார் மணவாளமாமுனிகள் முதலான ஆசார்யவர்யர்கள் சிறந்த புகழையும் செழித்த செல்வத்தையும் தந்தருளவேணும். ... (6)

पश्येम जीवेम भवाम मोदामेत्यादिवेदोक्तिततीरजस्रम् ।
उच्चारयद्भिर्यदवाप्यते तत् श्रेयस्समस्तं भवतस्समृद्ध्यात् ॥ ७ ॥

ஸ்வாமிந் !, * பச்சேயம சரதச் சதம்; ஜீவேம சரதச்சதம். நந்தாம சரதச் சதம், மோதாம சரதச் சதம் * என்கிற வைதிக மந்த்ரங்களில் சொல்லப்படுகிற நன்மைகளெல்லாம் தேவரீருக்கு நிச்சலும் செழித்தோங்கவேணும். ... ... ... (7)

भद्रं कर्णेभिरित्यादिश्रौतवाक्यैरुदीरिताम् । भद्रसन्ततिमच्छिद्रामश्नुवीत महानसौ ॥ ८ ॥

தைத்திரீயாரண்யகத்தில் * பத்ரம் கர்ணேபிச் ச்ருணுயாம தேவா:, பத்ரம் பச்யேமாக்ஷபிர் யஜத்ரா: * இத்யாதியாக வோதப்படுகின்ற வாக்கியங்களில் தெரிவிக்கப்படும் நன்மைகளெல்லாம் நம் ஸ்வாமிக்குக் குறையற விளங்கவேணும். ... ... (8)

कलत्रपुत्रपौत्रवर्गसम्पदां समृद्धिभाक् गुरूत्तमो गुणाम्बुधिं विशुद्धकीर्तिमूर्तिमान् ।
स एष वावदूकसार्वभौम एवमेव भोः ! चकास्तु मादृशे जने दृशं दिशन् मुदा सदा ॥ ९ ॥

திருவாய்மொழியில் * நல்லபதத்தால் மனைவாழ்வர் கொண்டபெண்டிர் மக்களே * என்று ஆழ்வார் மங்களாசாஸனம் செய்தருளினபடியே குடும்பச்செல்வம் குறையற்று வாழும் நம் ஸ்வாமி இவ்வண்ணமாகவே நம்போன்ற அன்பர்களைக் கடாக்ஷித்துக்கொண்டு எப்போதும் ஸந்தோஷமாக விளங்கவேணும் என்று அடியேனுடைய புன்மொழியைத் தலைக்கட்டினேன்.

**இந்த ச்லோகத்தினால்**
**நம் ஸ்வாமிக்கு வாவதூக ஸார்வபௌமரென்று**
**விருது சாற்றினேன்.**

**काञ्चीवादिभयङ्करवंशीयाण्णङ्गरार्यदासोऽयम् ।**
**नवरत्नहारमेनं समर्प्य चरितार्थवागभूदधुना ॥**

காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய தாஸன் வைதிகர்கள் நிறைந்த இந்த கோஷ்டியில் இந்த நவரத்னமாலையை நம் ஸ்வாமிக்குச் சூட்டி வாக்குபடைத்த ப்ரயோஜனம் பெற்றாயிற்று. ... ... ... ... ... *

சுபமஸ்து.

# உகந்தருளின நிலங்கள்சிலவற்றின் விமர்சம்.

ஆழ்வார்கள் திருவாக்கில் பாடல்பெற்ற திவ்யதேசங்களை உகந்தருளின நிலங்களென்பர் பெரியோர். நூற்றெட்டுத் திருப்பதிகளென்பவற்றில் திருநாடு நீங்கலாக நூற்றேழுதிருப்பதிகளை இந்நிலவுலகில் ஸேவித்து வருகிறோம். இவற்றில் சில திவ்யஸ்தலங்களைப்பற்றி விசாரம் நெடுநாளாகவே தொடர்ந்து வருவதுண்டு. திருவித்துவக்கோடு, திருவஞ்சிக்களம் ஆகிய இவ்விரண்டு ஸ்தலங்களைப்பற்றிச் சிலர் [இக்காலத்தவர்கள்] தங்கட்குத் தோன்றியபடியே முடிவுகட்டியுள்ளார்கள். அவர்கள் * கொங்குங் குடந்தையுங் கோட்டியூரும் பேரும்* என்ற பெரியாழ்வார் திருமொழிப்பாசுரத்தில் பேரும் என்றது கொங்கு நாட்டிலுள்ள பேரூரையே யென்றும் எழுதிவைத்திருக்கிறார்கள். அவர்களைப் பற்றி நமக்கு விசாரமில்லை.

நான்முகன் திருவந்தாதியில் * ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்* என்றது கபிஸ்தலத்தில் சயனத்திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கின்ற பெருமானை யென்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தினால் நிஸ்ஸந்தேஹமாக விளங்கா நிற்கவும் ஸ்தலத்தின்பெயர் மூலத்தில் பொறிக்கப்படாமையால் இப்பாசுரம் கபிஸ்தலவிஷயமன்று என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள் சிலர். பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திக்குக் கட்டுப்படாமல் பேசுகின்றவர்களைப்பற்றி நமக்கு விசாரமில்லை.

வடநாட்டுந் திருப்பதிகளில் நைமிசாரணியத்திற்கும் திருமலைக்குமிடையில் திருமங்கையாழ்வார் பாடின சிங்கவேழ்குன்றம் கடப்பா ஜில்லாவிலுள்ள ஸ்ரீமத ஹோபிலக்ஷேத்ரமென்கிறோம். வியாக்கியானத்தில் அஹோபிலமென்கிற திரு நாமத்தின் ஸ்பர்சமேயில்லாமையாலும், ஆந்திரமண்டலத்திலுள்ள ஸுப்ரஸித்த வைபவசாலியான ஸிம்ஹாசல க்ஷேத்திரமே சிங்கவேள் குன்றமென்றும், நைமி சாரண்யப்ராந்தத்திலுள்ள ஒரு பர்வதவிசேஷமே இதுவென்றும் சில விமர்சகர் கள் சொல்லக் கேட்டிருந்தேன். ஆனால் இதைப்பற்றி விவாதமிருப்பதாகத் தெரியவரவில்லை யாதலால் இதைவிட்டிடுகிறேன். * கவ்வுநாயுங் கழுகும் உச்சிப் போதொடு கால் சுழன்று தெய்வமல்லாற் செல்லவொண்ணாச் சிங்கவேழ் குன்றமே* என்கிற ஆழ்வார் பாசுரத்தை ஊன்றி நோக்குங்கால் ஆழ்வாராலும் அணுகவொண்ணாதபடி மிகவும் பயங்கரமாயிருந்த ஓரிடம்—சிங்கங்களும் யாளி களுமே திரண்டுருண்டு திரியுமிடம் சிங்கவேள்குன்றம் என்னலாயிருந்தது. அங்கு ஆழ்வார் நேராக எழுந்தருளி மங்களாசாஸனம் செய்தருளி யிருப்பரா? என்பது ஸந்தேஹாஸ்பதமே. பாசுரம் இந்தஸந்தேஹத்தை விளைவிக்கின்றது. *மஹாஜநோ யேந கதஸ் ஸ பந்தா: * என்னுங் கட்டளையிலே இப்போது நாம் ஸேவித்துவருமதாய் அஹோபில மென்பதான க்ஷேத்ரமே சிங்கவேள்குன்ற மாயிருக்கலாம். இதுவன்று, வேறு என்பதற்குப் புஷ்கலமான ஆதாரம் காட்டுவாரில்லை.

கண்ட மென்னுங்கடிநகர், பிரிதி என்கிற இரண்டு திருப்பதிகளைப்பற்றி ஈண்டு முக்கியமாக விஜ்ஞாபிக்கிறேன். முதலில் கண்டங்கடிநகர். இது பெரியாழ்வா ரொருவரே பாடியது. இவ்வாழ்வார் திவ்யதேசங்களுக்குப் பதிகம் பாடத்தொடங்கியது நாலாம் பத்தில். திருமாலிருஞ்சோலைக்கு இரண்டு பதிகங் களும் திருக்கோட்டியூர்க்கு ஒருபதிகமும் பாடி, மேலே திருவரங்கம் பெரியகோயி லுக்கு மூன்றுபதிகங்கள் பாடுவாராய் அதற்கு முன்னே ஒருபதிகம் கண்ட மென்னுங் கடிநகரே யென்றுபாடியுள்ளார். எட்டாவது பிராயத்தில் திருத்தகப்பனை

ரிடம் மூலம் சந்தை சொல்லிக்கொள்ளும்போதே இப்பதிகத்தின் சொற்சுவையில் அடியேனது மனம் உருகிக்கொண்டிருந்தது. இப்போதும் அருளிச்செயல் ஸேவிக்குங்காலங்களில் இத்திருமொழி ஸேவிக்கும்போது விலக்ஷணவிகார மடைந்தே தீருவேன். பெரியாழ்வார் திருவாக்கில் இப்பாசுரங்கள் வெளிவந்த அழகு என்னே! என்னே!! என்னுமத்தனை. வதரியாத்திரையில் ஒருவிசை இத்தலத்தில் அடியேன் பெற்றபேறு ஸ்ரீ ராமாநுஜனில் (225ல்) விளக்கப்பட்டுள்ளது காணவேணும். அதுநிற்க – இத்தலம் எங்குள்ள தென்பது நெடுநாள் விசாரத்திலிருந்தது. ஸ்ரீ பதரிகாச்ரம மார்க்கத்தில் தேவப்ரயாக மென வழங்கப் படும் ஸ்தலமே கண்டமென்னுங்கடிநகர் என்று பெரியார் சொல்லக் கேட்டிருந்தேன். முதன்முதலாக முப்பது வருஷங்களுக்கு முன்பு வதரியாத்திரை விடை கொண்டபோது இத்தலத்தை ஸேவிக்க நேர்ந்தது. (லேட்) நரஹரிசாஸ்திரி முதலான தீர்த்த புரோஹிதர்களின் ஆதரவில் அங்கு அடியேன் தங்கியிருந்தபடியால் அவர்கள் காதா என்று அந்நாட்டினர் வழங்கும் ஒரு பெரிய புத்தகத்தைக் கொணர்ந்து இதில் கையெழுத்திடவேணு மென்றார்கள். அதில் பல ஏடுகளைப் புரட்டிப்பார்த்ததில், யாத்திரையாக வெழுந்தருளின வானமாமலை ஜீயர்ஸ்வாமிகள் பலர், அஹோபில ஜீயர்ஸ்வாமிகள் பலர், கோவர்த்தனம் ஸ்வாமி பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி போல்வாரான பீடாதிபதி ஸ்வாமிகள் பலர் ... ... இன்னும் பல பல ஆசார்யபுருஷர்களும் வித்வான்களும் "இதுதான் கண்ட மென்னுங்கடிநகர்" என்று திருவெழுத்து சாத்தியிருந்தார்கள் அவற்றின் கீழ் அடியேனையும் அபிப்ராய மெழுதச் சொன்னார்கள். எழுதினேன். என்ன எழுதினேனென்றால், எழுதின சப்தராசிகள் நினைவில்லாவிடினும் அன்று முதலாகவே நெஞ்சிலூறி யிருக்குமதைத் தெரிவிக்கிறேன்.

திருமங்கையாழ்வார் காஞ்சீபுரத்திற்கெழுந்தருளி அஷ்டபுஜப் பெருமாளை ஸேவித்தபோது "செந்தமிழ்பாடுவார் தாம் வணங்கும் தேவரிவர்கொல்!" என்றார். செந்தமிழ்பாடுவாரென்று முதலாழ்வார்களுக்கு ப்ரஸித்தமான திருநாமம். 'முதலாழ்வார்கள் பாடின பெருமாளாயிருக்க வேணுமிவர்!' என்று ஆழ்வார் திருவுள்ளத்தில் தோன்றிற்று. * கண்டவாற்றால் தனதேயுலகென நின்றான் தன்னை* என்று நம்மாழ்வாரருளியதோ டொக்குமிது. *தொட்டபடை யெட்டும் தோலாதவென்றியான், அட்டபுயகரத்தான்* என்று செந்தமிழ்பாடுவார் பாடின பெருமாளிறே அட்டபுயகரத்தான். இதேபோல, * பொங்கொலிகங்கைக் கரைமலிகண்டத்துறை புருடோத்தமனை அடியேன் ஸேவித்தபோதே 'இப்பெருமாள் ஆழ்வார்பாடல் பெற்றிருந்தாலொழிய இப்படி ஸேவைஸாதித்தருள இயலாது' என்றறுதியிட்டேன். இதையே அந்த காதாவில் வடமொழியிலும் ஹிந்தியிலும் வரைந்தேன். இத்தலப்பதிகத்தில் * நலந்திகழ் சடையான் முடிக் கொன்றைமலரும் நாரணன் பாதத்துழாயும், கலந்திழிபுனலால் புகர்படுகங்கைக் கண்டமென்னுங் கடிநகரே* என்றபாசுரத்தின்படி அலகநந்தாவும் பாகீரதியும் இங்கே ஸந்திபெற்றுப் பெருகுமழகைக் காணும்போது......மேலே என்ன சொல்லுவது? அற்புதமற்புதம்!!

இனி. திருப்பிரிதியைப்பற்றிக் கேண்மின். இதுவும் ஸ்ரீபதரிகாச்ரமமார்க்கத்திலுள்ள வொருதலமென்றும், ஜோஸீமட என்னுமிடத்திற்கே பிரிதியென்று பெயரென்றும் பலர் நூற்றெட்டுத் திருப்பதிக் குறிப்பில் எழுதிவைத்திருந்தபடியால் அதில் ஸ்வரஸமாகவுண்டான ப்ரத்யயத்தாலே ஒருவிதமாக நெஞ்சில் படிந்துவிட்டது ஆனால் இத்தலத்தை நேரில் ஸேவித்தபோது நெஞ்சில் தெளிவு விளையவில்லை. திருமங்கையாழ்வாரொருவரே பாடின தலமிது. 'திருப்பிரிதியானது இமயத்திலுள்ளது' என்னுமிவ்வளவே இத்தலப்பதிகத்தினால் அறியலாகின்றது.

வதரிவணங்கும் பதிகத்திற்கும், வதரியாச்சிராமத்துள்ளானைப்போற்றும் பதிகத்திற்கும் முன்னடியே திருப்பிரிதிப்பதிகம் திருவவதரித்துள்ளது. இதில் கங்கையின் ப்ரஸ்தாவகந்தமும் காணவில்லை. வதரியாச்சிராமத்துள்ளான் பதிகத்திலோ வென்னில், பாட்டுத்தோறும் கங்கையின் கரைமேலென்றுள்ளது. ஜோஸீமட்டே பிரிதியாயிருந்தால், அங்கும் கங்கைபெருகுவதால் கங்கையின் ப்ரஸ்தாவத்தை விட்டிருக்கவே முடியாது. மற்றும் பலகாரணங்களினலும் இது பிரிதியாயிருக்கத் தகுதியில்லையேயென்று நெடுநாளாக அடியேன் மனம் குழம்பியிருந்தது. அதை வெளியிடுவதற்கு இப்போது நல்லதருணம் வாய்த்தது. நமது பரமாப்தராய், ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ராதிபரான புத்தூர் (அட்வொகேட்) ஸ்ரீமதுபயவே. S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்ஸ்வாமி ஸமீபகாலத்தில் வடநாட்டுத் திருப்பதி யாத்திரையை வெகுவிபவமாக நடத்தி முடித்தபின் யாத்திரைச் செய்திகளை உலகுக்குப் பேருபகாரமாக அறுபத்துநான்கு பக்கங்களெழுதி வெளியிட்டிருக்கும் ஸுதர்சன பத்ரிகையில் (பக்கம் 29ல்) திருப்பிரிதிபற்றிய தொரு ஆராய்ச்சி என்ற மகுடத்தின் கீழ் வரைந்திருக்கும் விஷயங்கள் அடியேனுடைய உள்ளத்தைத் துணிந்து வெளியிடத் தூண்டிவிட்டன. ' திருப்பிரிதி — ஜோஷிமடமல்ல " என்று அந்த ஸ்வாமி துணிந்து எழுதினதை நான் ஆமோதிக்கிறேன். பின்னை பிரிதி எது ? என்று எழும் கேள்விக்குத் தெளிவாக விடைகூற இருவோமுக்கும் சில ஸாமக்ரிகள் வேண்டியிருக்கின்றன. இப்போது இக்கட்டுரை ஸசேஷமாக நிற்க.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. (ஸ்ரீபெரும்பூதூர்)

## எம்பார் ஜீயர் — சடகோபராமாநுஜ ஜீயர் ஸ்வாமி.

எம்பெருமானர் திருவவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் மணவாள மாமுனிகள் ஸன்னிதிக்கருகில் எம்பார் ஜீயர் மடம் என்பது ப்ரஸித்தமானது.



ஏறக்குறைய நூறு வருஷ காலமாக இந்த மடம் விளங்கிவருகின்றது. ஒன்றுன எம்பார் ஜீயர் ஸ்வாமி யொருவரைத்தவிர, அந்த ஸ்வாமியின் ஸ்தானத்தில் அபிஷிக்தர்களான மற்றஸ்வாமிகளெல்லாரையும் அடியேன் ஸேவித்திருக்கிறேன். இப்போது ஐந்தாறு வருஷகாலமாக இவ்வாஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற ஜீயர் ஸ்வாமி திருமலையில் பலவாண்டுகள் பெரிய ஜீயர் பதவியை அலங்கரித் தெழுந்தருளியிருந்த திருக்கண்ணபுரம் ஜீயர் ஸ்வாமியின் பூர்வாச்ரம திருக்குமாரர். ஞானமனுட்டான மிவை நன்றுகவேயுடையரான இந்தஸ்வாமி பட்டத்திற்கு எழுந்தருளின நாள் முதல் மடம் அபிவிருத்தியை யடைந்து வருகிறது. ஸ்வாமியுத்ஸவத்தில் ஆண்டுதோறும் ஸ்ரீ வைஷ்ணவ ததீயாராதனத்தை அமோகமாக நடத்தியருளுகிருர். இந்த ஸம்வத்ஸரத்தில் 7, 8 இரண்டு திருநாட்களில் விசிஷ்டாத்வைத ஸித்தாந்த ப்ரசாரத்தின் பொருட்டு மடத்தில் வித்வத்ஸதஸ்ஸும் நடத்தியருளினர். ஸ்வாமியின் மூலமாக மேன்மேலும் கைங்கர்யாபிவிருத்திகள் நடைபெறுமாக. ... ... ... ...

*

## ப்ராஸங்கிகமிது காணீர்.

ஆழ்வார்கள் தென்னாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனஞ் செய்தருளின முறை வேறு, வடநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாஸனம் செய்தருளின முறை வேறு. அதாவதென்னென்னில், சோழநாடு பாண்டிநாடு நடுநாடு தொண்டை நாடு மலைநாடுகளில் அர்ச்சையாகக் கோயில் கொண்டிருக்கிற எம்பெருமான்களையே பாடினர். வடநாட்டிலோ வென்னில் விபவாவதாரஸ்தல மென்று கொண்டே மங்ளாசாஸனம் நிகழ்ந்திருக்கின்றது. மூதலிப்போமிதனை. அயோத்தியிலும் விருந்தாவனத்திலும் காணும் ஸன்னிதிகள் புராதனமல்லவே, நைமிசாரணியத்தில் காணும் கோவில் அதிநவீனம். இத்தலப்பாசுரங்களில் "நைமிசாரணியத்துளெந்தாய்" என்று பாட்டுத்தோறும் ஸம்போதனம் காண்கையாலே அர்ச்சாரூபியான ஒரு பகவானைக்குறித்துப் பாடின பதிகம்போல் தோன்றும்; அரண்யரூபியாக ஸேவைஸாதிக்கும் பகவானைத்தான் விளித்துரைத்ததென்பது நிஸ்ஸந்தேஹம். த்வாரகையில் அர்ச்சாரூபியான பகவான் ஸேவைஸாதிப்பதும் ஆழ்வார்களின் காலத்திற்குப் பிறகுதான். ஆண்டாள் *ஆய்ப்பாடிக்கே யென்னை யுய்த்திடுமின்* பாண்டி வடத்தென்னையுய்த்திடுமின்* பொய்கைக்கரைக் கென்னை யுய்த்திடுமின் * பத்தவிலோசனத்துய்த்திடுமின் * கோவர்த்தனத்தென்னையுய்த் திடுமின்* என்றது போலவே *கூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதிக் கென்னையுய்த்திடுமின்* என்று மருளிச்செய்தாள்.

திருவாய்மொழியில் ஒன்பதாம்பத்து முதற் பதிகத்தில் பலபாசுரங்களில் *வடமதுரைப்பிறந்தான்* என்றிருக்கவும் ஆசார்ய ஹ்ருதயத்தில் மூன்ரும் பிரகரணத்தில் நம்மாழ்வார் பாடின திவ்யதேசங்களை ஒன்றுவிடாமல் நிர்தேசித்து அவ்வவற்றில் விளங்கும் திருக்குணங்களைப் பேசிவருமடைவில் வடமதுரையைத் தொடாமலே போனது அது அர்ச்சாவதாரமன்று என்கிற திருவுள்ளத்தினலன்றோ. கலியன் திருப்பிரிதியையும் ஸ்ரீபதரிகாச்ரமத்தையும் பாடினதும் அர்ச்சையில் நோக்காகவன்று. வதரியில் இப்போது காணும் ஸன்னிதி திருமங்கையாழ்வார் காலத்திலிருந்ததில்லை யென்பதைப் பண்டே விமர்சித்து முடித்திருக்கிறேன். கண்டமென்னுங்கடிநகரில் மட்டும் பாசுரந்தோறும் புருடோத்தமனென்று கூறியும் நிகமனத்தில் *புருடோத்தமனடிமேல் விட்டுசித்தன் விருப்புற்றுத் தங்கியவன்பால் செய்தமிழ்மாலை* என்று கூறியு மிருக்கையாலே இங்கு அர்ச்சைத் திருமேனிக்கே மங்களாசாஸன மென்பது நிஸ்ஸந்தேஹம். ... *

## புத்தக மதிப்புரை.

தற்காலம் நமது கையில் "ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம்" "ஸ்ரீவேங்கடேச ப்ரபத்தி" "ஸ்ரீவேங்கடேச மங்களாசாஸனம்" என்கிற மூன்று துதி நூல்களும் ஹிந்தியில் பத்யரூபமாக வெகு அற்புதமாய் மொழிபெயர்க்கப்பட்டவை விளங்குகின்றன. கவிரத்னம், வித்யாரத்னம், வித்யாவிசாரதா, வித்யாலங்கார, பாஷணகேஸரீ இத்யாதி அனேக பிருதபூஷிதையான ஸ்ரீமதி. வாலம் அம்மையின் ரசனைகள் இவை—என்ருலே போதுமானது. சிலவாண்டுகளாக பாம்பே மகாநகரத்தில் வாழ்ந்துவந்த இவ்வம்மை தற்காலம் சென்னை மயிலையில் வாழ்வதாக அறிகிரேம். நூற்றுக்கணக்கான கவிதைகள் பலபாஷைகளிலும் இவ்வம்மையால் இயற்றப்பட்டுள்ளன. பிறகு விரிவாக வரைவோம். .... .... .... *

ஸ்ரீமதேராமாநுஜாய நம:
அஸ்மத்குருபரம்பராயை நம:

ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு செய்தருளின

# அஸத்கர்வ நிர்வாபணம்

திருமழிசைப்பிரான் தமது போது போக்கின் பரிசைத் தமது திருவந்தாதியில் *தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது * என்கிற வெண்பாவால் தெரிவித்தருளினது போல, நம் நிகமாந்த மஹாகுருவும் தம்முடைய காலக்ஷேபப்ரகாரத்தை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தின் முடிவில் * நிர்விஷ்டம் யதிஸார்வ பௌமவசஸாம் ஆவ்ருத்திபிர் யௌவனம் * என்று தொடங்கும் சார்தூல விக்ரீடிதத்தினால் தெரிவித்தருளியுள்ளார். அதில் * அஸதாம் கர்வோபி நிர்வாபித: * என்று அஸத்துக்களின் செருக்கை யடக்கினதும் ஒருபோது போக்காகச் சொல்லிற்று. அந்த அஸத்கர்வ நிர்வாபண ப்ரகாரங்களை ஸ்வாமிதாமே தம்முடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளால் விவரித்த நளும் வகையில் இந்த நிர்வாபண க்ரந்தம் நிபந்திக்கப்படுகிறது. நிகமாந்தகுரு தாமே ஸாதிப்பதாகக்கொள்க.

**ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு மோக்ஷப்ரதத்வம் சொல்லுமவர்களின் செருக்கடக்குதல்.**

1. ஆளவந்தார் அருளிச்செய்த சதுச்ச்லோகியில் மூன்றாவது சுலோகத்தில்*ச்ரேயோ ந ஹ்யரவிந்த லோசநமந:காந்தா ப்ரஸாதாத் ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு ந்ருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித் * என்பது உத்தரார்த்தம். மோக்ஷபர்யந்தமான எல்லாப் பேறுகளும் பிராட்டியின் அநுக்ரஹத்தாலல்லது ஸம்பவிக்கமாட்டாதென்பது இதன் பொருள். இவ்விடத்தில் ஒரு சங்கை யுண்டாகும். (அதாவது) அபார காருண்ய வாத்ஸல்யாதி ஸகல ஸத்குண நிதியான எம்பெருமான் இடர்களைக் களைந்து இன்பங்களை யளிக்கவல்லவனுயிருக்க, அவனுடைய அனுக்ரஹத்தினாலாகாதது ஒன்றுண்டோ? பிராட்டியின் அநுக்ரஹம் எதற்காக ? என்று ; இங்கு இந்த சங்கையை (நிகமாந்தகுருவாகிய) நானே தோன்றுவித்து அந்தச்லோகத்தின் பாஷ்யத்திலும் வேறிடங்களிலும் பரிஹார முணர்த்தியிருக்கிறேன். '' நநு மோக்ஷப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம் '' என்று தொடங்கி சங்கையை உத்க்ஷேபித்து 'மைவம்' என்று தொடங்கி தத்பரிஹாரம் பண்ணியிருப்பதைக் காணவேணும். ப்ரக்ருத ச்லோகபாஷ்யத்தின் முடிவில் நிஷ்கர்ஷம் செய்திருப்பது கேண்மின். '' மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம் '' என்பது முதல் வாக்கியம். இதன் பொருளாவது, மோக்ஷமளிப்பவன் எம்பெருமானே ; பிராட்டியோவென்னில், புருஷகாரபூதையாயிருக்கிறாளென்பது யாவருமிசைந்தது—என்பதாம்.

2. (அந்த சதுச்ச்லோகியில்தானே) இரண்டாவது சுலோகத்தில் மோக்ஷ ப்ரதாந ப்ரஸ்தாவமே யில்லாதிருக்கவும் ப்ராஸங்கிகமாகக் கொண்ட விசாரத்தில் நானே காரிகை யொன்று இட்டிருக்கிறேன். (அதாவது) * அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே. * என்பதாம். இதன் பொருளாவது, கர்மாநு ரூபமாகப் பேறு பெறுவிக்குமவன் எம்பெருமானே ; பிராட்டி தான் இரண்டு க்ருத்யங்களை வைத்துக்கொள்ளுகிறாள் ; அவன் நிக்ரஹிக்கும்போது அதைத் தடுப்பதும், அநுக்ரஹிக்கும்போது அதை மேன்மேலும் வளரச்செய்வது மென்கை. அதற்கு மேல் '' அத்ர வரதகுருபதேச அநுஸாரிபி: வ்யாஸார்யைச் ச உக்தம்—ப்ரதாபோஷ்மல

பித்ருத்வ துராஸத பகவத் ஸமாச்ரயண ஸித்தயே புருஷகாராநுப்ரவிஷ்ட வாத்ஸல்ய நிர்ப்பர லக்ஷ்மீ ஸமாச்ரயணம் ஸ்ரீமச்சப்தவிவரணமுகேந அபிதீயதே இதி.'' என்றெழுதியிருக்கிறேன். மேலெடுத்தவாக்யத்தில் வ்யாஸார்ய ரென்னப்பட்டவர் ச்ருதப்ரகாசிகாபட்டர் ; அவர்க்கு வரதகுரூபதேசாநுஸாரித்வ விசேஷணமிட்டதனுல் ஸத்ஸம்ப்ரதாயசுத்தி காட்டப்பட்டதா யிற்று. எனக்கு ப்ராசார்யரான நடாதூரம்மாள் உபதேசித்த யதார்த்தமான அர்த்தத்தையே அவருடைய திருவடியான ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்தாரென்று தெரிவித்துக் கொண்டேன். ச்ருதப்ரகாசிகாபட்டர் பொறித்துவைத்ததென்னவென்றுல் ; எம்பெருமான் வாத்ஸல்யாதி குணநிதியாயிருக்கச் செய்தேயும் சீற்றங்கொள்ளும்படியான பிதாவாயுமிருக் கையாலே அணுகவொண்ணுதபடியாகவுமிருக்க நேருமாகையாலே அணுகுவிப்பதற்குப் பாங்கான தண்ணளிவாய்ந்த பிராட்டியைப் புருஷகாரமாக வரிப்பது ஸ்ரீமச்சப்தவிவரண முகத்தாலே சொல்லப்படுகிறது என்பதாம். * லக்ஷ்மீ: : புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:, மமாபி ச மதம் ஹ்யேதத் நாந்யதா லக்ஷணம் பவேத் * என்கிற ப்ரமாணத்தை யார்தாம் மீறமுடியும். நீரிலே நெருப்புக்கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபரா தத்தாலே சீற்றம் பிறந்தேதீரும். அப்போது நிர்ப்பயமாக அணுகுவதற்குப் பிராட்டியின் புரஸ்கரணம் அவர்ஜநீயமானதே. ஆனது பற்றியே ஆளவந்தார் * ச்ரேயோ நஹ்யரவிந் தேத்யாதியை யருளிச்செய்தார்—என்று நிர்வாபணீயகர்வர்களுக்கு விளக்கிக் காட்டி யிருக்கிறேன். இதை இப்போதுதான் புதிதாக விவரிக்கவேணுமோ ?

3. மேலேகுறித்த ச்ருதப்ரகாசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும் முன்னே '' உக்தஞ்ச ஸ்ரீவிஷ்ணுசித்தை: கத்யவ்யாக்க்யாநாரம்பே ; மாத்ருத்வைகரூபாம் ச்ரியம் ப்ரபத்யதே ; மாதா ஹிதாதபி புத்ரஸ்ய ப்ரியமேவ பச்யதி. பிதா து உபயம் பச்யதி. அதோ தண்டதரத்வ ஹீநதைவ அவலம்பநம் அஸ்யாம் தசாயாம் ஆஸீத் இதி.'' என்று எங்களாழ்வான் ஸ்ரீஸூ க்தியையு மெடுத்துக்காட்டியிருக்கிறேன். வாத்ஸல்யாதிகளைப்போலே தண்டதரத்வமு முடைய எம்பெருமானை யணுகுவதற்கு * நித்யமஜ்ஞாத நிக்ரஹையான பிராட்டியைப் புரஸ் கரிக்கவேண்டியது அவசியமாகிறது—என்பதையே என்னைப்போல் ஒவ்வோராசார்யரும் அருளிச்செய்துவைத்துள்ளார். எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்திக்குமுன்னே பட்டருடைய ஸ்ரீகுணரத்நகோச ஸ்ரீஸூக்தியையும் உதாஹரித்திருக்கிறேன். '' ஆஹுச் ச * பிதேவ த்வத்ப்ரேயாந் இத்யாரப்ய * மாதா ததஸி ந: * இதி.'' என்று. இவ்வளவோடும் நின்றி லேன் ; உடனே '' ஏவம் அநப்யுபகமே தாம் புரஸ்க்ருத்ய பகவதபிகமநமபி தத்ரதத்ரோக்தம் துஸ்ஸ்தம் ஸ்யாத் '' என்று மெழுதியிருக்கிறேன். இதன் பொருள்—தண்டதரனுன எம்பெரு மானுடைய சீற்றத்தையாற்றுதற்குப் பிராட்டியைப் புருஷகாரமாகக் கொள்ளவேணுமென்று இசையாதொழியில் ஆங்காங்கு சாஸ்த்ரங்களில் பிராட்டியைப் புரஸ்கரித்து எம்பெருமானை ஆச்ரயிக்க வேணுமென்று கூறியிருப்பது பொருந்தாமற்போகும்—என்கை. இஃதொன்று போதும் என்னுடைய ஸித்தாந்தத்தையுணர.

4. இதே இடத்தில்தான் (கீழே சொன்ன) * அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:. நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே * என்னும் ஸ்வகீய காரிகையை இட்டிருக்கிறேன். இந்த காரிகையானது ப்ரக்ருதவிஷயத்தில் தோன்றும் ஸகலஸந்தேஹங்களையும் வேரறுக்கவல்லது. பிராட்டியின் இத்தகைய இரண்டு க்ருத்யங்களைத் திருவுள்ளம்பற்றியே ஆளவந்தார் * ச்ரேயோ நஹ்யரவிந்த லோசந....... * இத்யாதியை யருளிச் செய்தாரென்று சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் நிகமநம் செய்திருக்கிறேன்,

5. மீண்டும் ஸாரமாகச்சொல்லுகிறேன்—அவ்விடத்து பாஷ்யத்தில் "நநு மோக்ஷ ப்ரதத்வம் பகவத ஏவேதி ஸர்வத்ர ஸ்தாபிதம்" என்று நான் உத்க்ஷேபித்த ஆசங்கையைப் பரிஹரிக்குமிடத்து "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷாதிஷ்டதீதி ஸர்வ ஸம்மதம்" ஏன்றெழுதியிருப்பதுண்டே, இஃதொன்றுபோதாதா அஸத்கர்வநிர்வாபணத்திற்கு; இதற்கு அடுத்த வாக்கியமோ, "பரிபூர்ணுநுபவ ப்ரதாந ஸங்கல்பஸ் து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்ய வா இதி யதாப்ரமாணம் பவது" என்று எழுதியிருக்கிறேன். ப்ரமாணஸா கரபாரங்கதனுன நான் ப்ரமாண பரிசீலநபூர்வகமாகவும் ஆசார்யோபதேசாநுஸாரமாகவும் ஸித்தாந்தப் பொருளை விவரியாதே "யதாப்ரமாணம் பவது" என்றது ஏன்? என்கிற விசாரம் வேண்டா; உள்ள வாக்யத்தை விமர்சிக்க. பலனளிப்பவன் பலப்ரதான ஸங்கல்பம் செய்யவேண்டியவன்; எவன் பலனளிப்பவனே அவன் ஸங்கல்பகர்த்தாவாவன். ப்ரக்ருத மான மோக்ஷப்ரதானத்தில் ஸங்கல்பக்ருத்யாதிகாரியைத் தெரிவிக்கின்ற நான் "ஸங்கல்ப: பகவத: ஸ்வஸ்யைவ வா? பத்ந்யா அபி வா?" என்று விகல்ப சரீரத்தை வைத்திடாதது முக்கியமாகக் குறிக்கொள்ளத்தக்கது. ஶாந்த: அஸதாம் கோலாஹல:.

6. நியாயஸித்தாஞ்ஜனத்தில் * இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே * என்கிற என்னுடைய காரிகையானது ப்ரபத்தியின் உபாயத் வத்தைமட்டும் தவிர்ப்பதன்று; பிராட்டியின் உபாயத்வத்தைத்தான் முந்துற முன்னம் தவிர்ப்பது. பிராட்டிக்கும் உபாயத்வ முண்டென்று எனக்கு எண்ண மிருந்தால் * லக்ஷ்மீ ததீஶோபாயத்வப்ரத்யயாத்மிகா * என்றன்றே வசனவ்யக்தி வெளிவந்திருக்கும், இச் சிறு விஷயத்தையும் க்ரஹிக்கமாட்டிற்றிலரன்றே நிர்வாபணீயகர்வர்:

7. ஸம்ஸ்க்ருத நூல்களில் இங்ஙனே விமர்சித்து விளக்கின நானே சில்லரை ரஹஸ்யங்களில் எழுதிவைத்தவைகளையும் சொல்லுகிறேன்—ரஹஸ்ய ரத்நாவளி யென்றும் அதன் ஹ்ருதயமென்றும் இரண்டு ரஹஸயங்கள் எழுதியிருக்கிறேன். முப்பது வாக்யங்கள் கொண்ட ரஹஸ்ய ரத்நாவளியில் நான்காவது வாக்கியம் —"ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச் வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யா திசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்கொண்டு இஜ்ஜீவர் களுக்குத் தஞ்சமாகிருள். இவளைப் புருஷகாரமாக்கவேண்டுகிறது ஈச்வரன் தண்டதரனு கையாலே" என்று பணித்தேன், இதன் விவரணமான ரஹஸ்ய ரத்நாவலீ ஹ்ருதயத்தில் "இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்" என்றதற்கு—"*பவேயம் சரணம் ஹி வ:* என்றருளிச் செய்தபடியே இவர்களுக்கு ரக்ஷாஹேதுவாகிருளென்றபடி" என்று விவரணம் காட்டியிருக் கிறேன். ரக்ஷகத்வமும் ரக்ஷாஹேதுத்வமும் பர்யாயமன்று; ஈச்வரனை ரக்ஷாஹேதுவென்று யாரும் சொல்லுவதில்லையே. ரக்ஷாஹேதுத்வமே பிராட்டிக்குப்பொருந்துமென்று காட்டினேன்.

8. பிராட்டிதிறத்தில் இங்ஙனம் உபபாதனங்கள் செய்த நானே ரஹஸ்யத்ரயஸா ரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தின் முடிவில்—" இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடாதொழியில் * த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:.........மந்தபுத்தீநாம் துராத்மநாம் குதர்க்க வ்யாலதஷ்டாநாம் விப்ராந்தேந்த்ரிய வாஜி நாம் * என்கிற தசையாம்" என்கிற சிலவாக்கியங்களையும் எழுதியிருக்கிறேன். மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகமாகத் தோற்றின அர்த்தங்கள் எவை? * த்ருடபூர்வச்ருதோ மூர்க்க: *இத்யாதி ஸத்கார யோக்யர்களாகக்கொண்ட க்ருஹீதக்ராஹிகள் பெரியோர்களைப்

பணிந்து கேளாமல் மூர்க்கத்தனமாகச் சொல்லிவரும் அர்த்தங்கள் எவை? என்று கேட்க வேண்டா. அந்தப்ரகரணத்தில் நான் முன்னே நிருபித்த அர்த்தங்கள் எவை யென்று பார்க்கவேண்டும். * த்ருடபூர்வச்ருத ஸத்காரத்திற்கு முன்னேயுள்ள நிருபணங்களிவை— "அலமேஷா பரித்ராது மென்று ஸ்ரீ வால்மீகி பகவான் சரணாகதிஸாரமான ஆதிகாவ்யத்திலே நிபந்தித்தான். * ஸம்ஸாரார்ணவதாரிணீமென்று ஹிரண்யகர்ப்ப காச்யபாதிகளும் சொன்னார்கள். * வாச: பரம் ப்ரார்த்தயிதா ப்ரபத்யேத் நியத: ச்ரியம் * என்று ஸ்ரீ சௌநகபகவான் விதித்தான். * ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபலதாயிநீ* என்று .......ஸ்ரீ பராசரப்ரஹ்மர்ஷி யருளிச்செய்தான். ச்ரிய:பதிதானும் * யாமாலம்ப்ய ஸுகேநேமம் துஸ்தரம் ஹி தரந்தி, நிஸ்தரந்த்யசிரேணைவ வ்யக்தத்யாநபராயணா:* என்று ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையிலே ஸ்ரீபதிருபத்யாநத்திலே யருளிச்செய்தான். ஆளவந்தாரும் *ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்* என்றும் *ச்ரேயோ ந ஹ்யரவிந்த .........ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்று மருளிச்செய்தார். ஸ்ரீ பாஷ்யகாரரும் ஸ்ரீ வைகுண்டகத்யத்திலே *சேஷ சேஷாசநாதி......ஆஜ்ஞாபயந்த்யா * என்று பகவத் கைங்கர்யரூப பரமபுருஷார்த்தம் இவள் நியோகத்தின்படியே நடத்தவேணுமென்றருளிச்செய்தார். கூரத்தாழ்வானும் * ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாத்...... * என்று ஸங்க்ரஹித்த அர்த்தத்தை * தேவி! த்வந்மஹிமாவதி:...என்று தொடங்கி விஸ்தரித்தார். பட்டரும் * ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம்வா....என்று ச்ருதியில் உதார சப்தத்துக்கு வியாக்கியானம் பண்ணினர். ஸ்ரீஸூக்தபாஷ்யத்திலே பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார். இப்படி ச்ருதிஸ்ம்ருதி ஸம்ப்ரதாயம் நிற்கிற நிலைகளைக்கொண்டு ஸ்ரீமச்சப்தத்திற் சொன்ன விசேஷணத்துக்கு விக்ரஹாதிகளுக்குப் போலே வஸ்த்வநுரூபமான உபயோக விசேஷங்களை ஸஹ்ருதயர் அறிந்துகொள்வது." என்றிவையே. இந்த வாக்யராசிகளும் நானெழுதியவையே.

9. மேலெடுத்த ப்ரமாணங்களினிடையிலே * ஜகத் ஸமஸ்தம் யதபாங்க ஸம்ச்ரயம் * என்கிற ஸ்தோத்ரரத்நஸூக்தியையும் * ச்ரேயோ ந ஹ்யரவிந்த......இத்யாதி சதுச்ச்லோகீ ஸூக்தியையும் உதாஹரித்திருக்கிறேன். சதுச்ச்லோகீபாஷ்யபங்க்திகளைக் கீழே விசதீகரித்திருக்கின்றேன் * ஜகத்ஸமஸ்த மித்யாதியின் பொருள் ஸ்தோத்ரபாஷ்யத்தில் வ்யக்தம். மேலெடுத்துக்காட்டிய ப்ரமாணங்களினால் விளங்கும் பெருமை பெரிய பிராட்டியார்க்கு இல்லை யென்பார் ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானத்தில் யாருமில்லையே.

10. சதுச்ச்லோகீபாஷ்யம் ரஹஸ்ய ரத்நாவளி முதலான க்ரந்தங்களில் நானே உபபாதித்த அர்த்தங்களுக்கு இங்கே கண்டனமா? மண்டனமா? என்று ஒரு கேள்வி கேட்கலாம். கண்டனமேயொழிய மண்டனமன்றென்றும் சிலர் அறுதியிடலாம். பிஷ்டபேஷணம்வேண்டா.

11. அந்த ஸித்தோபாயசோதநாதிகாரத்திலேயே "ஸபத்நீகனைக் கொண்டு ஸர்வ ரக்ஷணயஜ்ஞதீக்ஷிதனான ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீமச் சப்தத்திலே சொல்லுகிற பத்நீ ஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு திங்மாத்ரத்தாலே பரிஹாரம் காட்டுகிறோம்: சிலர் த்வயத்தில் பூர்வ கண்டத்தில் ஸ்ரீமச் சப்தம் உபலக்ஷணபரமென்றும், உத்தர கண்டத்தில் ஸ்ரீமச் சப்தம் விசேஷணபரமென்றும் பிரியச் சொன்னார்கள். இவ்விடத்தில் சப்தம் ஏகரூபமாயிருக்க ஸ்வாரஸ்யத்துக்கு பாதகமுமின்றிக்கேயிருக்க...கூடஸ்தஸம்ப்ரதாய விருத்தமாகப் பண்ணுகிற இவ்விபாகம் அநுபபந்நம்." இத்யாதி யெழுதியிருக்கின்றேன். இந்த விசாரம் அகாண்டே அஸ்தானே தோன்றிய தென்று விட்டுத் தொலைக்கவேண்டியதத்தனை. உபலக்ஷ

ணத்வ விசேஷணத்வ விபாக கதை வ்யபதிஷ்டரான ஒரு ஆசார்யருடையவும் நூலில் காண்பதன்று. இத்தகைய விபாகத்தினால் ஒருவர்க்கும் ஒரு ஸமீஹிதமும் ஸித்திப்பதன்று. "த்வயபூர்வ கண்டத்தில் ச்ரிய:பதிக்கு ஆச்ரயணமே யொழிய ஸ்ரீக்கு ஆச்ரயணமில்லை" என்று எந்த ஆசிரியர்க்காவது விவக்ஷையிருந்தாலன்றோ உபலக்ஷணத்வ ப்ரஸ்தாவ முண்டாகும். அஷ்டச்லோகியில் த்வயார்த்த விவரண ச்லோகத்தில்—* ஈசாநாம் ஜகதாம் அதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதாகில குணஸ்ய அங்க்ரீ ஹரேராச்ரயே, இஷ்டோபாயதயா * என்று பூர்வகண்டத்தை விவரித்து, மேல் * ச்ரியா ச ஸஹிதாய ஆத்மேச்வராயார்த்தயே கர்த்தும் தாஸ்யமசேஷம் அப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம:* என்று உத்தரகண்டத்தையும் விவரித்தருளியுள்ள பட்டரை யடியொற்று மாசாரியர் களில் ஒருவரும்—பிராட்டியை ஆச்ரயிப்பது இல்லை யென்றுவது ப்ரஹ்மசாரி நாரா யணனையே ஆச்ரயிப்பதென்றுவது சொல்லுவாரில்லையே; ஆகவே இத்தகையவிடங்களில் மதிவிப்ரமஸம்ப்ரமங்களை மநீஷிகள் மறந்திடுவது நலம்.

12. எம்பெருமானார் சரணாகதிகத்யம் தொடங்கும்போதே * பகவந்நாராயணே த்யாதியான பெரியசூர்ணையினால் பெரிய பிராட்டியாரையே சரணம்புக்கார். இது புருஷகார ப்ரபத்தியென்பது ஸர்வாசார்ய நிர்விவாதம். இங்கு நானும் எனது பாஷ்யோபக்ரமத்தில் "க்ருத்ஸ்நமிதம் கத்யம் த்வயவிவரணமிதி ஸாதீயாந் ஸம்ப்ரதாய:; இஹ ச பகவத்ப்ரபதநே ஸமுத்யதஸ்ய புருஷகார புரஸ்காராதிகம் பூர்வக்ருத்யம்; ஸாங்க ஸ்வரக்ஷா பரஸமர்ப்பணம் தத்காலக்ருத்யம்;........" இத்யாதி வாக்யங்களை மிகத் தெளிவாக எழுதியிருக்கிறேன். இதில் ப்ரபத்திசெய்பவனுக்கு மூன்று க்ருத்யங்களும் சரண்யனுக்கு மூன்றுக்ருத்யங்களும் வகுத்திருக்கிறேன். ப்ரபத்திபண்ணுமவனுடைய முதல் க்ருத்யமாகச் சொன்னதை மட்டும் குறிக்கொண்டால் போதும். புருஷகார புரஸ் கரணமே அவனுக்கு முதல் க்ருத்யமாகக் கூறினேன். இதுதான் த்வயமந்த்ரத்தில் ஸ்ரீமச் சப்தநிர்திஷ்டமென்பதையும் காட்டியிருக்கிறேன். "ச்ரியம் ப்ரபத்யே". "ச்ரியம் ப்ரபத்யேத" என வருமிடங்களிலெல்லாம் புருஷகாரப்ரபதநம் தவிர வேறொன்றும் விவக்ஷிதமன்றென்பதை மிதமதிகளும் எளிதிலுணரும்படி செய்திருக்கிறேன். "லக்ஷ்மீர் ததாதி; ஸ்ரீ: விதரதி" என்றுப்போலே ஆயிரமிடங்களில் சொன்னாலும் புருஷகாரக்ருத்யத் தினால் கொடுப்பிக்கை யொழிய வேறொன்றும் சொல்லிற்றாகாது. புருஷகாரத்வமென்பது தாபயித்ருத்வமேயொழிய வேறன்றே. உலகில் ஸாக்ஷாத்தாகக் கொடுப்பவர்களை எப்படி தாதாக்களென்றும் உதாரர்களென்றும் வழங்குவதுண்டோ, அப்படியே புருஷகார க்ருத்யம் செய்து கொடுப்பிப்பவர்களையும் தாதாக்களென்றும் உதாரர்களென்றும் வழங்குவதுண்டு. அதையிட்டே பிராட்டியை *ச்ரியம் லோகே தேவஜுஷ்டாம் உதாராம் * என்று ச்ருதியோ தினதும், * கஸ்மைசித் அஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய * என்று பட்டர் ஸாதித்ததும். எந்த வொருவஸ்துவை எந்த வொரு நபர் தானே கொடுக்க சக்தரோ, அந்த வஸ்துவைக் குறித்து அந்த நபர்தானே பிறரிடத்தில் மன்றாடுகிறாரென்கை மதியுடையார் சொல்லும் வார்த்தையன்று. ஆகவே பிராட்டிக்குப் புருஷகாரத்வ முண்டென்று இசைந்தான பின்பு அவளுக்கே மோக்ஷப்ரதத்வமும் உண்டென்று சொல்லுவதும் அதற்காக வாதாடுவதும் அபஹாஸ்யமானது அப்படி வாதாடுகின்றவர்களான **அஸதாம் கர்வோபி நிர்வாபித:.**

13. சில விடங்களில் என்னுடைய அந்யபரங்களான உக்திகளைக்கொண்டு வீணான விவாதத்தை வளரச்செய்து கொண்டுபோந்து "**பூர்வோத்தரவிருத்தவக்தா**" என்கிற

பட்டத்தை எனக்கு ஸ்தாபித்து வைக்கப் பார்ப்பவர்கள் "மத்பக்தோபி ந வைஷ்ணவ:" என்கிற கணக்கிலே ஒதுக்கத்தக்கவர்களேயாவர். அலங்கார சாஸ்த்ரத்தில் ஆக்ஷேபாலங்காரமென்று ஒன்றுண்டு ; அதற்கு லக்ஷணம் கூறுகிற சுலோகம் * ஆக்ஷேப: ஸ்வயமுக்தஸ்ய ப்ரதிஷேதோ விசாரணாத் * என்பது. தான் சொன்னதைத் தானே விமர்சித்துப்பார்த்து தானே அதை மறுப்பது ஆக்ஷேபாலங்கார மென்றபடி. இந்த அலங்காரம் பொருந்தும்படி, நான் சொன்னதை நானே மறுத்திட்டாலும் பாதகமில்லை. ஆனாலும், பட்டர் எங்களாழ்வான் ச்ருதப்ரகாசிகாபட்டர் முதலிய ப்ரஸித்த பூர்வாசாரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளைக் காட்டி "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்று நானெழுதி வைத்ததுதான் சிலாலிகிதமான ஸித்தாந்தம். இதைக் காணகில்லாத அஸதாம் கர்வோ நிர்வாபித: என்பது பேர்க்கவும் பேராதபடி தேறி நின்றது. .... ... *

அஸத்கர்வ நிர்வாபணத்தில் முதல் பரிச்சேதம் முற்றிற்று.

---

# இரண்டாவது பரிச்சேதம்-ப்ரபத்த்யுபாயத்வவாதிநாம் கர்வ நிர்வாபணம்.

ஸோஹம் வேங்கடநாதார்ய: ப்ரபத்தே ரநுபாயதாம்
ப்ரதிஷ்டாப் யாஸதாம் கர்வநிர்வாபண மசீக்லுபம்.

14. பிராட்டியின் உபாயத்வ விஷயத்திற்போலவே ப்ரபத்தியின் உபாயத்வ விஷயத்திலும் அஸதாம் கர்வநிர்வாபணத்தை நன்கு செய்திருக்கிறேன். அதிற்காட்டிலும் அதிகமாகவே செய்திருக்கிறேன். எம்பெருமானைத் தவிர்த்து க்ஷுத்ரக்ரியாகலாபங்களை உபாயமென்று வாய்திறப்பது மிகவும் அபஹாஸ்யமென்பதை யறியாதவர்களைப்பற்றி சோகிக்க வேண்டியது தவிர வேறில்லை. சாஸ்த்ரஜ்ஞர்கள் சில விஷயங்களை **தர்மிக்ராஹகமாந ஸித்தம்** என்பர்கள். அந்தரீதியில் ப்ரபத்தியின் அநுபாயத்வமும் தர்மிக்ராஹகமாந ஸித்தமென்று காட்டியிருக்கிறேன். ப்ரபத்தி இன்னதென்பதைக் காட்டும் வசனம் யாவருமறிந்தது ; * **த்வமேவ உபாயபூதோமேபவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதிரித்யுக்தா** * என்பது. நீயே உபாயமாயிருக்கவேணு மென்கைதான் ப்ரபத்தி—என்னு நிற்க, ப்ரபத்தியும் உபாயமென்றால் இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ ? ஏற்கெனவே நான் சொல்லிவைத்திருப்பதைத்தானே இந்த அஸத்கர்வ நிர்வாபணத்தில் எடுத்துக் காட்டவேண்டும். அது தன்னைப் பரக்கக் காட்டுகிறேன்.

15. ஆளவந்தார் தாம் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹத்தில் * நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ: * என்று ஸ்பஷ்டமாகச் சொல்லி வைத்தார். இது வியாக்கியான ஸாபேக்ஷமல்லாத மூலம். ஆனாலும் இங்கு நான் பரக்க வியாககியான மிட்டிருக்கிறேன். என்ன இட்டிருக்கிறேனென்றால், [மதீய ரக்ஷாயாம்] "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷா

பாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ:; அத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஸர்வத்ர உபாய:'' என்று கல்வெட்டாக எழுதியிருக்கிறேன். இங்கு ''முக்தவ்யாபாரந்யாயேந'' என்றெழுதியிருக்கிறேனே, இதுதான் இவ்விஷயத்தில் ஜீவநாடியானது. கேவலம் பலாநுபவத்தில் ஊன்றின முக்தனுக்கு ஸாதநாநுஷ்டான ரூபமான செயல் லவலேசமுமில்லை, அது அபேக்ஷிதமுமன்று; ஆனாலும் முக்தன் வாளாவிருப்பதில்லை. செய்வனவெல்லாம் ஸ்வயம் போக்யமாகக்கொண்டு செய்கிறான். பரமைகாந்திகளான முமுக்ஷுக்களின் வியாபாரங்களும் அப்படிப் பட்டவையே யென்று நிரூபித்திருக்கிறேன்.

16. எனக்கு வழி காட்டியாக ரஹஸ்யக்ரந்தங்கள் பணித்தவர் ''ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்'' என்றருளிச் செய்ததை நிதியாகக்கொண்டே நான் கத்யபத்யங்களை அபரிமிதமாக எழுதிவைத்தேன். அவற்றில் தலையானது * உபாயஸ் ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவாந் ப்ரஸத்த்யை தஸ்யோக்தே ரூபபதி ந நிதியஸாஸநமதீ, தஸாரோஹ: பும்ஸாம் ஸுக்ருதபரிபாகேந மஹதா நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாணநிபுண: * என்கிற என்னுடைய ச்லோகரத்நம். இதில் ''நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகிலநிர்மாணநிபுண:'' என்ற நான்காவது பாதமானது ''ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்'' என்கிற ஸ்ரீலோகாசார்யதிவ்ய ஸூக்தியின் ப்ரதிச்சந்தமென்பதில் ஐயமுண்டோ? * ஸ்வப்ராப்தேஸ் ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ * இத்யாதிகளும் கேவலஸமுத்ரகோஷமா? ''எம்பெருமானை அடிபணிகின்றவர்களாகச் சொல்லப்படுமவர்கள் உண்மையில் தாமாக அடிபணிகின்றார்களல்லர்; பின்னையோவென்னில், புழுகுறித்தது எழுத்தாமாப்போலே யத்தனை'' என்கிற நம்பிள்ளை ஸூக்தியைப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களிலேகண்ட நான் அதை ச்லோகபத்தமாக்கினேன். * குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந: * என்று; இதைத்தான் குணாக்ஷரந்யாயமென்பது. இந்த கணக்கிலே தேறுகிற நம்முடைய பகவதுபஸர்ப்பணத்தை உபாயமாகக் கொள்ளலாகாதென்று நிலையிட்டிருக்கிறேன். நியாஸதிலகத்தில் * த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்...ஸூரயோ மே ஸ்வதந்தாம் * என்று, எம்பெருமானைக்கூட உபாயமென்ன ஸஹியாத நித்ய முக்தகல்பர்களான மஹான்கள் திறத்திலே எனக்கு ப்ராவண்யாதிசயமுள்ளதாகக் கூறியிருக்கிறேன்.

17. கீதா பாஷ்யத்தில் (8—14.) * அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த தித்யயுக்தஸ்ய யோகிந: * என்றவிடத்து ''தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே; மத் ப்ராப்த்யநுகுண—உபாஸநவிபாகம் தத்விரோதிநிரஸநம் அத்யர்த்தமத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:. * யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: * இதி ஹி ச்ரூயதே.'' என்றுள்ளவிடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ''உக்தஸ்ய அதிவாதமாத்ர த்வசங்கா வ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—யமேவேதி.!; என்றெழுதிவைத்திருக்கிறேன். ''உக்தஸ்ய ச்ருதிமூலதாம் ஆஹ'' என்றோ ''ச்ருத்யநுக்ருஹீதோயம் அர்த்த இதி ப்ரகாசயதி'' என்றோ அவதாரிகை வைக்கலாமாயிருக்க, பலவிடங்களில் கைப்பற்றின அந்த பத்ததியை இங்கே விட்டு ''அதிவாத மாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ'' என்று அவதாரிகை யிட்டிருக்கிறேனென்பதை உற்று நோக்கவேணும். யார்நோக்கவேணும்? விவேகிகள் நோக்கவேணும்.

18. * ஸ்வகமிதி ஹரிதத்தம்...நிகமாந்தாசார்யகம் * என்றும் * வேதாந்த தேசிக பதே விநிவேச்ய பாலம் தேவ: * என்றும் நானே கூறிக்கொண்டபடி எம்பெருமானருளால் வேதாந்தாசார்யபட்டம் பெற்ற நான் வேதாந்தார்த்த விப்லவத்தைப் பண்ணமுடியுமா? ப்ரபத்தி பண்ணவேணுமென்கிற புத்தி நமக்கேயுண்டானதா? எம்பெருமான் தந்தருளினதா? என்பதை நாம் முக்கியமாக ஆராயவேண்டும். நமக்கேயுண்டானதென்று தேறிவிடுமாயின் அதை உபாயமென்னத் தட்டில்லை. உபாயமென்றே சொல்லியாகவேண்டும். * வரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத் * என்று ஆழ்வானருளிச் செய்ததை யடியொற்றி நானும் * ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம் ஸ்வயம் * என்று ந்யாஸதசகத்தில் சொன்னேன். இதில் ஸ்வசப்தத்தை எத்தனை தடவை ப்ரயோகித்திருக்கிறேனென்று எண்ணிப் பார்க்கவேணும். இதில் பூர்வார்த்தமிருக்கட்டும். உத்தரார்த்தத்தை உற்று நோக்கவேணும். "ஸ்வதத்தயா தியா" என்னலாமே எளிதாக. "ஸ்வதத்த ஸ்வ தியா" என்று சொல்லி யிருக்கிறேனென்பதை நோக்குவாரில்லையே. * மருவித்தொழும் மனமே தந்தாய் * என்றார் ஆழ்வார். முன்னங்கொடுத்த மனம் தொழும் மனமன்றிக்கே அழும்மனமா யிருந்தபடியால் அதைத் தவிர்த்து, தொழுகைக்காகப் புதியதொருமனம் தந்தருளினனும் எம்பெருமான். அவ்வருளிச்செயலை யடியொற்றி நான் பேசியிருக்க, இந்தச் சுவடறியாதார்க்கு என் சொல்லுவது? * ஊமையரோடு செவிடர்வார்த்தை.*

19. நியாயஸித்தாஞ்ஜனத்தில் * இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா* என்றதையும், உடனே * ஸ்வஹேதுத்வதியம் ருந்தே * என்றதையும் * கிம் புநஸ் ஸஹகாரிணும் * என்றதையும் தனித்தனியே ஆழ்ந்து பார்க்கவேண்டாவா? ப்ரபத்தி யென்கிற வஸ்து தேறும்போதே தன்னிடத்தில் உபாயத்வத்தை அணுவளவும் ஸஹியாமலே தேறுவதனுல் ஸ்வஹேதுத்வதியம் ருந்தே. என்று நான் வெட்டொன்று துண்டிரண்டாகச் சொல்லியன்றோ அஸதாம் கர்வ நிர்வாபணம் பண்ணியிருக்கின்றேன்.

20. சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானுல் அது ஸாதனமாக இருந்தே தீருமென்றும், ஸாதனமாக மாட்டாததை சாஸ்த்ரம் விதியாதென்றும், விதிவிஷயமானதற்கு ஸாதநத்வம் அநிவார்யமென்றும், சரமச்லோகத்தில் * மாமேகம் சரணம் வ்ரஜ * என்று விதிக்கப்பட்டிருக்கின்ற ப்ரபத்திக்கு எப்படி உபாயத்வம் இல்லாமற் போகுமென்றும் சிலர் சங்கிப்பதுண்டு; இந்த சங்கையை நியாஸதிலகத்தில் நானே வேரற அரிந்து பொகட்டிருக்கிறேன்.

21. எங்ஙனேயென்னில்; * ஹேதுர் வைதே விமர்சே பஜநவத் இதரத், கிந்து அநுஷ்டாநகாலே வேத்யஸ் த்வத்ரூபபேதோ விவித இஹ ஸதூபாயதா அந்யாநபேக்ஷா * என்று கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டியிருக்கிறேன் தத்துவத்தை. இதன் கருத்து யாதெனில்; ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனுல் பக்திபோலே இதுவும் உபாயமென்று சொல்லக்கூடியதாயிருந்தாலும் இங்கு அங்ஙனே கொள்வதற்கிடமில்லை; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதாயிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்திவித்யையில் இதராநபேக்ஷ—உபாயத்வம் [அதாவது, பிறிதொன்றை எதிர் பாராத உபாயத்வம்] வேத்யாகாரமாக இருக்கையாலே என்கை. இப்படி நான் வெட்ட வெளிச்சமாகச் சொல்லியிருக்க, இவர்கள் செருக்குக்கொள்ள விஷயமேயில்லையே.

22. எம்பெருமான் ஸித்தோபாயமானாலும் ஸாத்யோபாயமென்று ஒன்று இருந்து தீரவேண்டுமென்பதாக ஒரு மருளுண்டு; இந்த மருளையும் நன்கு தொலைத்திருக்கிறேன். ஸாத்யோபாயமென்றால் 'சேதநனுடைய க்ருதியாலே ஸாத்யமான உபாயம்' என்றுதானே பொருள் கூறியாகவேண்டும்; உண்மையில் இது சேதநக்ருதியாலே ஸாத்யமா? என்று ஆராய்ந்து பார்த்தால் * இசைவித்தென்னை உன் தாளிணைக்கீழ் இருத்துமம்மானே * என்பது போன்ற பல பாசுரங்களை உட்புகுந்துபாராமல் மேலெழப்பார்த்தாலுங்கூட எலியெலும்பரான நம்மால் ஸாதிக்கலாவதொன்றுமில்லையென்று எளிதிலுணரலாமே. அப்படி நம்முடைய க்ருதிஸாத்யமானதொன்று நம்பக்கலில் இருக்குமாகில் "அகிஞ்சந:" என்றநுஸந்திப்பது பொருளற்றதாமே. 'நாம் எவ்வளவு செய்தாலும் அகிஞ்சந: என்றுதான் சொல்லிக் கொள்ளவேணும்; அது உபசாரவழக்கு' என்பவர்களை நன்கு தெளிவித்திருக்கிறேன்.

23. * நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாணநிபுண: * என்கிற என்னுடைய ஒரு உக்தியானது * ஏதத் ராமாஸ்த்ரம் தலயது * என்று பட்டரருளிச் செய்த கணக்கிலே அப்ரதிஹத ராமாஸ்த்ரமாய்க் கொண்டு எவ்விதமான துராக்ஷேபங்களையும் நெடுந்தூரத்திலே தள்ளித்தொலைக்குமே. இதுவொரு அசட்டுப் பரமைகாந்தி ச்லோக மென்றன்றோ இவர்கள் நினைத்திருப்பது. பட்டர் அஷ்டச்லோகியில் * ஆத்மத்ராணோந்முகச்சேத் நம இதி பதம் வித்யாத் * என்று ஸாதித்திருப்பதொன்றின் மருமமறிந்தால் போதுமே. ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் மஹத்தான விரோதியென்று சாஸ்திரங்கள் முறையிடா நிற்க, ஸ்வரக்ஷணத்தில் தான் அந்வயிப்பதோடு நில்லாமல் அதை உபாயமென்றும் கொள்ளுகிற கொடுமை சாலப் பொல்லாது. * ஸ்வப்ராப்தௌ ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ * என்று நான் கோஷித்திருப்பதையெல்லாம் அரண்ய ருதிதமாக்குமவர்களின் கர்வநிர்வாபணம் பண்ணித்தான் பயனென்கொல். * பயனல்ல செய்து பயனில்லை நெஞ்சே! *

24. ஸ்ரீபாஷ்யத்தில் * உபபத்தேச் ச * (3–2–4.)என்கிற ஸூத்ரபாஷ்யத்திலே— "ப்ராப்யஸ்ய பரமபுருஷஸ்ய ஸ்வப்ராப்தௌ ஸ்வஸ்யைவ உபாயத்வோபபத்தே:; * நாய மாத்மா ப்ரவசநேந லப்ய:...தநூம் ஸ்வாம் * இதி அநந்யோபாயத்வச்ரவணாத்" என்றும், * பலமத உபபத்தே: * (3–2–37.) என்கிற ஸூத்ரபாஷ்யத்தில் "......ந ஹி அசேதநம் கர்ம க்ஷணத்வம்ஸி காலாந்தரபாவிபலஸாதநம் பவிதுமர்ஹதி" என்றும் ஸ்வாமி பாஷ்யகாரர் அருளிச்செய்திருப்பவற்றைத் தழுவியே நான் எழுதியுள்ளேன்; அதற்கு முரணாக எழுதினேனாகில் * நிர்விஷ்டம் யதிஸார்வபௌமவசஸாம் ஆவ்ருத்திபிர் யௌவநம் * என்றது என்னாகும்? ஸ்ரீமத் கம்பீரவார்த்தை யென்ன மாட்டார்களா?

25. பாஷ்யகாரர் தாமே ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் "தத்ப்ராப்தயே ச தத்பாதாம் புஜத்வயப்ரபத்தேரந்யத் ந மே கல்பகோடிஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தீதி மந்வாந:" என்று அருளிச்செய்திருப்பதுகொண்டு சிலர் கலங்குவர்கள். 'ப்ரபத்தேரந்யத் ந மே ஸாதநமஸ்தி' என்றதனால் ப்ரபத்திஸாதனமென்றதாகாது. ஏதேனுமொரு ஸாதனம் இருந்து தீரவேணுமென்பாயாகில் ப்ரபத்திக்கு மேற்பட வொன்றுமில்லைகாண் என்றபடி. "ஆகிஞ்சந்யாத் அந்யத் ந மயி ஸாதநமஸ்தி" என்றதோடொக்குமிது. ப்ரபத்தவ்யனைத்தான் ப்ரபத்தி யென்கிறது. * ந்யாஸ இதி ப்ரஹ்ம. * ந்யாஸ இத்யாஹுர் மநீஷிணோ ப்ரஹ்மாணம் * இத்யலம்.

प्रपत्तेरुपायत्वमाचक्षते ये न ते मामकीनोक्तितत्त्वं विदन्ति ।
असद्गर्वनिर्वापणेनाप्यनेन ध्रुवं न प्रसत्स्यन्त्यमी दीर्घमूर्खाः ॥

ஸ்ரீ தேசிகனருளிய அஸத்கார்வ நிர்வாபணத்தில் இரண்டாவது பரிச்சேதம் முற்றிற்று.

# தேசிகன் செய்தருளின அஸத்கர்வ நிர்வாபணத்தில் மூன்ருவது பரிச்சேதம்—ஸ்வகதஸ்வீகாரவாதி கர்வ நிர்வாபணம்.

(ச்லோ.) ஸ்வகதஸ்வீக்ருதிரேவ ப்ரததே நாந்யேதி கதயதாம் அஸதாம்,
கர்வம் யதா நிராஸ்த்தம் ததா ஸ்புடம் வச்மி வேங்கடேசோஹம்.

26. த்வயமென்கிற மந்த்ரரத்னத்தின் சரீரம் * ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே * என்று எம்பெருமான் திருவடிகளை நாம் பற்றுவதாகவுள்ளது. இதை யடியொற்றி * புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே * என்றும் * அகிஞ்சந: அநந்யகதிச் சரண்ய ! த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே * என்றும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அருளிச்செய்யக் காண்கிருேம். சில பாசுரங்களையோ சுலோகங்களையோ விசிஷ்ய எடுத்துக்காட்டவேணுமோ? யாரும் எம்பெருமானைத் தாம் ஸ்வீகரிப்பதாகப் பேசுவது காண்கிருேமேயொழிய வேறுவிதமாகக் காண்பதில்லை ; ஆகவே ஸ்வகதஸ்வீகாரமென்பதுண்டேயொழிய, பரகதஸ்வீகாரமென்று ஒன்றுசொல்லுவதானது அஸங்கதமான வார்த்தை—என்கின்ற அஸதாம் கர்வ: நிர்வாப்யதே ஸ்ரீமத்வேங்கடநாதேந மயா.

27. இந்த விஷயத்தில் தெளிவு எப்போது பிறக்குமென்ருல், நம்மைப் பெறுவது எம்பெருமானுக்குப் பேரு? எம்பெருமானைப் பெறுவது நமக்குப் பேரு? என்று விசாரித்து முடிவுகட்டும்போதுதான் பிறக்கும். நான் பிறந்தவிடமாகிய திருத்தண்காவில் ஸேவைஸாதிக்கின்ற விளக்கொளி யெம்பெருமானுக்கு நானிட்ட ஸ்தோத்ரத்திற்கு சரணுகதி தீபிகை யென்று பெயரிட்டேன். இது மற்ற ஸ்துதி நூல்களைப்போலல்லாமல் தத்வார்த்த ஸாரங்களை வெளியிடுதற்கென்றே இயற்றப்பட்டதென்பது தோன்றவே சரணுகதி தீபிகையென்று நாமகரணம் செய்தேன். தீபப்ரகாசனுக்கும் தீபிகை காட்டினேன். இதில் பதினுன்காவது சுலோகத்தில் ஸகல சாஸ்த்ரஸாரப் பொருளையும் கைவிளக்கேற்றிக் காட்டிவைத்தேன்.

28. "கர்மஸ்வநாதிவிஷமேஷு ஸமோ தயாலு:
ஸ்வேநைவ க்ல்ப்தமபதேசமவேக்ஷமாண:,
ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த !
ஸ்வாபாவிகம் தவ ஸௌஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி."

என்பது அந்த சுலோகம். கீழே நிதியுள்ளவிடத்தில் மேலே நடந்து செல்வார்க்கு உள்ளே நிதியுள்ளதென்று தெரியாதாப்போலே, இந்த சுலோகத்தை [இந்த சுலோகத்தையென்று என்ன? என்னுடைய எந்த சுலோகத்தையும்] உருப்போடுவார்க்கு உள்ளுள்ள பொருள் தெரிய விரகில்லையன்ருே? நிதியை நானே யெடுத்துக் காட்டுகிறேன். இது பதினுன்காவது சுலோகம்; கீழே பன்னிரண்டாவதான * த்வாம் மாதரஞ்ச பிதரஞ்ச * என்கிற சுலோகத்தில் உபாத்தமான ச்ருதியில் ஸௌஹ்ருந் என்னப்பட்ட மஹாகுணத்தை இந்த சுலோகத்தினுல் விவரித்தேன். எம்பெருமான் தனது ஸஹஜ ஸௌஹார்த குணத்தினுல்தான் சரணுகதியில் ஆபிமுக்க்யத்தை விளைவித்தருளுகிருனென்பதை சுலோகத்தின் முடிவில் காட்டினேன். "சோபநம் ஹ்ருத் யஸ்ய ஸ:—ஸௌஹ்ருத்" என்று வ்யுத்பத்தியென்பதை

வ்யுத்பந்நர் உணர்வர். சோபநாசம்ஸியான ஹ்ருதயத்தையுடையவன் எம்பெருமான். இந்த ஸுஹ்ருத்த்வம் செய்யுமத்தைச் சொல்லுகிறேன் கேளீர்.

29. எம்பெருமான், விமுகர்களையும் வாரிப் பிடியாகப் பிடிக்கவேண்டி ஸர்வமுக்தி ப்ரஸங்கபரிஹாரார்த்தமாகச் சில வியாஜங்களை ஸ்வயமேவ கல்பித்துக்கொள்வதை சாஸ்த்ர முகத்தினாலறிகிறோம். இதை நான் பரமபதஸோபாநத்திலே நன்குகாட்டியிருக்கிறேன். அதில் ஆரம்பத்திலேயே நானெழுதியுள்ள வாக்கியங்கள் இவை :—

"அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாதே அநுபவிக்க ப்ராப்தரான க்ஷேத்ரஜ்ஞர் அநாத்யவித்யா கர்மாதி ப்ரவாஹத்திலொழுகிக் கரையேற விரகற்று அலமருகின்றபடியைக் கண்டருளின பரமகாருணிகனான பரமசேஷிதானே ஞானக் கைகொடுத்து இவர்களையெடுக்க இடம்பார்த்து அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்யபுத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வ்யாஜமாகக் கொண்டு விசேஷ கடாக்ஷம்பண்ணி அத்வேஷ ஆபிமுக்ய ஸாத்விகஸம்பாஷணாதிகளை யுண்டாக்கி" இத்யாதிகள். இவை கிடக்க. ப்ரக்ருதச்லோகத்தில் * ஸ்வேநைவ க்ல்ப்தம் அபதேசம் அவேக்ஷமாண: * என்றேனே ; இதை நிர்வாபணீய கர்வர்கள் ஆழ்ந்து நோக்கவேண்டாம், மேலெழ நோக்கினாலும் போதும். பதத்தின் மேல்பொருள் காட்டுகிறேன்,

**ஸ்வேநைவ**—தானாகவே, **க்ல்ப்தம்**—கல்பித்துக்கொண்ட,
**அபதேசம்**—வ்யாஜவிசேஷத்தை, **அவேக்ஷமாண:** —;

30. இப்படியெல்லாம் நான் சொல்லிவைத்ததானது உண்மையில் ஸ்ரீ வசன பூஷணத்தில்—

> "என்னூரைச் சொன்னாய் என்பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்றுப்போலே சிலவற்றை ஏறிட்டு, மடிமாங்காயிட்டு......ஜன்மபரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருதவிசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக் கொண்டு போரும்"

என்கிற ஸ்ரீஸூக்திரத்னங்களை ஸந்தத சிந்தனைபண்ணியேயென்பதில் ஐயுறவேண்டா. மேலே யெடுத்துக்காட்டிய ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்திகளில் காணும் பொருள் * ஸ்வேநைவ க்ல்ப்தமபதேசமவேக்ஷமாண: * என்கிற இந்த மதீயச்லோகத்தில் கண்ணாடியிற்போல் அப்படியே ப்ரதிபலிக்கவில்லையா ? இதெல்லாம் அதிவாதம் ப்ரௌடவாதம் ப்ரசம்ஸாவாதம் என்று கண்ணழிக்கவா இந்த நிர்வாபணீய கர்வர்கள் என் க்ரந்தங்களைப் பற்றிக்கொண்டு மன்றாடுகிறார்கள் ? ஹந்த பரிதாபாநாம் ஸீம்நி வர்த்தே.

31. இதற்கு மேலும் நோக்கவேணும். * **ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த !** * என்பது மூன்றாவதுபாதம். இதில் **த்வரஸே** என்கிற க்ரியாபதம் பேறு யாருடைய தென்பதை நிஸ்ஸந்தேஹ விபர்யயமாகக் காட்டித்தரவில்லையா ? * இன்று விண்ணுலகம் தருவானாய் **விரைகின்றான்** * என்ற திருவாய்மொழிப் பாசுரத்தை மொழிபெயர்த்தவத்தனையேயோ ? சாஸ்த்ரார்த்தத்தைச் சிந்தித்து உள்ளமுருகியன்றோ உரைத்திருக்கிறேன்.

* மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து தொலையட்டுமிவன் என்று கைவாங்கியிராதே, * கூவிக் கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ ! * என்று இவன் கதறுவது அற்பமென்னும்படி 'கூடி வாழுங்காலமின்னங் குறுகாதோ' என்று அவன் பதறியிருப்பது பெருங்கடல் என்கிற தத்துவத்தையன்றோ த்வரஸே என்பதனுல் தெள்ளிதாக உணர்த்தியிருக்கிறேன்.

32. உபநிஷத்தானது, * ரஸோ வை ஸ:, ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி * என்றது. இதில் [**அயம் லப்த்வா**] என்று லாபத்தை சேதநகதமாக ஓதியிருக்கச் செய்தேயும், ஸ்வாமி பாஷ்யகாரர் * அநாவ்ருத்திஸூத்ர ஸ்ரீ பாஷ்யத்தில் "பரம புருஷ: ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தியானது ஸாம்ப்ரதாயிக தத்வார்த்தங்களுக்கெல்லாம் வெற்றிக்கொடி நாட்டினது போலன்றோவுள்ளது. * **அநாவ்ருத்திச் சப்தாத்** * என்கிற ஸூத்ரம் இங்கு மூலம். முக்தாத்மாவுக்குப் புநராவ்ருத்தி கிடையாதென்பதைக் கூறுகின்ற ப்ரமாணங்களைக் காட்டுவதொன்றே இங்கு வேண்டுவது. அதை அழகுபடக் காட்டியருளியாயிற்று. அடியிலே "**ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே**" என்று ப்ரதிஜ்ஞை செய்தருளினவர் நம் ஸ்வாமி. உதக்ஷரமென்று தோஷம் கூறவொண்ணுதபடி அக்ஷரலப்யமான அர்த்தத்திற்கு மேற்பட எழுதமாட்டேனென்று உறுதிகொண்டவர் நமது பாஷ்யகார ரொருவரே. அப்படிப்பட்டவர் இங்கு மூலத்திற்கு ஸம்பந்தமற்ற இந்த வாக்கியத்தை எதற்காக வருளிச் செய்தாரென்கிற விசாரம் நமக்கு வேண்டா. வாக்கியத்தின் சீரிய பொருளைச் சிந்தனை செய்து நுண்பொருளுணர்வார் மஹாபாக்யசாலிகள்.

33. மேலெடுத்துக்காட்டின ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியொன்றே '**அஸதாம் கர்வநிர்வாபணே**' அத்விதீய ஸாமர்த்திய முடையது. கீழே நானெடுத்துக் காட்டிய என்னுடைய சரணுகதி தீபிகாச்லோகமும் இந்த பாஷ்யஸூக்தியையே ஜீவாதுவாகக் கொண்டது மறுபடியும் அதை நினைவூட்டுகிறேன்—* ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே * என்பது என்னுடைய சுலோகமிருக்கட்டும். மற்ருேரிடத்தில் இதற்கு முரணுகச் சொல்லியிருப்பதாகச் சிலர் காட்டவுங் கூடும். வேறு சில விஷயங்களில் முரண்பாடு காணக்கூடு மென்று கொண்டாலும் இவ்விஷயத்தில் அது ஸர்வாத்மநா அப்ரஸக்தம் * செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்ருேமே * என்று சொல்லியுள்ள நான் இத்தகைய விஷயத்தையன்ருே முக்கியமாக நெஞ்சிற் கொண்டது. * வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணி லென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம் பாரித்துத், தானென்னை முற்றப் பருகினுன் * என்கிற திருவாய்மொழிப் பாசுரமன்ருே நமது ஸ்ரீ பாஷ்யகாரர்க்கு ஜீவாதுவாயிருந்தது.

34. இந்த நிர்வாபணீயகர்வர்கள் அருளிச் செயலுக்கு அத்யந்த தூரஸ்தர்களாகையாலே திருவாமொழி காட்டுவதிருக்கட்டும். பகவத் பாஷ்யகார ஸூக்தியையும் அவர் தாம் தமக்கு ஜீவநாடியாகக்கொண்ட கீதாச்லோகத்தையும் ஆராய்வோம். * **சப்தாத்** * என்று ஸூத்ரகாரர் சொன்னபடியாலே பாஷ்யகாரர் "சப்தச்ச—ஸகல்வேவம் வர்த்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்மலோகம் அபிஸம்பத்யதே ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே இத்யாதிக:" என்ருர். அதற்குமேலும் "ததா ச பகவதா ஸ்வயமேவோக்தம்" என்று தொடங்கி * மாமுபேத்ய து கௌந்தேய ! புநர்ஜந்ம ந வித்யதே * என்கிற கீதாச்லோகத்தையு மெடுத்துக் காட்டியருளினர். இதற்கு மேலும் என்ன காட்டவேண்டியிருக்கிறது? ஆனுலும் இந்த

ப்ரஸங்கத்தில், மதாந்தரஸ்தர்களுக்கு ஸர்வாத்மநா நிலமல்லாத அருமருந்தன்ன அர்த்த விசேஷத்தைக் காட்டியருளவேணுமென்னு மபிநிவேச முண்டாகி, இந்த ப்ரகரணம் விட்டால் வேறு ப்ரகரணம் இதற்கு வாய்ப்பதரிது என்றும் திருவுள்ளம் பற்றி **"ந ச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதா சித் ஆவர்த்தயிஷ்யதி"** என்கிற அநர்க்க ஸ்ரீ ஸூக்தியை யருளிச்செய்தார்.

35. அந்த பங்க்தியை அப்படி யெழுதாமல் "ந ச பரமபுருஷ: அத்யந்தம் ஆர்த்யா உபஸ்திதம் பக்தம் ஆவர்த்தயிஷ்யதி" என்று எழுதியிருக்கலாமா கூடாதா? என்று பார்ப்போம். தாராளமாக எழுதியிருக்கலாம். ஏன் அப்படி யெழுதவில்லை? என்று விவேக குசலர்கள் விமர்சிக்கவேணும். நெஞ்சை நடுநிலையில் வைத்து விமர்சித்தால் என்ன தேறுமோ, அதை விளக்கிக் காட்டுகிறேன். 'எம்பெருமான் விஷயத்தில் சேதநனுடைய பசி அதிகமா? சேதநன்விஷயத்தில் எம்பெருமானுடைய பசி அதிகமா?' என்று ஒரு கேள்வி. 'எம்பெருமானை யநுபவிப்பதால் சேதநனுக்கு ஆனந்தம் அதிகமா? சேதநனை யநுபவிப்பதால் எம்பெருமானுக்கு ஆனந்தம் அதிகமா?' என்று மற்றொரு கேள்வி. இக் கேள்விகளிரண்டும் பர்யாயத: ஒன்று போலிருக்கிறதே யென்று சொல்லிவிடலாம்; அஃதிருக் கட்டும். வெவ்வேறு கேள்விகளாகவே கொண்டு விடையிறுப்பது நலம்.

36. ஸ்ரீ வைகுண்ட கத்யத்தில்* கதா அஹம் பகவந்தம்...கதா மாம் பகவாந் * இத்யாதி ஸாதித்திருக்கிறபடியே ஆர்த்திமிக்குக் கதறுகிறவன் சேதநனாகையாலே இவனுடைய பசிதான் அதிகம் என்றும்; பசி தீர்ந்தவனுக்கே ஆனந்தம் ப்ராப்தமாகையினாலே இவனுடைய ஆனந்தமே அதிகமென்றும் நிர்வாபணீயகர்வர்கள் நினைக்கக்கூடும். * அயம் லப்த்வா ஆநந்தீ பவதி * என்று உபநிஷத்து ஓதியிருக்கையாலே அதை உபஷ்டம்பகமாகவும் காட்டக்கூடும். இது மருளென்பதை இனி உபபாதிக்கிறேன். முக்தன் அங்குச் சென்று ஏதோ ஸாமகானம் பண்ணுவதாக அந்த உபநிஷத்தே ஓதிற்று. *[ஏதத் ஸாம காயந் நாஸ்தே.]* அந்த ஸாமம் எது வென்பதையும் தெரிந்துகொண்டிருக்கிறோம்; அதை இந் நிலத்திலேயே நாம் ஓதுகிறோம். * அஹமன்னம் அஹமன்னம் அஹமன்னம் * என்று முந்துறமுன்னம் ஓதுவது. பின்பு * அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத: * என்று ஓதுவது. * அஹமன்னம் அன்னமதந்தம் அத்மி* என்று முடிவாக ஓதுவது. ஆக இம் மூன்று வாக்யங்களினுடையவும் பொருளையுணர்ந்தால் பலகலக்கங்கள் தீர்ந்ததாகும். * வேதாந்தாசார்யஸம்ஜ்ஞாம் அவஹித பஹுவித்ஸார்த்தம் அந்வர்த்தயாமி * என்ற நான் இவ்வர்த்த தத்வத்தையுணர்ந்தும் உணர்த்தியும் அந்வர்த்த ஸம்ஜ்ஞனாகிறேன்.

37. * அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம் * என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக ஓதுவதனால்—என்னில் முன்னம் பாரித்து விடாய்த்திருக்கிற எம்பெருமானுடைய பசியைத் தீர்க்க அவனுக்கு நான் அன்னமாகிறேனென்றதாயிற்று. எம்பெருமானுக்கு மட்டுமன்றே விடாய்; சேதநனான இவனுக்கும் விடாயுண்டே; அவனுடைய விடாயை முன்னம் தீர்த்தபிறகு தன்விடாயும் தீரப்பெறுகையை * அஹமந்நாத: அஹமந்நாத: அஹமந்நாத:* என்கிற அநுஸந்தான முணர்த்துகின்றது. இங்ஙனே இரண்டு வாக்கியங் களினால் சொல்லப்பட்ட அர்த்தத்தை * அஹமந்நம் அந்நமதந்தம் அத்மி * என்கிற மூன்றாவது வாக்கியம் நன்கு விவரிக்கின்றது. இதன்பொருள்—'நான் முந்துறமுன்னம் எம்பெருமானுக்கு அன்னமாகியிருந்து, என்னையநுபவித்து மகிழ்கிற அவனை நானுமநுபவித்து மகிழ்கிறேன்' என்பதாம். முக்தனாகிய தன்னை யநுபவித்து எம்பெருமான் நெடுநாளைய

விடாய் தீர்ந்து மகிழ்ந்து நிற்கையில் அந்த மகிழ்ச்சியைக் கண்டு தான் மகிழ்கிறான். இவன் அசேதனமல்லாமல் சேதனனாய் ஞானானந்தங்களை வடிவாகவுடையனாயிருக்கையாலே தன்னுடைய ஆனந்தமும் பயன்பெற்றதாக வேணுமே; அசித்திற்காட்டில் ஒரு வாசி ஏற்படவேணுமே. தன்னைப்பெற்று எம்பெருமான் ஆனந்திப்பதைக் கண்டு 'நம்மால் எம்பெருமானுக்கு இப்படியொரு ஆனந்தமுண்டாயிற்றே!' என்று அநுஸந்தித்து அதனால் தான் ஆனந்திக்கை அவர்ஜநீயம். இதுதான் * அஹமந்நமஹமந்நம் அஹமந்நாதோऽஹமந்நாத: * என்கிற சரமவாக்கியத்தின் பரமதாத்பரியம்.

“ अहमन्नमिति ब्रुवन् हरेः प्रथमं क्षुत्प्रशमं प्रकल्पयन् ।
तदनु क्षपयन्निजक्षुधाम् अहमन्नाद इति प्रगायति ॥
अन्नत्वं प्रथमं स्वस्मिन् परस्ताद् ब्रह्मणि स्थितम् ।
भोग्यतैव स्वतस्सिद्धा भोक्तृताऽऽगन्तुकी चितः ॥
हरिः स्वभोगसिद्ध्यर्थं सततं यतते स्वयम् ।
तद्यत्नफलकृत्यानामात्मीयत्वभ्रमश्रितः ॥ ”
पाठान्तरम् ;—साधनत्वभ्रमश्रितः । इति ।

என்று வேதப்பிரான் பட்டர் பணித்த சுருக்கு.

38. ஸ்ரீராமாயணத்தில் * அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ * என்கிற சுலோகத்தினால் வால்மீகி பகவானும் வெளியிட்ட பரமார்த்தமிது. மகுடாபிஷேகம் பெற்ற விபீஷணனாழ்வான் மகிழ்ந்தானென்று சொல்லவேணும். * லங்காயாம் அபிஷிக்தஸ் ஸந் ப்ரமுமோத விபீஷண: * என்று சுருங்கச் சொல்லி முடிக்கவேண்டியிருக்க “க்ருதக்ருத்ய: - ததா ராம:—விஜ்வர:—ப்ரமுமோத ஹ” என்று இட்டு நீட்டியிருப்பதை மத்பக்ஷம்மந்யர்கள் மனத்திலும் நினைக்ககில்லார்.

39. ஆத்மாவுக்கு சைதந்யாதீனமான போக்த்ருத்வம் இருந்தாலும், அது பாரதந்த்ரியத்தையும் போக்யதையையும் ஸ்வரூபவுண்மையாகத் திருமந்திரத்தினால் கண்டறிந்தவனுடைய போக்த்ருத்வமாகில் தன்னுடைய ரஸத்துக்கு உடலன்றிக்கே சேஷியினுடைய ரஸத்துக்கே உடலாயிருக்குமென்று கிடாம்பியப்புள்ளார் பலகால் பணிக்கக் கேட்டிருக்கை. * படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே * என்கிற குலசேகரப்பெருமாள் பாசுரத்தில் * படியாய்க் கிடந்து * என்பதனால் அசேதநவ்ருத்தியை முன்னம் அபேக்ஷித்து, பின்னை * உன் பவளவாய் காண்பேனே * என்று சேதநவ்ருத்தியும் அபேக்ஷிக்கப்பட்டது. இத்தலையை விநியோகங்கொண்ட எம்பெருமானுக்கு விளையும் உகப்பைக் கண்டு உகப்பதுதவிர வேறு பயனில்லை சேதனனுடைய ஆனந்தித்வத்திற்கு—என்று எங்களாழ்வான் பணிக்கும்படி.

40. * யாமுநஸ்தோத்ரவ்ருத்த்யா வ்யவ்ருணுத நிகமாந்தாசார்யகம் வேங்கடேச: * என்று சொல்லிவைத்த நான் பணித்தபடியன்றோ இங்கு முக்கியமாக எடுத்துக்காட்டத் தக்கது. அது கேளீர். ஆளவந்தார் * கதாஹமைகாந்திக நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி * என்று ஸ்தோத்ர ரத்னத்தில் அருளிச்செய்தார். 'நான் எப்போது கைங்கர்யம்பண்ணி ஹ்ருஷ்டனாகப் போகிறேன்' [கதா ப்ரஹ்ருஷ்யேயம்] என்று ஸாதிக்கவேண்டியிருக்க, வசனவ்யக்தி அங்ஙனமின்றிக்கே **ப்ரஹர்ஷயிஷ்யாமி கதா பவந்தம்** என்றிப்புடையிலே அமைந்திருப்பதானது எவ்வளவு சுவையுடைத்து! ணிஜந்த ப்ரயோகம் எதற்காகச் செய்யப்

பட்டது? இவ்விடத்தில் எனக்குமுன்னே வியாக்கியான மருளிச் செய்துவைத்த மஹாசார்யர் "தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈச்வரனுக்குப் பிறக்கும் ஹர்ஷமேயிறே சேதநனுக்கு ப்ராப்யம்" என்றிட்டுவைத்ததை நான் என்னுடைய ஸ்தோத்ர பாஷ்யத்தில்,

"[ப்ரஹர்ஷயிஷ்யாமி] த்வத்தரஸயூதஸ்ய மே த்வத்ப்ரஹர்ஷ ஏவ ப்ரதாநம் ப்ரயோஜநம் இதி பாவ:. ஏவஞ்ச ஸ்வாதீந ஸ்வார்த்த கர்த்ருத்வ ப்ரமரஹித கைங்கர்யப்ரார்த்தநா க்ருதா பவதி"

என்றெழுதி வைத்திருக்கின்றேன். * க்ருதார்த்தோஹம் பவிஷ்யாமி * என்றும் * மறப் பொன்றின்றி யென்றும் மகிழ்வேனே * என்றும் வருமிடங்களில் இந்த நிர்ணயத்திற்கு அநுகுணமாகவே ஆசாரியர்கள் அர்த்தநிஷ்கர்ஷம் பண்ணிப் போருவர்கள்.

41. இந்த விரிவுகள் * அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா * என்கிற பகவத் பாஷ்யகார ஸ்ரீஸூக்தியைத் தொட்டன்றோ விளைந்தன. இனி அவ்விடத்திற்குச் சென்று உபஸம்ஹரிக்கிறேனிதை. * **ந ச பரமபுருஷ:** * இத்யாதி வாக்யத்திற்கு அடுத்தபடி * **ய ஏவமாஹ** * என்று தொடங்கி கீதையிலிருந்து இரண்டரை சுலோகங்களை யெடுத்துக் காட்டியருளுகிறார் ஸ்வாமி. எந்த அம்சத்திற்கு ப்ரமாணமாக எடுத்துக்காட்டினரென்று ஆராயவேணும். * அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் * என்றதற்குப் ப்ரமாணங்காட்டினபடி யாகச் சிலர் நினைப்பர்; அப்படியாகில் "ய ஏவமாஹ; *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யத்தமஹம் ஸ ச மம ப்ரிய: * இதி." என்னுமளவே சொல்லி நிறுத்தியிருக்கவேணும். மேலும் அடுக்கிக் கொண்டுபோய் * ஸ மஹாத்மா ஸுதுர்லப: * என்னுமளவுங் காட்டி நிறுத்தியிருக்கையாலே (**ஜ்ஞாநிநம் லப்த்வா**) என்றதில் விவக்ஷிதமான இன்சுவைப் பொருளுக்கு ப்ரமாணங் காட்டினபடி. எம்பெருமான் தான் தன்னுடைய சோதிவாய் திறந்து * ஸ மஹாத்மா **ஸுதுர்லப:** * என்றது, தல்லாபத்திற்குத் தான் பெருமுயற்சிசெய்து லபிக்காததனாலுண் டான வருத்தத்தைக் காட்டினபடியன்றோ.

42. ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ, வேதாந்தாசார்ய வர்யோஹம் விசிஷ்ய விநிவேதயே. அத்வைதிகளின் பிணக்கையறுப்பதற்கு ஒரு குளிகை கொடுத்திருக் கிறேன் * யத்யேதம் யதிஸார்வபௌமகதிதம் * இத்யாதி ச்லோகத்தினால். அதன் உத்த ரார்த்தம் * தத்ரைகத்ர ஜடித்யுபைதி விலயம் தத்தந் மதஸ்தாபநா ஹேவாக ப்ரதமாநஹை துககதாகல்லோல கோலாஹல: * என்பது. சரீராத்மபாவமாகிற ப்ரதான ப்ரதிதந்த்ரத்தை நன்குணர்ந்த ஒரு வித்வான் நிற்குமிடத்தில் எந்த மதக்காரனும் எதிர் நின்று வாய் திறக்க முடியாமல் ஸகலதுர்வாத கோலாஹலமும் பாறிப்பறந்தொழியும்—என்பது அதன் பொருள். இது அன்று முதல் இன்றறுதியாக அநுபவத்திற் காண்பதாகும். இதேபோல * **அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா** * என்கிற ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியொன்றின் மருமத்தையுணரப் பெற்றால் ஸ்வகதஸ்வீகாரவாதம், ப்ரபத்த்யுபாயத்வவாதம், பகவத் க்ருபாஸஹேதுகத்வவா தம் முதலான எந்த நோயும் அணுகாது. * யத்யேதம் யதிஸார்வபௌம கதித மென்கிற ச்லோகம் போலே இதற்கொரு சுலோகம் பண்ணித்தருகிறேன்; கண்ட பாடம் செய்மின்.

लब्ध्वा ज्ञानिनमित्यनर्घफणितिं भाष्याब्धिरत्नायितां यो जानाति यथायथं पटुधियस्तस्यान्तरङ्गे न हि ।
स्वीकारे स्वगतत्वबुद्धिरुदियात् न्यासे च नोपायधीः कारुण्ये न सहेतुकत्वधिषणा - रोगो न कोऽप्युद्भवेत् ॥

(ச்லோ.) அஸதாம் கர்வநிர்வாபணுபதேசேந பூயஸ:,
வேதாந்தாசார்யவர்யோஹம் ஸதர்த்தாந் உதஜீகடம்.

**ஸ்ரீ தேசிகனருளிய அஸத்கர்வ நிர்வாபணத்தில் மூன்றுவது பரிச்சேதம் முற்றிற்று.**

# ப்ரதிவஸ்துபூர்ணத்வே அஸதாம் கர்வநிர்வாபணமான நான்காவது பரிச்சேதம்

43. एकैकस्मिन् वस्तुनि रूपं न समाप्तम् , किञ्चित्किञ्चिदत्रग्रहण आस्ते न तु पूर्णम् ।
इत्याहुर्ये सत्त्वदरिद्रा अवलिप्ता: तेषां गर्वं खर्वयिता वेङ्कटनाथ: ॥

44. உபநிஷத்தானது *அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்று ஸகல பதார்த்தங்களிலும் எம்பெருமான் உள்ளும் புறமும் வியாபித்திருப்பதாக ஓதியுள்ளது. இதில் சில சங்கைகள் தோன்றும்; (எங்ஙனே யென்னில்) அணுவான பதார்த்தங்களில் உள்ளீடாக வ்யாப்தி ஸம்பவிக்க ஔசித்ய மில்லை; அவயவியான பதார்த்தங்களுக்கே உட்புறம் வெளிப்புறம் என்று வழங்கக்கூடு மாதலாலும், நிரவயவமான அணு பதார்த்தங்களைப்பற்ற அங்ஙனம் வழங்க ப்ரஸக்தியில்லாமையாலும் அணுவஸ்துக்களில் எம்பெருமானுக்கு அந்தர்வ்யாப்தி அஸம்பாவிதம். அன்றியும், ஒரு பொருளிலும் எம்பெருமானுக்குப் பரிஸமாப்யவர்த்தித்வம் [அதாவது பரிபூர்ணவ்யாப்தி] கொள்ளவொண்ணுது. ஒரு பதார்த்தத்திலே அவனுக்குப் பரிபூர்ணவ்யாப்தியை அங்கீகரிக்குமளவில் (அதாவது—பகவானுடைய ஸ்வரூபம் ஒன்றிலே பரிஸமாப்தமாயிற்றென்னில்) மற்றொரு வஸ்துவில் வியாபிக்க இயலாதாகையாலே பரிஸமாப்ய வர்த்தனத்தை அங்கீகரிக்கலாகாது—என்றிப்படி சில கலக்கங்கள் எம்பெருமானுடைய அத்புத சக்தியை அறிய கில்லாதார்க்கு ஸம்பாவிதம்.

45. இதைப்பற்றி நான் நியாயஸித்தாஞ்ஜநத்தில் சர்ச்சைசெய்து மேலே விவரித்தவாறு கலக்கங்கொண்ட அஸத்துக்களின் கர்வநிர்வாபணம் செவ்வனே செய்திருக்கிறேன். இதில் கலங்கினுர் தெளியும் வழியை முன்னம் காட்டுகிறேன். சாரீரகமீமாம்ஸையில் * க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்தகோபோவா * என்றும் * ச்ருதேஸ்து சப்த மூலத்வாத் * என்றும் இரண்டு ஸூத்ரங்கள். இவற்றுள் முந்தினது பூர்வபக்ஷ ஸூத்ரம்; பிந்தினது ஸித்தாந்த ஸூத்ரம். இதினின்று தேறின பொருள் என்னவென்றுல், சாஸ்த்ரஸித்தங்களான அர்த்தங்களில் குதர்க்கமூலகமான சோத்யங்களைச் செய்யாமல் சாஸ்த்ரஞ் சொன்ன கட்டளையிலே இசையவேண்டுமென்பதாம்.

46. நான் அச்யுத சதகமென்று ப்ராக்ருதபாஷையில் ஒரு நூல் எழுதியிருப்பது ப்ரஸித்தம். அதில் ஒரு ச்லோகம்—*புரிஸபஹாண ஸரீரோ புவணாணம் ஹோஸி அச்சுஅ உவாயாணம், ணிஅஸங்கப்பஸணாஹோ வஹஸி ணிமித்தத்தணம் வி அப்புஅ ஸத்தீ* என்பது. (இதன் ச்சாயை) *புருஷப்ரதாநசரீர: புவநாநாம் பவஸி அச்யுத உபாதாநம், நிஜஸங்கல்ப ஸநாதோ வஹஸி நிமித்தத்வமப்யத்புத சக்தி:* என்பதாம். ஸகல ப்ரபஞ்சங்களுக்கும் பகவானையே காரண பூதனுகக் கொள்ளுகிறோம். உலகில் ஒவ்வொரு கார்யவஸ்துவுக்கும் மூவகைப்பட்ட காரணங்கள் வேண்டியிருக்கின்றன. 1. உபாதாநகாரணம். 2. ஸஹகாரி காரணம். 3. நிமித்தகாரணம். ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியில் இம்மூவகைக் காரணமும் பகவானேயென்று வேதாந்தங்கள் அறுதியிடுகின்றன. ஒன்றுக்கே மூவகைக் காரணத்வமும் எங்ஙனே பொருந்தும்? உலகில் இப்படியுள்ள ஒரு வஸ்துவையாவது உவமையாக எடுத்துக்காட்ட முடியுமோ? முடியாதே. உலகிற் காண்கிறபடிதானே பகவானிடத்தில் ஸமந்விதமாக வேணும். பரமபுருஷனொருவனே மூவகைக் காரணமுமென்று அஸம்பத்தமாக எப்படிச்